எளிய வாழ்க்கை. By ஹென்றி டேவிட் தோரோ

காந்திஜியின் வரிகொடா இயக்கமும் தோரோவின் சிந்தனையும் - 11.

ஹிந்து ரிஷிகள் - அவர்கள் தவம் பற்றி 19

பொது. 22. ? - 30, 31.

N சேமிப்பு பற்றி - 25-.

கடவுளைத் திருப்பிக் கொடுத்தல் பற்றி 24.

N கடவுளும் - வாழ்க்கையும் : 24

N வாழ்க்கை - 24.

கிழவர்கள் பற்றி. 28.

N - புதுமையும் பழமையும் 27.

மனிதனிடம் தெய்வத் தன்மை ? 25.

N - வரி - 26-27.

N. மரக்கறி உணவு 29-30.

N. நிஜ காரியங்கள் - 32.

N. உண்மையான அறிவு 34

N. தத்துவ ஞானி. 42-43

உடை. 53.

N. காதல் - 9.

N. தனது வாசித்த புத்தகங்கள் பற்றி 11

N. எழுத்தாளன் கடமை 18

N. சொத்தைத் தொலைப்பதே அருமையான காரியம் 20

N பெரியவர்கள் 28-29

N. வாழ்க்கை - உன்னை நீ அறி. 3A

# தோரோவின் வால்டன்
## எளிய வாழ்க்கை

க. நா. சு.
மொழிபெயர்ப்பு

லிபி பிரசுரம்

அடுத்துவரும் மொழிபெயர்ப்புகள்

ஜியார்ஜ் ஆர்வெல்

—மிருகங்கள் பண்ணை : கேலிச் சித்திரம்

ஜியார்ஜ் ஆர்வெல்

—முத்தண்ணு (1984) : பயங்கர நாவல்

வில்லியம் ஸரோயன்

—மனுஷ்ய நாடகம் : நாவல்

விற்பனை உரிமை

ஹிமாலயப் பிரசுரங்கள்

சென்னை-2

# எளிய வாழ்க்கை

ஹென்றி டேவிட் தோரோ

தமிழில்
க. நா. சுப்ரமண்யம்



லிபி பிரசுரம்
தாம்பரம்

# முன்னுரை

1880 முதல் 1920 வரையில் இருந்த தலைமுறைகளில் இந்தியாவில் ஆங்கிலம் படித்து விஷயங்களை அறிந்து கொண்டவர்களுக்கு அமெரிக்கஞானிகள் ஹென்ரிடேவிட் தோரோ,ரால்ஃப் வால்டோ எமர்ஸன் என்கிற இருவருடைய பெயர்களும் மிகவும் பரிச்சயமானவை என்றுதான் சொல்லவேண்டும். மேலை நாடுகளில் இந்தியாவையும் அதன் பண்டைய கலை, இலக்கியச் செல்வங்களையும் பற்றிப் பரவி வந்த அறிவு. கலையின் முன்னணியில் நின்றவர்கள் இருவரும். அமெரிக்க ஆசிரியர்களிலே அவர்கள் இருவரும் இந்தியப் பண்புக்கு ஒத்தவகையில் சிந்தித்து செயல் பட்டார்கள் என்பது பற்றி நம் ஊரில் பலரும் பெருமைப்பட்டார்கள், அவர்களைப் படித்து ஆனந்தித்துப் போற்றினார்கள்.

மோஹன்தாஸ் கரம்சந்த் காந்தி என்கிற மகாத்மாவின் இளமைப்பருவத்தை சிந்தனை வள முள்ளதாக ஆக்கியதில் தோரோவுக்குப் பெரும் பங்கு உண்டு. வரி கொடா இயக்கமும், சாத்வீக எதிர்ப்பும், எளிய வாழ்க்கை மோஹமும் காந்தி யின் மனத்தில் ஊன்ற ஓரளவுக்குக் காரணமாக இருந்தவர் என்று ஹென்ரிடேவிட் தோரோ வைச் சொல்லலாம். அமெரிக்கர்களின் வாழ்க்கை எந்தத் திசை நோக்கிப் போய்க்கொண்டிருந்தது என்பதைத் தெளிவாகப் புரிந்து கொண்டு, அதைத் திருப்ப முயன்ற ஞானிகளில் தோரோ வும் ஒருவர். அவர் முயற்சி அவ்வளாக வெற்றி பெற்றதாகச் சொல்லமுடியாது, எளிய வாழ்வு என்கிற லக்ஷியமே மறைந்துவிட்டது அமெ ரிக்க அடிவானத்திலிருந்து என்று சொன்னாலும் கூட, அமெரிக்க இலக்கியமும் சிந்தனையும் பண் பும் தோரோ என்பவர் இருந்து வாழ்ந்து இயற் றிய நூல்களால் பெரிதும் வளம் பெற்றது என்றே சொல்ல வேண்டும். அவர் நூல்களில் முதன்மையானதாகப் போற்ற வேண்டிய வால் டன் (எளிய வாழ்க்கை) அமெரிக்க வசன இலக்கியத்திலே இந்த நூறு வருஷங்களில் முதன்மையான ஸ்தானம் பெற்றிருக்கிறது என்று சொல்வது மிகையாகாது. சந்தேகத்துக் கிடமில்லாமல் உலக இலக்கியத்திலே முதலிடம் பெற்ற முதல் அமெரிக்க நூல் என்று சொன்னால் கூடத் தகும். பத்தொன்பதாம் நூற்றுண்டில் மனித சிந்தனையை மாற்றியமைத்த நூல்கள் வரி சையிலே முக்கியமான இடம்பெற வேண்டிய நூல்களில் ஒன்று இந்த வால்டன்.

தன்னைச் சுற்றிலும் இருந்தவரை மனிதர்களைக் கண்டு ஐயோ என்று மனம் பதற உணர்ச்சிப் பெருக்குடன் எழுதிய நூல். அதை எந்த விதத்திலும் ஆசிரியருக்கு சாதாரண அளவில் வெற்றி தேடித் தந்த நூல் என்று சொல்ல முடியாது. அதன் முக்கியத்வம் நாளுக்கு நாள் அதிகரித்து வந்து இப்போது அமெரிக்க இலக்கியத்தின் சிகரங்களில் ஒன்று என்றாகிவிட்டது அது.

தனிவழி நடக்க ஆசைப்பட்ட ஒரு அரைப் பைத்தியம் என்று தான் அவரைப் பற்றி எல்லோருமே எண்ணினார்கள். பிழைக்க வழியறியாதவன் என்று எண்ணியவர்கள் கூட இருந்திருக்கலாம், ஆனால் அவர் அமெரிக்க இலக்கியச் செல்வத்தை இந்த அளவுக்கு அபிவிருத்தி செய்வார் என்று கனவிலும் கூட அவரை அறிந்தவர்கள் எண்ணியிருந்திருக்க மாட்டார்கள். தோரோ, எமர்ஸன் இருவரிலே எமர்ஸனுக்குத் தான் அவர்களுடைய ஆயுள் காலத்திலே செல்வாக்கு அதிகமாக இருந்ததாகச் சொல்ல வேண்டும்.

தோரோவின் வாழ்க்கைச் சம்பவங்களை மிகவும் சுருக்கமாக இங்கு சொல்லிவிடலாம், அவர் பிறந்தது 1817 ஜுலை 12. அவருடைய தகப்பனார் சின்னக் கடை முதலாளி. டேவிடின் பிறப்பிற்குப் பிறகு அவர் ஒரு பென்சில் உற்பத்திச்சாலை தொடங்கி அதைச் செவ்வனே நடத்தி வந்தார். வருவாய் அதிகமில்லா விட்டாலும் அதிகச் செல்வாக்குடன் வாழ்ந்த குடும்பம். ஒரு அண்ணன், ஜான் என்பவர் மூலமாக டேவிடுக்கு காலாற நடப்பதிலும், இயற்கையைக்

கவனித்து, புக்ஷி பறவை ஜந்துக்களின் பழக்கங்களை காரியங்களை ஞாபகத்தில் பதிய வைத்துக் கொள்கிற பழக்கமும் ஏற்பட்டது. இயற்கையுடன் ஒட்டி வாழ டேவிட் செய்த முயற்சிகள் இளம்பிராயத்திலேயே தொடங்கி விட்டன என்று தான் சொல்ல வேண்டும். பத்தொன்பதாவது வயது முதலே குறிப்புகள் எழுதி வைப்பது, எழுதியதைத் திருத்தி ஆனந்திப்பது என்றும் டேவிடுக்குப் பழக்கமாகி விட்டது.

மற்றவர்களுடன் ஒத்துப் போகாத வாழ்வு வாழ்வது என்பது டேவிட் வாழ்ந்த சமூகத்திலே கொஞ்சம் மவுசாக இருந்தது. லேசாக ஒரு விஷயத்தில் மட்டும் பலர் தங்கள் தனித்தன்மையைக் காட்ட விழைவார்கள், இந்த தனித்தன்மை டேவிடை அதிகமாகவே பற்றிக் கொண்டு விட்டது, யாருடனும் ஒத்துப்போகிற வழக்கம், எதிலும், அவருக்கு வரவில்லை. தன் வழியைத் தானே அமைத்துக் கொண்டு வாழ வேண்டும் என்பதுடன் நில்லாமல், யாரும் தன்னைப் பின்பற்றி அவ்வழி வரவேண்டும் என்கிற ஞாபகமும் இல்லாதிருந்தது டேவிடுக்கு என்பதை அவர் தனிச் சிறப்பாகச் சொல்லலாம்.

பள்ளியிலும் கல்லூரியிலும் படிக்கும்போது டேவிடைத் தனி மனிதனாக அவன் சக மாணவர்களும் உபாத்தியாயர்களும் அறிந்து கொண்டார்கள், படிப்பதிலும் எழுதுவதிலும் சிரத்தை கொண்ட டேவிட் கல்வி முறைகளைப் பற்றி விசித்திரமான அபிப்பிராயங்கள் உடையவராக இருந்தார், "இங்கே அறிவின் கிளைகள் எல்லாம் போதிக்கப்படுகின்றன — வேர்களைத் தான்

மறந்து விடுகிறுர்கள் ") என்றுர் அவர் ஒரு தரம். சுதந்திரத்தையும் எளிமையையும் எல்லாவற்றி லும் நாடிய அவர் மனம் எப்போதும் எதையும் பற்றித் தீவிரமாகச் சிந்திக்கப் பழகிக் கொண் டிருந்தது. (உபாத்தியாயராக அவர் வேலை பார்த்த இடத்தில் குழந்தைகளை அடித்துத் தான் பாடம் சொல்லித் தர வேண்டும் என்று அதிகாரிகள் வற்புறுத்திஞர்கள். அதற்கு மனமில்லாத டேவிட் ஒருநாள் எதிர்ப்பட்ட ஐந்தாறு குழந் தைகளைப் பிரம்பால் காரணமில்லாமலே வெளுத்து வாங்கிவிட்டு வேலையை ராஜிநாமாச் செய்துவிட்டார்.) தனியாகத்தன் சகோதரனுடன் டேவிட் தொடங்கிய பள்ளிக்கூடமும் நடந்த வரையில் வெற்றிகரமாக நடந்ததே தவிர அதிக நாள் நீடிக்கவில்லை.

1839-ல் தோரோக்களுடன் தங்க வந்த ஒரு பெண்ணிடம் ஜானும் டேவிடும் தங்கள் மனத் தைப் பறி கொடுத்து விட்டார்கள். (" காதலுக்கு, மேலும் காதல் என்பதைத் தவிர வேறு பரிகார மில்லை ") என்று தன் டயரியில் எழுதியடேவிட், தன் சகோதரன் ஜானை அந்தப் பெண் காதலிக்க வில்லை என்று தெரிந்து, கொண்ட பின்தான் தன் காதலைத் தெரிவித்து எழுதிஞர். அவள் டேவிடையும் காதலிக்கவில்லை என்று தெரிந் ததும், டேவிட் அவளைப் பற்றி மறந்துவிட்ட தாகத் தான் தோன்றியது. ஆஞல் அவன் அதற் குப் பிறகு காதல் கல்யாணம் என்பது பற்றிச் சிந்தித்ததாகவே தெரியவில்லை, தன் வாழ்க்கை வழிகள் தன்னை மணக்கிற பெண்ணுக்கு ஏற்கா மல் இருந்து விட்டால் என்ன பண்ணுவது என்

கிற பயமே அவரை ஆயுள் பூராவும் பிரும்மசாரி யாக இருக்கத் தூண்டியிருக்க வேண்டும் என்று சொல்லலாம், பெயரளவில் மட்டும் தன் தனி வழி தனி வழியாக இருந்தால் போதாது என்று அவர் எண்ணினுர் போலும்.

1841-ல் அவருடைய சகோதரன் இறந்தது அவரைப் பெரிதும் பாதித்தது என்று தான் சொல்லவேண்டும். சற்றேறக் குறைய அதே சமயத்தில் எமர்ஸனும் தோரோவும் நண்பர் களானுர்கள். எமர்ஸன் தன்னைவிடத் தீவிர மாகச் சிந்திக்கத் துணிந்த தோரோவிடம் கடைசி வரையில் பற்றுக்கொண்டிருந்தார். பல சமயங்களில் தோரோவுக்குப் பிரியமான தோட் டக்காரன் வேலையில் அவரை வைத்துத் தன் வீட்டிலேயே இருக்க வசதிகள் செய்து தந்தார். எமர்ஸனின் மனைவியிடமும் குழந்தைகளிடமும் கலப்பற்ற அன்பு கொண்ட டேவிட் அதனுல் தன் வாழ்க்கை வளம் பெற்றதாகவே கருதினுர். எதிலும் விட்டுக் கொடுக்க மனமற்ற டேவிட் தோரோவை வீட்டில் வைத்துச் சமாளிப்ப தென்பது எமர்ஸனுக்கும் சிரமமான காரியமாகத் தான் இருந்திருக்க வேண்டும். ஆனுல் அந்தச் சிரமத்தைப் பாராட்டி நட்புக்குப் பங்கம் விளை வித்துக் கொள்ளவில்லை எமர்ஸன். தன் நண் பனின் தரத்தை உணர்ந்து அவர் உலகில் முன் னேற அவர் செய்து தந்த முயற்சிகள் அவ்வள வாகப் பலிக்கவில்லை என்று தான் சொல்ல வேண்டும். முதல் புஸ்தகத்தைச் சொந்தச் செல வில் வெளியிட (1849-ல்) தோரோவுக்கு ஏற் பாடு செய்து தந்ததும் எமர்ஸன் தான். அந்த

முதல் நூல் வெற்றி தர வில்லை தோரோவுக்கு, "என்னிடம் இப்போது பெரிய வாசகசாலை இருக்கிறது, அதில் உள்ள புஸ்தகங்கள் எல்லாம் என் ஒரே நூலின் பிரதிகள் தான்—விற்காத பிரதிகள். அதனால் என்ன ?" என்று தன்டையரியில் தோரோ எழுதினார்.

பல வருஷங்களாகவே தனியாக ஏரிக் கரையில் வீடு கட்டிக் ,கொண்டு வசிக்க வேண்டுமென்கிற ஆசை யுண்டு தோரோவுக்கு. அந்த ஆசை ஜுலை 4, 1845 முதல் ஸெப்டம்பர் 6 1847 வரை இரண்டு வருஷங்கள் நிறைவேறிற்று. வால்டன் ஏரிக்கரையில் வசித்த அந்த இரண்டு வருஷங்களையும் விவரிக்கும் வால்டன் எனும் நூலில் சில பகுதிகளை வால்டன் ஏரிக் கரையில் இருக்கும் போதே எழுதத் தொடங்கி விட்டார் தோரோ. அதைத் தனிப் புஸ்தகமாக 1849-ல் எழுதத் தொடங்கினார். 1854-ல் அது பிரசுரமாயிற்று—இந்தத் தடவை ஆசிரியர் செலவில் அல்ல. முதற்பதிப்பு இரண்டாயிரம் பிரதிகள் விற்பனையாயின, இரண்டாவது பதிப்பு தோரோ இறந்த பிறகு தான் வெளிவந்தது.

1848-ல், புரட்சி மனப்பான்மையுடன், எமர்ஸன் வீட்டில் வசிக்கும் போது தோரோ எழுதிய "ஒத்துழையாமை" என்கிற கட்டுரை பல சபைகளில் பிரசங்கம் செய்யப்பட்ட ஒரு பேச்சு. அது ஒரு கட்டுரையாக 1849-ல் வெளிவந்தது. வரி கொடாது சாத்வீக முறையில் ஒரு சர்க்காரை எதிர்த்து வெற்றி கொள்வது பற்றி தோரோ எழுப்பிய சிந்தனைகள் சற்றேறக் குறைய நூறு வருஷங்களுக்குப் பிறகு மகாத்மா

காந்தியின் தலைமையில் இந்தியாவுக்குச் சுதந்திரம் வாங்கித் தர இருந்தன என்பது கவனிக்கத் தக்க விஷயம். டால்ஸ்டாயின்சிந்தனைகளை காந்தி ஓரளவு பின்பற்றினார் என்பதை அறிந்த இந்தியர் கள் பலருக்கு தோரோவின் சிந்தனைகளும் காந்தி யின் மனத்தைச் சமைப்பதிலே பங்கு கொண் டன என்பது சரிவரத் தெரியாது என்று தான் சொல்லவேண்டும். இந்தக் கட்டுரையை தோரோ இலக்கியத்திலே மிகவும் சிறந்தத இடம் பெற்றதாகச் சொல்ல வேண்டியது அவ சியம்.

1849-ல் தான் அவருடைய சகோதரியும் இறந்தாள். ஆசிரியராக தோராவைப் பல பத்திரி கைகள் அணுகிக் கட்டுரைகள் வாங்கிப் பிரசுரித் தன. பல சபைகளில் அவர் தன் சிந்தனைகளை விளக்கமாக எடுத்துப் பிரசங்கம் செய்தார். நீக்ரோ அடிமைகளை விடுவிக்கிற முயற்சிகளை யும், அதிகாரிகள் இழைக்கும் அநீதிகளைத் திருத் தும் முயற்சிகளிலும் தோரோ வெகுவாக ஈடு பட்டார். வரிகொடுக்க மறுத்து அவர் ஒரு தரம் ஜெயிலுக்குப் போயிருக்கிறார். அதிகாரிகளையும் சகோதர அறிஞர்களுடைய அபிப்பிராயத்தையும் எதிர்த்து அவர் தீவிரமாக ஜான் ப்ரௌன் சார் பில் பேசினார். அடிமைகள் விடுதலையை ஆத ரித்து அவர் பேசிய ஆணித்தரமான பேச்சுகள் அமெரிக்க இலக்கியத்திலே மிகவும் சிறப்பான பக்கங்கள் ஆகும்.

"வால்டன்" என்கிற புஸ்தகம் வெளிவந்த தற்குப் பிறகு தோரோவின் ஆசிரிய நண்பர்களும் அறிஞர் நண்பர்களும் அதிகரித்தனர். ஸர்வேய

ராகவும், மற்றபடி இயற்கையைக் கணித்து எழு துபவராகவும் அவர் பல நண்பர்களுடைய அபி மானத்துடன் (மே 6-ந் தேதி) 1862-ல் காலமா ஞர். இடையில் அவர் எழுதிய பல கட்டுரைகள் சிந்தனையாளராகவும், இயற்கையை ஒட்டிய விஞ்ஞானியாகவும் அவர் பெயரை நாடெங்கும் பரவச் செய்தன.

(2)

தன் கையாலேயே இரண்டு வருஷங்கள் தனியாக ஒரு ஏரிக் கரையில் குடிசை கட்டிக் கொண்டு வசித்ததில் என்ன ஆச்சரியம் வந்து விட்டது—என்ன அதிசயம் நிகழ்ந்துவிட்டது? அதை இவ்வளவு பிரமாதப் படுத்துவானேன் என்று சிலர் கேட்கலாம். பிரமாதம் என்று ஒன் றுமில்லை தான்—இதைத் தவிர. எல்லோரும் சாதாரணமாக எளிய வாழ்க்கை என்று சொல்லி விட்டு நகர்ந்துவிடுவதை ஒருவர் செய்து காட் டிஞர். அது மட்டுமல்ல. அந்த எளிய வாழ்க் கையைப்பற்றிய தன் சிந்தனைகளையும் அனுபவங் களையும் பூரணமாக மிகவும் நல்ல நடையில் எழுதி வைத்திருக்கிறுர். அதுதான் விசேஷம். சொல்லிக் காட்டுவதைவிடச் செய்து காட்டுவது மிகவும் உபயோகமான காரியம் என்பதினுல் தான் 'வால்டனி'ன் தரத்தைப் பன்மடங்காக மிகைப்படுத்தியே வாசகர்கள் வாசித்து வந்திருக் கிறுர்கள். தோரோவுக்குப்பிரியமான கீழை நாட்டு ஞானிகள் போலவே, அவர் சிந்தனைகளும் அவர் அனுபவத்தால் வளம் பெற்றன.

வால்டனில் மொத்தம் பதினெட்டு அத்தி யாயங்கள் இருக்கின்றன. ஒரு சில வெறும் வர்

ணைகள் தான்: ஒரு சில விவாத தோரணையில் விஷயத்தை எடுத்துச் சொல்லி விளங்கவைக்கிறன ஆரம்பம் முடிவு என்று சொல்லும்படியாக, ஏதோ ஒரு முடிவுக்குப் போய்த்தான் ஆக வேண்டும் என்கிற நினைப்புடன் எதுவும் எழுதப்படவில்லை. ஒரு விஷயத்தை எடுத்து அதைப் பற்றிச் சிந்தனைகளின் எல்லையை எட்டி விட்டுத் தான் வேறு ஒரு விஷயத்துக்குப் போவது என்று எழுதினார் டேவிட் தோரோ. அவர் பாட புஸ்தகம் எழுதவில்லை. அதுமட்டுமல்ல: இயற்கையின் காட்சிகளை, மிருகங்களை விஞ்ஞான ரீதியில் நுணுகி அலசியும் எழுதவில்லை. மனம் போன படிச் சிந்தனை வேகத்துடன், விவரமாக எழுதினார். இவ்வளவையும் தனக்கே உரித்தான. அழுத்தமான, எளிய நடையில் எழுதினார்.

நான்கு தனித் தலைப்புகளில் அவர் சிந்தனைகளைப் பிரிக்கலாம். (1) இன்றைய மனிதர்கள் நம்பிக்கையற்று மேலெழுந்தவாரியான அசட்டு வாழ்வு வாழ்கிறார்கள். (2) இந்த வாழ்க்கை வியர்த்தமாக இருப்பதற்குப் பொருளாதார அடிப்படைகளே காரணம். (3) இயற்கையோடிசைந்த வாழ்வு பூரணமானது என்பது மட்டுமல்ல—அது எல்லோருக்குமே சாத்தியமானது. (4) மேலான விதிகள் பலவற்றை மனிதன் அங்கீகரித்து அவற்றின்படி வாழ்ந்தால்" வாழ்வு சீர்ப்பட்டுப் போகும். மனம் போனபடி, விவரித்துப் பேசுகிற தோரணையில் எழுதப்பட்டுள்ள வால்டனின் இந்த நாலு பின்னல்களும் தெளிவாகவே காணக்கிடக்கின்றன. பாட புஸ்தகமாக, வரிசைப் படுத்தாமல், தோன்றுவதைத்

தோன்றுகிறபடிச் சொல்கிற தோரணையில் எழுதப்பட்டிருக்கிற வால்டனின் வார்த்தைகள் படிக்கும் எவரையும் கவராமல் இருக்காதென்பது நிச்சயம். தன் வாசகனைத் தன்னுடன் வழி நெடுக அழைத்துச் சென்று விடுகிறார் தோரோ.

அதைத் தன் சொந்த சின்ன விஷயமாகவும், அதே சமயம் உலகையே மாற்றி அமைக்கக் கூடிய ஒரு பெரிய அனுபவமாகவும் மாற்றி மாற்றிச் சொல்கிற தோரோவின் சக்தியை யாரும் வியக்காமல் இருக்கமுடியாது. 'என்னைக் கட்டிப் போடாதே, கேள்' என்று சொல்கிற தோரணையில் அவர் இஷ்டப்படி பக்ஷி பறவைகள் ஜந்துக்கள், மிருகங்கள், ஜலம், ஐஸ் எல்லாம் பற்றி எழுதித் தீர்த்து விடுகிறார். இயற்கை யன்னையின் காட்சிகளைப் பூரணமாக அறிந்து அனுபவித்து வெளியிடுவதில் தோரோவுக்கிருந்த திறமை அலாதியானது; பிரமிக்கச் செய்ய வல்லது. அவர் இந்த நூலில் விவரிக்கிற இரண்டொரு மனிதர்களையும் தனிப் பாத்திரங்களாக உருவகப்படுத்தித் தந்திருக்கிறார் என்றுதான் சொல்ல வேண்டும்.

கற்பனையும் அனுபவமும், நடையும் சிந்தனையும் பின்னித் தருகிற நூல் வால்டன் (எளிய வாழ்க்கை.) இதை நூறு வருஷங்களுக்கும் அதிகமாக மக்கள் ஒரு சிறந்த நூலாகப் போற்றிப் படித்து வந்திருக்கிறார்கள். டாண்டேயின் மஹாகாவியம் (தெய்வநாடகம்) ஒரு வழியில் எவ்வளவு சிறந்த நூல் என்று சொல்கிறோமோ அவ்வளவு சிறந்த நூல் இந்த 'வால்டனும்.' வழி தான் சற்று வித்தியாசம். வாழ்க்கையில் போலவே தன் இலக்கியத்திலும் தனி வழி கண்

டவர் தோரோ. உலக இலக்கியத்தில் வால்டன் போன்ற வேறு ஒரு நூல் கிடையாது என்பது ஒப்புக்கொள்ள வேண்டிய விஷயம்.

(3)

**நா**ன் முப்பது வருஷங்களாகப் படித்து அனுபவித்து வந்திருக்கும் இந்த நூலை இப்போது தமிழில் மொழி பெயர்த்துத் தருவதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது பற்றி எனக்கே பெருமையாகத்தான் இருக்கிறது. அதைச் சாத்தியமாக்கித் தந்தவர்களுக் கெல்லாம் என் நன்றி.

அத்துடன் இந்த மொழி பெயர்ப்பைப் பற்றியும் ஒரு வார்த்தை கூறுவது அவசியமாகிறது. பதினெட்டு அத்தியாயங்களில் இடமில்லாத காரணத்தினால் எட்டு அத்தியாயங்களை விட்டு விட வேண்டியதாகி விட்டது. இடம் பெற்ற கட்டுரைகளிலும் கூட முதல் இரண்டையும் கடைசியையும் தவிர மற்றவற்றை ஓரளவு சுருக்கியே தரவேண்டியதாக ஏற்பட்டு விட்டது. விட்டுப்போன அத்தியாயங்களையும் சேர்த்து இரண்டாவது பதிப்பைச் சாத்தியமாக்குவது தமிழ் வாசகர்கள் பொறுப்பு.

இந்த நூல் வெளிவர எனக்குப் பெரிதும் உதவிய கவிஞர் "சாலிவாஹனனுக்கு" எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

க. நா. சுப்ரமண்யம்

# பொருளாதாரம்

பின்வரும் பக்கங்களில் பெரும்பகுதியை நான் எழுதியபோது, காட்டில், தனியே ஜனசஞ்சாரமற்ற இடத்திலே, வால்டன் குளத்தின் கரையிலே என் கையாலேயே வீடு கட்டிக்கொண்டு வசித்துவந்தேன். வால்டன் குளம் மாஸாசூஸட்ஸ் பிரதேசத்தில், கான்கார்டு நகரில் இருக்கிறது. என் வீட்டுக்கு அண்டைவீடு ஒரு மைலுக் கப்பால்தான் உண்டு. அந்த வீட்டிலே நான் சரியாக இரண்டு வருஷங்களும் இரண்டு மாதங்களும் வசித்தேன். அந்தக் காலம் பூராவும் நான் என் கை யாலேயே உழைத்துச் சம்பாதித்துச் சாப்பிட்டேன். இப்போது நாகரிகமான (அதாவது அப்படிச் சொல்லப்படுகிற) வாழ்க்கையைத் தாற்காலிகமாக நடத்திவருகிறேன்.

என் காரியங்களை துருத்தலாக நான் வாசகர்களின் கவனத்துக்குக் கொண்டுவர விரும்பவில்லை. எனினும் என்னுடன் இப்போது நகரில் வசிப்பவர்களில் பலர் என்னுடைய அந்த வால்டன் வாழ்க்கையைப் பற்றிப் பல கேள்விகள் கேட்கிறார்கள்; சம்பந்தா சம்பந்தமில்லாத கேள்விகள். அசந்தர்ப்பமானவை என்று கூடப் பலர் எண்ணக்கூடும். ஆனால் அப்படி நான் எண்ணவில்லை. சாப்பிட எனக்கு என்ன கிடைத்தது என்று சிலர் கேட்கிறார்கள். தாள முடியாத தனிமையாக யில்லையா அது என்கிறார்கள். எனக்குப் பயமாக இருந்ததில்லையா என்று கேட்கிறார்கள். வேறு சிலர் நான் உழைத்துச் சம்பாதித்ததில் எவ்வளவு தான தர்மம் செய்தேன் என்று அறிந்து கொள்ள ஆசைப்படுகிறார்கள். வேறு சிலர்—அவர்கள் நிறைய குழந்தை குட்டிகள் உள்ளவர்கள்—நான் எத்தனை

ஏழைக் குழந்தைகளைப் போஷித்து வளர்த்தேன் என்று அறிந்து கொள்வதில் அக்கறை காட்டுகிறார்கள். என் விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்வதில் ஆர்வமே யற்றவர்கள் என்னை மன்னிக்கவேண்டும்—ஏனெனில் இந்தப் புஸ்தகத்தில் இம்மாதிரியான பல கேள்விகளுக்குத் தான் பதிலளிக்க **நான்** முயன்றிருக்கிறேன். பல புஸ்தகங் களில், பெரும்பாலும் **நான்** என்பதை ஒதுக்கி விட்டுத் தான் எழுத முயலுகிறார்கள். இந்த நூலில் **நான்** என்பதை ஒதுக்க நான் முயலவில்லை; வைத்துக்கொள்ளவே முயன் றிருக்கிறேன். வார்த்தையிராதே தவிர மற்ற எல்லா நூல் களிலும் நான் என்கிற ஆணவம் தெளிவாகவே காணக் கிடக்கும்—இங்கும் அப்படியே, சாதாரணமாக அதை நாம் கவனிப்பதில்லையே தவிர, எப்போதுமே பேசிக் கொண்டிருப்பது **நான்** தான். இந்த என் **நானை** நான் அறிந்தது போல வேறு யாரையாவது அறிந்திருந்தால் வேறு யாரையாவது பற்றிப் பேச எனக்குத் துணிச்சல் வரலாம்; ஆனால் அந்த அறிவு எனக்கில்லை. துரதிருஷ்ட வசமாக என் அனுபவம் மிகவும் குறுகியதாக இருப்பதால் வேறு யாரையும் பற்றி என்னால் பேச இயலாமல் இருக் கிறது. (தவிரவும், 'ஆரம்பத்திலோ முடிவாகவோ ஒவ் வொரு எழுத்தாளனும் தன்னைப் பற்றிய எளிய உண்மை யான சரித்திரத்தைச் சொல்லவேண்டியது அவன் கடமை என்றே நான் எதிர்பார்க்கிறேன்).(வெளியூர் போனவன் வீட்டுக்கு சுவாரசியமான மேலெழுந்தவாரியான விஷ யங்கள் நிறைந்த கடிதங்கள் எழுதுவதுபோல எழுதி விடுபவனை எழுத்தாளன் என்று நான் லேசில் ஒப்புக் கொள்ளமாட்டேன். தன்னைப் பற்றி எழுதாமல் பிறரைப் பற்றி மட்டும் வழ வழ வென்று எழுதி விடுகிறவன் இந்த உலகில் அல்ல—வேறு எந்த உலகிலோ தான் வசிக்கிறான் என்று சொல்லவே எனக்குத் தோன்றுகிறது.) இந்த நூலை நான் ஏழை **மாணவர்களின்** உபயோகத்திற்கென்றே

எழுதியதாகவும் வைத்துக் கொள்ளலாம். மற்றபடி எனக்கேற்படுகிற வாசகர்கள் அவரவர்களுக்கு உகக்கும் பகுதிகளை ஏற்றுக்கொள்ளலாம். சட்டையைப் போட்டுக் கொள்பவன் போதாத சட்டைக்குள் உடம்பையும் கைகளையும் திணித்துக் கொண்டு தையல் விட்டுப் போகும்படிச் செய்யமாட்டான் என்று எதிர்பார்ப்பது தவருகாது. ஏற்பவனுக்கு இது தக்க பலன் தரும் என்றே தான் எண்ணுகிறேன்.

சீனுக்காரர்களையோ, ஸாண்ட்விச் தீவுக்காரர்களையோ பற்றி எதுவும் சொல்ல நான் விரும்பவில்லை. இதை வாசிக்கிற, உங்களையே பற்றித் தான் கொஞ்சம் சொல்ல விரும்புகிறேன் நான். உங்கள் வாழ்க்கை நிலைமை, அதன் தரம், முக்யமாக அதன் வெளித்தோற்றம் அல்லது பகட்டு இது பற்றித்தான் நான் சொல்ல விரும்புகிறேன். இந்த உலகில், இந்த நகரில், உங்கள் வாழ்வு இவ்வளவு மோசமாக இருக்க வேண்டியது அவசியமா; அதைச் சீர்திருத்தி மேன்மையுறச் செய்வது சாத்தியமல்லவா என்று ஆராய நான் விரும்புகிறேன். கான்கார்டு நகருக்குள்ளே நான் ஏராளமாகப் பிரயாணம் செய்து பார்த்திருக்கிறேன்; கடைகளில், காரியாலயங்களில், வயல் வெளிகளில், நகர வாசிகள், ஆயிரக்கணக்கான விசித்திரமான வழிகளில் கோர தவம் செய்கிருர்கள் என்று எனக்குப் படுகிறது. நான் எத்தனையோ விதமான கோர தவங்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்—பிராம்மணர்கள் நாலு பக்கங்களிலும் தீ மூட்டி நடுவில் உட்கார்ந்து சூரியனை விட்டுக் கண்களை எடுக்காமல் தவம் செய்வார்களாம்; அக்கினி குண்டத்துக்கு மேலே, தலை கீழாகத் தொங்குவார்களாம்; பின் பக்கம் திரும்பி அடிவானத்தைப் பார்த்தபடியே பல நாள்—"கழுத்தில் முறுக்கேறி, திரவபதார்த்தங்கள் தவிர வேறு எதுவும் உள்ளே

செல்லாது என்று ஏற்பட்டு விடுகிறவரையில்''—ஜலத்தில் நிற்பார்களாம்; மரத்தின் வேருடன் தங்கள் உடம்புகளை சங்கிலிகொண்டு பிணைத்துக் கொண்டு ஆயுள் பூராவும்அப் படியே இருப்பார்களாம்; விசாலமான சாம்ராஜ்யத்தின் விஸ்தீரணமான தெருப் பரப்புகளை தங்கள் உடல்களால் உருண்டு அளப்பார்களாம், நெளியும் புழுக்களைப்போல, ஆயுள் பூராவும் நிமிரவே நிமிராமல்; உயரமான தூணின் மேல் ஏறி ஒற்றைக்காலில் நின்று கடும்தபஸ் செய்வார் களாம்.) இவையெல்லாம்கூட என் கான்கார்டு நகர வாசி களின் தவங்களுடன் ஒப்பிடும்போது விசித்திரமற்று விடுகின்றன. அதையெல்லாம் நம்பினாலும் நம்பலாம்—ஆனால் இதை நம்ப முடியாது போலிருக்கிறது. தினம் பார்த்தேன்-அதனால் நம்பத்தானே வேண்டும் இருக்கிறது. நகரத்தில் என்னைச் சுற்றியுள்ளோர் ஏற்றுக்கொள்கிற தினசரிக் காரியங்களுடன் ஒப்பிடும்போது, ஹெர்குலி ஸின் பன்னிரண்டு அற்புத வீரச்செயல்களும், அற்புதமும் வீரமும் இழந்துவிடுகின்றன. தவிரவும் அவை பன்னி ரண்டு தானே—எப்படியும் முடிவு பெறவேண்டியவை தான். இன்றைய நகரவாசிகள் செய்கிற காரியங் களுக்கு முடிவேது, ஒய்வு ஏது! இவர்களால் எந்த ராக்ஷஸனின் கொட்டத்தையும் அடக்க முடியாது; ஒரு வேலையையும் பூர்த்தி செய்ய முடியாது. ஹைட்ராவின் தலைகளை வெட்ட வெட்ட அந்த இடத்தில் வேறு தலை முளைக்காத வண்ணம் தீயிட்டுச் சுட்டுவர ஹெர்குலிஸிக்கு நண்பன் ஐயோலஸ் இருந்தான்—இந்த நகர வாசிகளுக்கு நண்பர்கள் கிடையாது, ஒரு தலைபோனதும் அந்த இடத் தில் இரண்டு தலைகள் முளைக்கின்றன.

( நகரவாசிகளில் சில வாலிபர்களைப் பார்க்கிறேன். துரதிருஷ்டவசமாக அவர்களுக்கு பிதுரார்ஜிதமாக நிலங் களும், வயல்களும், வீடுகளும், களஞ்சியங்களும், ஆடு

மாடுகளும், பண்ணைக்குத் தேவையான ஆயுதங்களும் கிடைத்துவிட்டன. இவை கிடைப்பதில் சிரமம் ஒன்று மில்லை; சுலபமான காரியம்தான். ஆனால் இவற்றைத் தொலைத்து முழுகுவதுதான் சிரமசாத்தியமான காரியம்.) காட்டுவெளியிலே பிறந்து, ஓநாயிடம் பால் சாப்பிட்டு வளர்ந்திருந்தார்களானாலும் கூட இவர்களுக்குத் தீக்ஷிண்யம் போதாது— தங்கள் வாழ்க்கைவழி எப்படிக் கிடக்கிறது என்று கண்டு கொள்ள! எந்த வயலில் அவர்கள் எப்படி வேலை செய்ய வேண்டும் என்று அவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பது யார்? பூமிக்கு அவர்களை அடிமைப் படுத்தியது யார்? அவர்கள் எப்படி அறுபது ஏகரா நிலத்தையும் சாப்பிட முடியும்? மனிதன் ஆழாக்குக்கும் அதிகமாகக் கொறிக்கக்கூடாது என்று விதிக்கப்பட்டிருக்கும்போது—அறுபது ஏகராவா! பிறந்தவுடனேயே மனிதர்கள் தங்கள் சவக்குழிகளைத் தோண்டிக் கொள்ளத் தொடங்க வேண்டும் என்பது ஏன்? இதையெல்லாம் முன்னால் விரட்டியடித்துக் கொண்டு, அவர்கள் மனிதர்களின் முழுவாழ்வு வாழ்ந்து, தங்களால் ஆகிற மட்டும் சமாளிக்க வேண்டும். தாங்க முடியாத சுமையைச் சுமக்கும் சுமைதாங்கியாக, நசுங்கி விழுந்து, நடை தள்ளாட வரும் எத்தனை நித்தியமான அழியாத ஆத்மாக்களைக் கண்டிருக்கிறேன் நான்! வாழ்க்கை வழியிலே தள்ளாடித் தள்ளாடி மாய்கிறார்கள் அவர்கள். எழுபத்தைந்துக்கு நாற்பது அடி உள்ள களஞ்சியம் என்றால் அது லேசானதல்ல. அவர்களுடைய லாயங்களை ஹெர்குலிஸினால் தான் சுத்தம் செய்ய முடியுமா? நூறு ஏகரா நிலம்—பயிர் செய்தது, மரங்களடர்ந்தது, ஆடுமாடுகளுக்குத் தீவனம் தருவது! என்ன சுமை! என்ன சுமை! இப்படி நிலம் படைக்காதவர்கள் இருக்கிறார்கள். இந்த மாதிரி அநாவசியமான பிதுரார்ஜிதமான தப்ப முடியாத சுமை எதுவும் அவர்கள் முதுகை ஒடிக்கவில்லை. அவர்கள்

பாடுபடுவதெல்லாம் சில கன அடிகள் உள்ள ஊனை அடக்கி வளர்ப்பதற்குத் தவிர வேறு அல்ல!

ஆனால் மனிதன் ஒரு தவறான எண்ணத்தில் சங்கடப் படுகிறான். மனிதனில் சிறந்த பகுதி சீக்கிரமே மண்ணில் மறைந்து, பயிருக்கு எருவாகிறது. விதியென்று சொல்லலாமா? அல்லது அவசியம் என்று சாதாரண மாகச் சொல்லலாமா? அவர்கள் பாச்சைக்கும் புருவுக் கும், துருவுக்கும், கரையானுக்கும் இரைதேடித் தருகிற காரியங்களிலே—ஐசுவரியங்கள் தேடிச் சேமிக்கிற காரியங் களிலேதான் பூராவும் ஈடுபட்டிருக்கிறார்கள். அல்லது அவர்கள் சேமித்ததைத் திருடர்கள், உள்புகுந்து, திருடிக் கொண்டு போகமுடியும். துருவோ, திருடனோ எதற்கு இரையானால் என்ன! போனது போனது தான்! வாழ்க்கையின் கடைசியிலேயே தோன்றும்—நடுவில் தோன்றவிட்டாலும்—இது என்ன முட்டாள் தனமான வாழ்க்கை என்று! ட்யூகேலியனும் பிர்ராவும் கற்களைப் பொறுக்கித் தங்களுக்குப் பின்னால் திரும்பாமல் எறிந்து மனிதர்களை உற்பத்தி செய்தார்களாம். அதனால்தான் "நம்குலத்தினர் கல் மனத்தினராயும், கவலையும் கஷ்ட மும் விரும்டிகிறவராய், உடலும் கல்லாக ஆசைப்பட்டு" நிற்கிறார்கள் என்று கவி கணீரென்று சொல்கிறான். தவறு செய்யும் ஒரு எதிர்கால ஞானியின் குறும்புத்தன மான வார்த்தைக்குப் பயந்து பணிந்து, திரும்பிப்பாராமல் கற்களைப் பொறுக்கிப் பின்னால் எறிந்து மனிதர்களைச் சிருஷ்டி செய்த உலக மாதா பிதாக்களைப் பற்றி இதற்கு மேல் சொல்லத் தேவையில்லை.

நமது நாட்டிலே நமக்கு ஓரளவு சுதந்தரம் இருக் கிறது என்றுதான் சொல்ல வேண்டும். இருந்தும் இங்குள்ளவர்களில் பெரும்பாலோர் தவறுதலாகவும் அறியாமையினாலும் சில்லறைக் கவலைகளிலும் வாழ்வின்

அநாவசியமான கரடுமுரடான காரியங்களில் ஈடுபட்டிருப்பதால் நேர்த்தியான பலன்கள் பலவற்றை அவர்களால் அனுபவிக்க முடிவதில்லை. அளவுக்கு மிஞ்சி உழைத்ததால் அவர்களுடைய விரல்கள் விகாரமாக இருக்கின்றன, நடுங்குகின்றன. உண்மையில், உழைப்பவன் நாளுக்கு நாள் உண்மையாக இருப்பது என்பதற்கு சாத்தியமோ பொழுதோ இல்லாமலே போய்விடுகிறது; மனிதர்களுடன் மனிதனுக உறவாட அவனுக்கு வசதியில்லாது போய்விடுகிறது. சந்தையிலே அவன் வேலைக்கு மதிப்பீடு குறைந்து விடுகிறது. யந்திரமாக உழைப்பதற்குத் தவிர வேறு எதற்கும் அவனுக்கு நேரம் இருப்பதே கிடையாது. தன் அறிவைப் பயன்படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டபின் அவன் தன் அறியாமையை ஞாபகத்தில் வைத்துக் கொள்வது சாத்தியமில்லை. அந்த அறியாமை அவன் வளர்ச்சிக்கு அவசியமானதாக இருக்கிறது என்று அவன் ஏற்றுக் கொள்ள முடியாது அவனைக் குற்றம் சாட்டி அவனிடம் தப்புக் கணக்கு படிக்குமுன் நாம் அவனுக்கு இனுமாகச் சில சமயங்களிலாவது உணவும் உடைகளும் அளிக்க வேண்டும்; நம் மருந்துகளையும் மதுவர்க்கங்களையும் தந்து அவனுக்குத் தெம்பூட்டி விட்டுத்தான் அவனைப் பற்றி நாம் முடிவுகூற வேண்டும். (நமது சுபாவத்துக்கு உரியதான நல்ல குணங்களில் நேர்த்தியானவை எல்லாம், சரியாகப் பழுத்த பழங்களின் பளபளப்பைப்போன்றவை; வெகு ஜாக்கிரதையாக இருந்து நாம் அந்த மெருகு அழிந்துவிடாமல் காப்பாற்ற முடியும்; முரட்டுத்தனமாகக் கையாளுவதால் அவற்றின் தன்மையே மாறிவிடும் என்றுதான் சொல்ல வேண்டும். ஆனல் நாம் நம்மிடையே ஒருவருடன் ஒருவர் பழகும்போது முரட்டுத்தனமாகத்தான் பழகுகிறோம்; மெருகு அழிந்துவிடப் போகிறதே என்று பயந்து லேசாகப் பழகுவதில்லை.)

உங்களில் சிலர் மிகவும் ஏழைகள் என்பது எல்லோருக்கும் தெரியும்; ஒரு சிலர் வாழ்க்கை நடத்துவதற்கே கஷ்டப்படுகிருர்கள்; ஒரு சிலர் மூச்சுவிடக்கூடத் திணறுகிருர்கள், சொல்லப்போனுல், என்பது எங்களுக்குத் தெரியும். இந்தப் புஸ்தகத்தைப் படிக்கிறவர்களில் சிலர் சாப்பிட்ட விருந்துகளுக்கெல்லாம் பணம் கொடுத்துத் தீர்த்துவிட முடியாதவர்கள் என்பது எனக்குத் தெரியும், வாங்கியணிந்து தேய்ந்து கிழிந்துக் கொண்டிருக்கிற கோட்டுகளுக்கும் பூட்ஸுகளுக்கும் பூராப் பணமும் தரத் திண்டாடுபவர்கள் பலர் என்பது எனக்கும் தெரியும். நீங்கள் திருடி இதைப் படிப்பதே கடன் வாங்கிய நேரத்தில்தான்—கடன்காரர்களிடமிருந்து இந்த ஒரு மணிநேரத்தை நீங்கள் திருடி இதைப் படிப்பதில் செலவிடுகிறீர்கள் என்று எனக்குத் தெரியும். மிகவும் மட்டமான, திருட்டுத்தனம் நிறைந்த வாழ்க்கை வாழ்பவர்கள் உங்களில் அநேகர் என்பது தெளிவாகவே எனக்குத் தெரிகிறது. என் இந்த அறிவு அனுபவத்தால் ஏற்பட்டதுதான். எல்லைக் கோடுகளிலே நின்று கொண்டு, வியாபாரத்துறையில் புக முயற்சி செய்து கொண்டு, கடன் தொல்லைகளிலிருந்து ஒரு வழியாக விடுபட முயற்சி செய்துகொண்டு, பிறர்பொருளை நம்பி வாழ்பவர்கள் பலரும் என்பது எனக்குத் தெரிகிறது. உயிர்வாழ்வதும், செத்த பின் புதைபடுவதும், எல்லாமே பிறர் பொருளில் தான், கொடுத்துவிடுவேன், கொடுத்துவிடுவேன், கடனைதிருப்பி நாளைக்கு நாளைக்கு—என்று சொல்லிக்கொண்டு இன்று பாப்பராக உயிர் துறந்து வருகிறவர்கள் நீங்கள். காக்காய் பிடிப்பதும், வியாபார அபிவிருத்திக்காக செய்யத் தகாதனவெல்லாம் செய்வதும், எல்லா வழிகளிலும் முன்னேற முயற்சிப்பதும் தான் உங்கள் வாழ்க்கை. சிறைக்குப் போகாமல், நாட்டுச் சட்டங்களை மீருமல், எவ்வளவு குற்றங்கள் செய்துவிட முடியுமோ அவ்வளவையும்

செய்துவிட முயலுகிறவர்கள் நீங்கள். பொய் சொல்வது, அனுவசியமாக இச்சகம் பேசுவது, வோட்டளிப்பது, மரியாதையாகக் கூனிக் குறுகிச் சமயத்துக்குப் பேசுவது, தான தருமங்கள் செய்கிற தரும தாதாவாக நாடகம் நடிப்பது—இதுவே உங்கள் வாழ்க்கை. இதெல்லாம் எதற்காக? பக்கத்து வீட்டுக்காரனின் பூட்ஸுகளை நீர் செய்ய விரும்புவதால்—அல்லது அவன் சட்டைகளை—அல்லது அவன் வண்டியை—அல்லது அவன் மளிகை சாமான்களை நீங்கள் அவனுக்கு விற்பனை செய்ய முயன்று இப்படி யெல்லாம் செய்ய வேண்டியதாக இருக்கிறது—உடல் நலமில்லாத ஒரு நாளுக்கு என்று, கொஞ்சமோ நிறையவோ, ஏதாவது சேமித்து பாங்கியிலோ, இரும்புப் பெட்டியிலோ, மேஜை டிராயரிலோ பத்திரப்படுத்த வேண்டு மென்பதற்காக இப்போது இன்று உடல் நல மற்றவர்களாக வாழ்கிறீர்கள் நீங்கள்.

இவ்வளவு விளையாட்டுப் புத்தியுடன் நம்மால் வாழ முடிகிறதே என்று சில சமயங்களில் நான் ஆச்சரியப்படுவதுண்டு. நீகிரோக்கள் அடிமைப்பட்டிருப்பதைப் பற்றி பிரமாதமாகப் பேசுகிறோம், வடக்குப் பிராந்தியத்தியவரானாலும் தெற்குப் பிராந்தியத்தவரானாலும், என்னென்னவோ அல்ப விஷயங்களிலெல்லாம் மீளாத வகையில் அடிமைப் பட்டுக்கிடக்கிறோம். தெற்கு நாட்டு ஓவர்ஸியர் ஒருவன் கிடைத்தால் அது சிரமமான காரியம்; அதைவிடச் சிரமப்படுத்துபவன் வடக்கு நாட்டு ஓவர்ஸியர். ஆனால் இந்த இரண்டு அடிமைத் தனத்தையும்விடத் தப்பமுடியாதது நீயே உன் அடிமை ஓவர்ஸியராக இருப்பது தான். மனிதனுள் தெய்வத்தன்மை குடியிருக்கிறது என்றெல்லாம் பேசிப் பலன் இல்லை. ராஜபாட்டையிலே வண்டி ஓட்டிச் செல்பவனைப் பார்—அவனுள் என்ன தெய்வத் தன்மை காணக்கிடக்கிறது? அவனுடைய

மஹோந்நதமான கடமை என்ன? தன் குதிரைகளுக்குத் தீனிவைத்து தண்ணீர் காட்டுவது தான்! திரை கடலோடும் கப்பல்களின் காரியங்களுடன் ஒப்பிடும் போது அவன் தலை விதியை என்ன வென்று சொல்வது! அவன் மஹாப்பிரபு, பெரியவருக்காக வன்றோ வண்டி ஓட்டு கிறான்! அவன் எவ்வளவு நித்தியமானவன், எந்த அளவில் தெய்வத்தன்மை பொருந்தியவன், சொல்லுங்கள். அவன் இப்படி நடுங்குகிறானே—தலை குனிந்திருக்கிறானே—புகுந்து புறப்படுகிறானே! அவனுடைய பீதிகள் கூடத் தெளிவற்றவை. அவன் நித்தியத்வம் பெற்றவனுமல்ல; கடவுளின் அம்சம் உடையவனுமல்ல. அவன் ஒரு அடிமை. தன்னைப் பற்றிய தன் சொந்த அபிப்பிராயத் துக்கே அடிமைப்பட்டவன் அவன்; தன் செயல்களால் ஏற்படுத்திக் கொண்ட தன் புகழுக்கே சிறைப்பட்டுக் கைதியானவன் அவன், பொதுஜன அபிப்பிராயம் என்பது நம்மைப் பற்றிய நம் சொந்த அபிப்பிராயத்துக்கு முன் எம்மாத்திரம்! தன்னைப் பற்றி ஒரு மனிதன் என்ன நினைக்கிறானோ, அதுதான் தப்பமுடியாத முடிவான விஷயம், ஒரு மனிதனின் விதியை நிர்ணயிப்பது அவன் தன்னைப் பற்றிக் கொண்டுள்ள சொந்த அபிப்பிராயமே தவிர வேறு அல்ல. கற்பனை, பகற்கனவு என்கிற எட்டாப் பிராந்தியங்களில் மனிதனுக்கு சுதந்திரம் தர எந்த வில்பர் போர்ஸ் என்று தோன்றப்போகிறானோ! இதையும் சிந்திப் துப்பாருங்கள். தங்கள் விதிகள் எப்படி நிர்ணயிக்கப் பட்டு முடிவு செய்யப்படும் என்று சிந்தித்துப் பார்க்க விரும்பாத சீமாட்டிகள் பூநூல் வேலை செய்து கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள் என்பதையும் சிந்தித்துப் பாருங் கள். காலங்கடந்த நித்யம் என்கிற தத்துவத்தைச் சிதைக் காமல் பொழுதைப் போக்குவது என்பது தான் இப்படி!

அமைதியுடன் நம்பிக்கை இழந்த வாழ்வு வாழ் கிறார்கள் மக்களில் பெரும்பாலோர். என் விதியை ஏற்றுக்

கொள்கிறேன் என்று சொல்கிறவன் நம்பிக்கை யிழந்து விட்டான் என்பதைத் தவர வேறு என்ன அர்த்தமோ! நகரத்திலிருந்து நாட்டிலும் இந்த நம்பிக்கையற்ற தன்மை பரவி வியாபித்திருக்கிறது. இந்த நம்பிக்கையின்மையை மறைப்பதற்காக ஆடம்பரமாக ஆடையுடுத்தி வேஷம் போட வேண்டியதாக இருக்கிறது. மக்களின் விளையாட்டுகள், பொழுது போக்குகள் என்று கூறப்படுபவைகளிலும் கூட ஒரே மாதிரியான ஆனால் பிரக்ஞையில் உரைக்காத இந்த நம்பிக்கையின்மை காணக்கிடக்கிறது—அவற்றில் விளையாட்டின் தன்மைகளோ, குணாதிசயங்களோ கொஞ்சமும் இல்லை. வேலைக்குப் பின் வருகிற பொழுது போக்குகள் வேறு எப்படி இருக்க முடியும்? நம்பிக்கை யிழந்துவிட்டபின் காரியங்களில் ஈடுபடாதிருப்பது தானே அறிவுக்கு அழகு!

மனிதனின், வாழ்க்கையின் முக்ய, பிரதான லக்ஷியமென்ன? வாழ்க்கையிலே அத்தியாவசியத்தேவைகள், வழிகள் என்னென்ன என்று யோசித்துப்பார்க்கும் போது தெரிகின்றது—இன்றைய மனிதர்கள் வேண்டும் என்றேதான் இந்த மாதிரி வாழ்க்கை நடத்தத் துணிந்து விட்டார்கள் போலும். இந்தச் சாதாரண வாழ்க்கை வழிகள் மற்ற வழிகளுக்கு மேலானவை என்று எண்ணித் தான் மக்கள் இப்படி வாழ்க்கை நடத்துகிறார்கள் என்று அவர்கள் உண்மையிலேயே எண்ணுவது போலவும் தோன்றுகிறது. ஆனால் திடமும் புத்திகூர்மையும் உள்ள சுபாவங்களுக்கு ஞாபகம் இருக்கிறது—சூரியன் உதிக்கும் போது வானம் நிர்மலமாகத் தான் இருந்தது. நமது அசட்டுத்தனமான கொள்கைகளையும், தவறான நம்பிக்கைகளையும் விட்டுவிட இன்னமும் நேரம் இருக்கிறது. சிந்தனையிலோ, செய்கையிலோ, பழசு என்பதற்காக எவ்வளவு பழசானாலும் ருஜுவில்லாமல், எதையும்

ஏற்றுக் கொண்டு விடக்கூடாது. எல்லோரும் உண்மை உண்மை என்று அங்கீகரித்து ஆர்ப்பரிக்கும் ஒரு விஷயம், அல்லது மௌனமாக ஏற்கும் ஒரு விஷயம், நாளைக்கே பொய் என்று ஏற்பட்டு விடலாம்; மழை தந்து பூமியை வளப்படுத்தப் போகும் மேகம் என்று நம்பியிருந்த அந்த இருண்ட பகுதி வெறும் அபிப்பிராயங்களின் புகை மூட்டம் என்பது நாளைக்கே நமக்குத் தெரியவரலாம். கிழவர்கள் இப்படிச் செய்யக்கூடாது என்று சொல்கிற ஒரு விஷயத்தை, இப்படியும் செய்ய முடியும். சிறப் பாகவே செய்யமுடியும் என்று வாலிபர்கள் செய்து காட்டிவிடுகிறார்கள். கிழவர்களுக்குப் பழைய வழிகள், பழைய செய்கைகள்; புதியவர்கள், வாலிபர்களுக்குப் புதிய வசதிகள், புதிய செய்கைகள் என்பது நியாயம் என்றே தோன்றுகிறது. அணைந்து கொண்டிருக்கிற கணப் புக்குப் புது விறகு கொணர்ந்து சேர்க்க அந்தக்கிழவர்களுக் குத்தெரியவில்லையோ, என்னவோ! இந்தக் காலத்து மனி தர்கள் என்னவென்றால், ஒரு பானைக்கடியில் விறகைப் போட்டு எரித்து உலகம் பூராவும் சுற்றிவருவதற்குப் போதுமான சக்தியைக் கிளப்பி விடுகிறார்கள்; இந்த வேகத்தைத் தாளாமல் கிழவர்கள் இறந்தே விடுவார்கள் போல இருக்கிறது. வயதான காரணத்திற்காக மட்டும் கிழவர்கள் வாலிபர்களைவிடப் பிறருக்குப் பாடம் கற்பிக் கத் தகுதியுள்ளவர்கள் என்று ஏற்பட்டு விடாதே! ஏனென்றால் வயதானவர்கள், வயது காரணமாக இழந்தது அதிகமே தவிர லாபமடைந்தது குறைவு என்றுதான் சொல்ல வேண்டும். அழிவில்லாதது, நித்யமானது என்பது எதையும் வாழ்க்கையிலிருந்து மஹாபுத்திமானாக இருப்பவன்கூட நேரடியாகத் தெரிந்து கொண்டுவிட முடியுமா என்பது சந்தேகப்பட வேண்டிய விஷயம்தான். உண்மையில் கிழவர்கள் வாலிபர்களுக்குப் புகட்டுவதற்கு ஒன்றும் விசேஷ விஷயங்கள் உள்ளவர்களாக இல்லை.

அவர்களுடைய சொந்த அனுபவங்கள் ஒரு தலைப்பக்ஷமானவைதான். பலவிதமான சொந்தக் காரணங்களால், அவர்களுடைய வாழ்க்கையே மிகவும் துயரந்தரும் தோல்விகள்தான்—அவர்களே அப்படித்தான் எண்ணுகிறார்கள். (தங்கள் அனுபவத்துக்கு ஒத்துவராத நம்பிக்கைகள் சிலவற்றை இன்னமும் கொண்டாடிக் கொண்டிருப்பார்கள் வாலிபம் இழந்து வயசாகி விட்டவர்கள் என்பதைத் தவிர அவர்களைப் பற்றி ஒன்றும் நிச்சயமாகச் சொல்வதற்கில்லை.) நான் இப்போது முப்பது வருஷங்கள் இந்தப் பூவுலகத்திலே வாழ்ந்து விட்டேன். என்னைவிடப் பெரியோர்களிடமிருந்து நான் இதுவரை உபயோகமான, தகுதியான, அழுத்தமான புத்திமதி எதையும் கேட்டதில்லை. அவர்கள் விஷயத்திற்கேற்ற மாதிரி எதையும் சொன்னதில்லை. அது மட்டுமல்ல; சொல்வதற்கு அவர்களிடம் விஷயம் எதுவுமில்லை என்பது தானாகவே தெரிகிறது. என் வாழ்க்கை என் எதிரில் இருக்கிறது—முழுமையாக இன்னும் என்னால் அனுபவித்து அறிய முடியாத ஒரு புது அனுபவம்—ஒரு புது முயற்சி—ஒரு புது ஆராய்ச்சி. அவர்கள் அந்த வாழ்க்கையை வாழ்ந்து பார்த்திருக்கிறார்கள் என்பது எனக்கு எவ்விதத்திலும் பயன் தருவதாக இல்லை. இது வரையில் எனக்கு ஏதாவது புதுமாதிரியான, முக்யமான அனுபவம் ஏற்பட்டிருக்கிறது என்றால், அது பற்றி அவர்கள், என்னைவிடப் பெரியவர்கள், முந்தியோ பிந்தியோ, எதுவுமே உபயோககரமாகச் சொன்னது இல்லை, இந்த முன்னோடிகளால் எனக்கென்ன லாபம்?

ஒரு குடியானவன் என்னிடம் சொல்கிறான். "வெறும் மரக்கறி உணவை நம்பி நீ வாழ முடியாது: ஏனென்றால் அந்த உணவிலே மனிதனுக்கு எலும்புண்டாக்கும் பொருள்கள் எதுவும் இல்லை" என்று. அவன்

நாளில் பெரும்பகுதியைத் தனக்கு உடம்பில் எலும்பு உற்பத்தியாவதற்கான பொருள்களைத் தயார் செய்து வயிற்றில் திணித்துக் கொள்வதில் ஈடுபட்டிருக்கிறான். ஆனால் இப்படிப் பேசிக்கொண்டும் அவன் தன் காளை மாடுகளை ஓட்டிக்கொண்டு தன் வயல்களில் நடக்கிறான்; ஆனால் அந்தக் காளைமாடுகளின் எலும்புகளைச் செய்வதற்கு புல்லைத் தவிர வேறு எதுவும் உபயோகப்படவில்லை என்பதை அவன் மறந்துவிடுகிறான். அந்தக் காளைகள் எதிர்ப்படுகிற தடங்கல்களை யெல்லாம் மீறி மிதித்துக் கொண்டு ஏரையும் குடி யானவனையும் இழுத்துச் செல்கின்றன. சில வட்டாரங்களில் சில வஸ்துக்கள் வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவை என்றுதான் சொல்ல வேண்டும்; இந்த வட்டாரங்கள் உதவியற்றவை, உடல் நிலை சரியாக இல்லாதவை என்றும் சொல்லலாம். வேறு சில வட்டாரங்களில் அவையே உல்லாசப் பொருள்கள், அவசியமில்லாத நாகரிகப் பொருள்கள் என்று சொல்ல வேண்டும். வேறு சில வட்டாரங்களில் இந்த வஸ்துக்களின் பெயர்களே தெரியாது.

சிகரங்களும் பள்ளத்தாக்குகளும் உள்பட இந்த மனித வாழ்க்கைவட்டம் பூராவும் நமது முன்னோர்களும் விடாது அனுபவித்ததுதான் என்று சிலருக்குத் தோன்றுகிறது. எல்லா விஷயங்களையும் கவனித்து, கணித்துச் சொல்லி வைத்திருக்கிறார்கள் என்று அபிப்பிராயப் படுகிறார்கள் சிலர். எவலின் சொல்வதைக் கேளுங்கள்; "மரங்களுக்கிடையில் இருக்க வேண்டிய இடைவெளிகளைப் பற்றிக்கூட புத்திமான் ஸாலமன் விதிகள் செய்தான். ரோம நாட்டின் சட்டமியற்றிகள் நீ உன் அண்டை வீட்டானின் வயலில் புகுந்து எத்தனை தடவைகள் விதைகள் பொறுக்கலாம் என்பதுபற்றி விதிகள் இயற்றியிருந்தார்கள். பொறுக்குகிற விதைகளில் நியாயப்படி உன்னு

டையது எவ்வளவு, அயலானுடையது எவ்வளவு என்று கணக்குப் போட்டுக் கொடுத்தார்கள்.'' நம்முடைய கை நகங்களை எப்படி எந்த அளவில் வெட்ட வேண்டும்—விரல் சதைக்கு மேலும் அடங்கியும் இல்லாமல் சரிசமான மான அளவில் வெட்ட வேண்டும்—என்று ஹிப்போக்கிரேட்ஸ் அன்றே சொல்லி விட்டான். வாழ்க்கையின் பல்வேறு விசித்திரங்களையும், ஆனந்தங்களையும் அறிந்துணர்ந்து முடித்து விட்டதாகச் சொல்கிற அந்த அலுப்பும் சலிப்பும் ஆடம் என்கிற முதல் மனிதன் உலகில் தோன்றிய அன்றே தோன்றிவிட்டன என்பதில் சந்தேகத்துக்கே இடம் இல்லை. ஆனால் மனிதனின் சக்திகளை இன்னும், இன்று வரை யாரும் அளந்து சொல்லிவிடவில்லை. முன்னால் நடந்திருப்பதை வைத்து நாம் இன்று நடக்கக்கூடிய காரியங்களை மதிப்பிடுவது சரியல்ல—ஏனென்றால் இதுவரை மனிதர்கள் சாதித்திருப்பது மிகவும் ஸ்வல்பமே, அதை வைத்து இனியும் சாதிக்கக்கூடியதை மதிப்பது தவறு என்றுதான் சொல்ல வேண்டும். இன்று வரை நாம் சாதிக்காதது எத்தனையோ—நம் தோல்விகள் எத்தனையோ; ''அதையெல்லாம் எண்ணித் துன்புறாதே குழந்தாய்—ஏனென்றால் இன்னும் செய்யாததை, சாதிக்காததை துணிந்து சொல்ல யாரால் இயலும்?''

ஆயிரம் எளிய விதங்களில் நாம் நம்முடைய வாழ்க்கையை பரிசோதித்துப் பார்த்துக் கொள்ளலாம். என் காய்கறிவகைகளை முதிரச் செய்யும் அதே சூரியன்தான், உதாரணமாகச் சொல்லப் போனால், நம் பூமியைப் போன்ற பல பூமிகளுக்கு, பல பூமித் தொடர்களுக்கு உஷ்ணமும் ஒளியும் தருகிறது. இதை மட்டும் நான் ஞாபகத்தில் வைத்திருந்தேனானால், சில தவறுகள் நேராமல் நான் தடுத்திருக்க முடியும். என் காய்கறிப் பாத்திகளை நான் சமனிட்டு விதைவிதைத்த போது இந்த

ஞாபகத்துடன் செய்யவில்லை, எவ்வளவோ அதிசயமான திரிகோணங்களின் உச்சிப் புள்ளிகளாக உள்ள அந்த நக்ஷத்திரங்கள்! எவ்வளவு மாறுபட்ட, தூரத்திலுள்ள ஜன்மங்கள் ஒரே உச்சியைப் பார்த்து ஆனந்தித்துக் கொண்டிருக்கின்றன இந்த ஒரே விநாடியில் என்று யார் சொல்ல முடியும்? இயற்கையும் மனித வாழ்க்கையும் மனித குலத்தின் தனி சுபாவங்களுக் கேற்ற மாதிரியே விரிந்தவைதான்; பரந்து உள்ளவைதான்; பல்லாயிரக் கணக்கான சுவைகளும், வேடிக்கை விந்நியாசங்களும் அடங்கியவை அவை. வாழ்க்கை என்பது மற்றவனுக்கு எதை அளிக்கும் என்று யார் நிச்சயமாகச் சொல்லிவிட முடியும்? ஒருவர் கண்கள் மூலம் மற்றவர் பார்ப்பது என்பதைப் போன்ற அதிசயம் வேறு என்ன நிகழ முடியும்? ஒரு விநாடி இம்மாதிரிப் பிறருடைய நோக்குடன் பார்க்க அறிந்து கொண்டால் போதுமே! உலகத்தின் சரித்திர காலங்களிலெல்லாம் நடந்ததைப் பூராவும் ஒரு மணி நேரத்துக்குள் நாம் அறிந்து கொண்டு விடலாமே! ஒரு உலகம் மட்டும் தானா? எத்தனையோ உலகங்களை அறிந்து கொண்டு விடலாம் நாம். சரித்திரம், கவிதை, தெய்வக்கதைகள், புராணங்கள்,—இதில் எதை வாசித்து நாம் பிறருடைய அனுபவங்களை இவ்வளவு பூரணமாகவும் திருப்தியாகவும் அறிய முடியும்? அந்த அறிவு எவ்வளவு அதிசயோக்தமானது! எவ்வளவு அறிவூ தரக்கூடியது?

நல்லது என்று என் அண்டை அயலார் சொல்வதில் பெரும்பகுதியும் கெட்டது என்றே என் அந்தராத்மாவுக்குத் தோன்றுகிறது. நான் என் வாழ்க்கையில் எதைப் பற்றியாவது வருத்தப்படுகிறேன் இப்போது என்றால் அது என் 'நல்ல' நடவடிக்கைகளைப் பற்றித்தான் என்று சொல்லவேண்டும். எந்த அசுரசக்தியால் இயக்கப்பட்டு

நான் அப்படி 'நல்லவனு'க நடந்துகொண்டேன்? கிழவனே, நீ கெட்டிக்காரத்தனமாக, அதி புத்திசாலித் தனமாக எதை வேண்டுமானுலும் சொல்லு—நீயும் எழுபது வருஷங்கள் வாழ்ந்து விட்டாய். ஏதோ கௌரவம் என்று ஒன்றைச் சம்பாதித்துக் கொண்டும் வாழ்ந்து விட்டாய். ஆனுல் நீ சொல்வதற்கெல்லாம் எதிராக நடக்க, எதிராக எண்ண, தப்ப முடியாத ஒரு குரல் என்னை அழைக்கிறது. முந்திய தலைமுறையின் காரியங்களைப் பிந்திய தலைமுறை அப்படி அப்படியே விட்டுவிட்டு நகர்ந்து விடுகிறது—கடலில் முழுகிக் கொண்டிருக்கும் கப்பல்களை விட்டு ஜனங்கள் தப்பிவிடுவதுபோல்!

இப்போது நமக்கு உள்ள நம்பிக்கையைவிட நாம் அதிகமாக நம்பிக்கையும் நல்லெண்ணமும் உள்ளவர்களாக இருக்கலாம் என்றே நான் எண்ணுகிறேன். நம்மைப் பற்றியே கவலைப்படுவதை நாம் குறைத்துக் கொள்ளலாம்—அவ்வளவுக்கவ்வளவு பிற விஷயங்களைப் பற்றிக் கவலைப்படலாம். இயற்கை என்பது நமது பலஹீனத்துக்கு மட்டுமல்ல, பலத்துக்கும் ஏற்றபடியெல்லாம் அனுசரித்தே அமைந்திருக்கிறது. சிலருடைய ஓய்வு ஒழிவற்ற கவலைகளும் விவகாரங்களும் ஒரு வியாதி என்று சொல்கிற அளவுக்கு விசுவரூபம் எடுத்து விடுகின்றன; தீராத வியாதி அது என்றுகூடச் சொல்லலாம். நாம் செய்கிற வேலையின் முக்யத்வத்தையும் பெருமையையும் நாமே மிகைப்படுத்திக் கொள்கிறோம். ஆனுல் நாம் செய்யாதது, செய்யமுடியாதது, எத்தனையோ! வியாதி வந்து அந்த வேலை தடைப்பட்டிருந்தால் என்ன ஆகியிருக்கும்? நாம் எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்கிறோம்? நம்பிக்கை என்பது நம்மை அணுகிவிடப் போகிறதே என்று நாம் எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்கிறோம்! தவிர்க்க முடியுமானுல் நம்பிக்கையைத் தவிர்த்தே நாம்

வாழ விரும்புகிறோம். பகல் பூராவும் நம்பிக்கை என்பதை அணுக விடாமல் ஜாக்கிரதையாக இருந்து விடுகிறோம். இரவிலே, மனசில்லாமலே கற்றுக் கொண்ட பிரார்த்தனைகளை முணுமுணுத்து நிச்சய மல்லாத விஷயங்கள் பலவற்றை அனுசரித்து நடந்து நம் வாழ்க்கையைக் கட்டுப்படுத்திக் கொள்ள முயலு கிறோம். இவ்வளவு பூர்ணத்வத்துடனும் உண்மை உணர்ச்சியுடனும் வாழக் கட்டாயப்படுத்தப்படுகிறோம் நாம். (நம் வாழ்க்கையை நாமே வெகுவாகப் பாராட்டி மதித்துக் கொள்கிறோம். வேறுவிதமாக வாழமுடியும் என்பதை நாம் அங்கீகரிப்பதில்லை; வேறு வழிகளை வெகு வாக மறுக்கிறோம். இப்படி வாழுவதைத் தவிர வேறு வகை கிடையாது என்று நாமே சொல்லிக்கொள்கிறோம். நடுமையப் புள்ளியிலிருந்து ஓரக் கோட்டைத் தொடு வதற்கு எத்தனை கோடுகள் வரையலாமோ, அவ்வளவு வாழ்க்கை வழிகளும் சாத்தியமென்று நாம் எண்ணிப் பார்ப்பதே யில்லை.) மாறுதல் என்பது எல்லாமே சிந்தித்துப் பார்ப்பதற்கு மிகவும் அதிசயம் என்று தான் சொல்ல வேண்டும். ஆனால் இங்கு ஒவ்வொரு விநாடியுமே ஒரு அதிசயம் நிகழ்ந்து கொண்டு தான் இருக்கிறது. குரு குங் சொன்னான்; (''நமக்குத் தெரிந்ததைத் தெரிந்ததாகத் தெரிந்து கொள்வதும் தெரியாததைத் தெரியாததாகத் தெரிந்து கொள்வதும், தான் உண்மையான அறிவு.'') கற்பனையின் உண்மை ஒன்றை நேரில் கண்டு அறிந்த உண்மையாக இவ்வுலகில் ஒருவன் மாற்றி அதன்படித் தன் வாழ்க்கையையும் அமைத்துக் கொண்டு விட்டான் என்றால், அதற்குப் பிறகு அதே அடிப்படையில் மனிதர் கள் எல்லோருமே வாழத் தொடங்கிவிடுவது சாத்தியம் என்று நான் முன் கூட்டியே கண்டு கொள்கிறேன்.

ஒரு நிமிஷம் சிந்தித்துப் பார்ப்போம். நான் ஏற் கெனவே சொன்ன அந்தக் கவலைகளும் வியாகூலங்களும்

எதைப் பற்றி என்று சற்றே சிந்தித்துப் பார்ப்போம். அவை பற்றி நாம் எவ்வளவு தூரம் கவலைப்பட வேண்டும், கஷ்டப்பட வேண்டும், எந்த மட்டும் இது அவசியம் என்றும் கவனிப்போம். நாகரிகமடைந்த வாழ்வு என்று சொல்லப்படுவதின் மத்தியிலே வாழ்பவர்கள் தான் எனினும், எளிய இயற்கையோடிசைந்த எல்லைக் கோட்டு வாழ்வு வாழ்வது பல விஷயங்களை அறிந்து கொள்வதற்குச் சாதகமாக இருக்கும் என்று தோன்றுகிறது. வாழ்க்கையில் அத்தியாவசியமான பொருள்கள் என்னென்ன, அவற்றை அடைய என்னென்ன முறைகள் கையாளப்படுகின்றன என்று கவனிக்க இந்த எளிய வாழ்வு உபயோகப்படும். நேரமிருந்தால் வியாபாரிகளின் கணக்குப் புஸ்தகங்களைப் புரட்டிப் பார்க்கலாம்; மனிதர்கள் சாதாரணமாகக் கடைகளில் என்னென்ன சாமான்களை வாங்குகிறார்கள் என்று பார்க்கலாம்; அடிப்படைப் பொருள்கள், மளிகை சாமான்கள், வாழ்வுக்குத் தேவையானவை என்னென்ன என்று ஒரு வழியாகக் கணித்து அறிந்து கொள்ளலாம். மனிதனின் வாழ்க்கைக்கு அத்தியாவசியமான, மிக முக்யமான விதிகள் எதையும் காலத்தின் முற்போக்குகள் என்று சொல்லப்படுபவை சிறிதும் மாற்றவில்லை என்று தான் சொல்லவேண்டும், நமது எலும்புக்கூடுகள் நமது முன்னோர்களின் எலும்புக் கூடுகளினின்றும் ஒரு விதத்திலும் மாறுபடாதவை என்பது உண்மை தானே!

வாழ்க்கையின் அத்தியாவசியப் பொருள்கள் என்பதால் நான் குறிப்பது என்ன? காட்டுமிராண்டித் தனத்தினாலோ, ஏழ்மையினாலோ, ஒரு கொள்கையினாலோ, அல்லது வேறு எந்தக் காரணத்துக்காகவோ, யாரும் இதில்லாமல் வாழ்க்கை நடத்தலாம் என்று எண்ணாத விஷயங்களையே, சாமான்களையே, பொருள்களையே

குறிப்பிடுகிறேன் நான். அதுவும் இந்தப் பொருள்கள் மனிதன் தானாகவே உழைத்து. தானாகவே சம்பாதித்துக் கொள்கிற பொருள்களாகவும் இருக்க வேண்டும். அதுமட்டுமல்ல; மனித வாழ்க்கையின் ஆரம்ப காலமுதல், இன்று வரை, உபயோகிக்கப்பட்டுப் பட்டு இதில்லாமல் வாழமுடியாது என்கிற அளவுக்கு முக்கியத்துவம் வாய்த்து விட்ட பொருள்கள் அவை. இப்படிச் சிந்தித்துப் பார்க்கும்போது பலருக்கு—மனிதர்களுக்கும் சரி, ஜந்துக்களுக்கும்சரி—வாழ்க்கையின் முக்கியமான பொருள் என்று உணவு ஒன்றை மட்டுமே சொல்லத் தோன்றும். புல் வெளிகளில் திரியும் காட்டெருமைக்கு உணவு என்றால் தின்னக்கூடிய நீண்டபுல்லும், குடிப்பதற்குத் தண்ணீரும் என்று அர்த்தம். அடுத்த படியாக அதன் தேவை காட்டிலே தங்க இடம்—காட்டிலில்லாவிட்டால் மலையின் சரிவிலே இடம் தேடிக் கொள்ளும் அது. வாயற்ற ஜந்துக்களிலே எதுவும் உணவு, ஒதுங்க இடம் இந்த இரண்டையும் தவிர வேறு எதையும் நாடுவதுமில்லை—தேடுவதுமில்லை. மனிதனுக்குத் தேவைகள் என்று வரிசைப்படுத்திப் பின் வருமாறு சொல்லலாம்— உணவு, தங்க இடம், உடை, எரி பொருள்; இவற்றை யெல்லாம் அடைந்து திருப்தி பெறும் வரையில் மனிதனால் வாழ்வின் உண்மையான பிரச்னைகளைப் பற்றி சுதந்திரத்துடனோ, வெற்றிகரமாகவோ சிந்திக்க இயலாது; அவற்றை நேருக்கு நேர் கண்டு போராடி வெற்றி காண்பதும் நடக்காத காரியம். வீடுகளை மட்டுமல்ல; உடைகளையும் உணவு சமைப்பதையும் மனிதன் கண்டுபிடித்துக் கொண்டிருக்கிறான். நெருப்பு உஷ்ணமாக இருப்பது தற்செயலாக அவன் கண்டு கொண்ட ஒரு உண்மை; அதன் உபயோகத்தையும் அவன் அகஸ்மாத்தாகத்தான் கண்டு கொண்டான் என்று சொல்ல வேண்டும். முதலில் இது ஒரு உல்லாஸப்

பொருளாகவே இருந்திருக்கும்; பிறகு இந்த சீதோஷ்ணத்தில் அது அவசியமாகவும் ஆகிவிட்டது; இப்போது கணப்பண்டை உட்கார்ந்திருப்பது என்பது மனிதனுக்கு சுபாவமேயாகிவிட்டது. இதே போல பூனைகளும் நாய்களும் அடுப்பண்டை உட்கார்ந்திருக்கும் இரண்டாவது சுபாவத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கின்றன என்பதைக் காண்கிறோம். தங்க இடத்தாலும் அணியும் உடைகளாலும் நமக்குள் தோன்றும் உஷ்ணத்தைத் தக்கபடிப் பாதுகாத்துக் கொள்ள நாம் கற்றுக்கொள்கிறோம். உள் உஷ்ணத்தைத் தக்கபடிப் பாதுகாத்துக் கொள்ள நாம் கற்றுக் கொள்கிறோம். உள் உஷ்ணத்தை விட அதிகமான உஷ்ணத்தை உண்டாக்க, எரிபொருளை உபயோகித்து, நாம் சமைக்கவும் கற்றுக் கொண்டோம். சமையல் என்பது எரிபொருளுடன் தான் ஆரம்பமாகிறது என்று சொல்லலாம் அல்லவா? டார்வின் என்கிற இயற்கை விஞ்ஞானி டியரா டெல் ப்யூகோ என்கிற பிரதேசத்தின் ஜனங்களைப் பற்றிச் சொல்வது கவனிப்பதற்குரிய விஷயம்; உஷ்ணமான ஆடைகளை அணிந்து கொண்டு கணப்பண்டை உட்கார்ந்து கொண்டிருந்த அவன் ஆட்களுக்குக் குளிரால் நடுக்கிக் கொண்டிருந்தது; கணப்புக்கு வெகு தூரத்துக்கப்பாலிருந்த சுதேசிகளுக்கு அந்த உஷ்ணம் தாங்காமல் வியர்த்து விட்டுக் கொண்டிருந்தது. நியூஹாலந்து தேசத்தவன் துணிகளே யில்லாமல் தன் உடல் உஷ்ணத்தைக் காப்பாற்றிக் கொள்கிறான். ஐரோப்பாக்காரனுக்கு கம்பளி ஆடைகளுக்குள்ளும்கூட, குளிரால் நடுக்குகிறது. நாகரிகமடைந்தவனின் அறிவுத்திறனுடன் இந்தக் காட்டுமிராண்டிகளின் உடல்வலுவையும் தெம்பையும் சேர்க்க முடியாதா? லீபிக் சொல்கிறபடி பார்த்தால் மனிதனுடைய உடம்பே ஒரு ஸ்டவ் அடுப்பைப் போன்றதுதான்; உணவு தான் உள் உஷ்ணத்தை சமமாக

வைத்து காப்பாற்றும் எரிபொருள்; உள்ளே உணவு என்கிற எரிபொருள் எரிந்து இதயம் என்கிற யந்திரத்தை ஓடச் செய்கிறது. குளிர்காலத்தில் நாம் அதிகமாகச் சாப்பிடுகிறோம். உஷ்ண காலத்தில் குறைவாகச் சாப்பிடுகிறோம். மிருக உஷ்ணம் என்பது மெதுவாக எரியும் எரிபொருளின் காரணமாக விளைவு தாகும்; இது எல்லை தாண்டி துரிதப்பட்டால் வியாதியும் சாவும் நேரும்; அல்லது எரிபொருள் இல்லாது போய் விட்டாலும், போதுமான காற்று எரியடுப்புக்குள் போகாவிட்டாலும், எரிவது நின்றுபோய் வியாதியும் சாவும் நேர்ந்து விடுகின்றன. அதற்காக உயிர்ச்சத்தான தீயை அடுப்பில் எரியும் தீ என்று எண்ணிவிடக்கூடாது; வார்த்தை யளவில் இரண்டுக்கும் உள்ள ஒற்றுமையை எடுத்துச் சொன்னேன், அவ்வளவுதான். இதெல்லாம் பற்றி யோசிக்கும்போது, மேலே சொன்னதிலிருந்து, மிருக வாழ்வு என்பது சற்றேறக் குறைய மிருக உஷ்ணம் என்பதற்குச் சமமானது என்று சொல்லத் தோன்றுகிறது. இரண்டு வார்த்தைகளுக்கும் ஒரே அர்த்தம்தான் என்றே சொல்லலாம். ஏனென்றால், உணவு என்பது நம் உள் உஷ்ணத்தைக் காப்பாற்ற உபயோகமாகும் எரிபொருள் என்றுதான் கொள்ளவேண்டும்; எரிபொருள் தான் உஷ்ணம் குறையும் போது அதை அதிகரிக்கச் செய்யவும், உணவைச் சமைக்கவும் நமக்கு உபயோகமாகிறது; இந்த உஷ்ணத்தைக் காப்பாற்றவே ஆடைகளும், தங்கும் இடமும் நமக்குப் பிரயோசனப்படுகின்றன; இப்படிக் கிடைக்கும் உஷ்ணத்தை நமக்குள் வைத்துப் பராமரிக்கவே வீடும் உடைகளும் நமக்கு உபயோகப்படுகின்றன.

முதல் தேவை, முக்கிய தேவை, அத்தியாவசியமான தேவை என்பது இதுதான்; நம் உடலைப் பற்றிய வரை

யில் இதுதான் உண்மை: நாம் உஷ்ணத்தைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்; நமக்குள் உள்ள உயிர் உஷ்ணத்தைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். உணவு, உடை, வீடு என்பனபற்றி மட்டுமல்லாமல் நாம் நமது படுக்கை பற்றியும் சர்வ ஜாக்கிரதையாக இருக்கிறோம். இரவு உடைகள் என்று படுக்கையைச் சொல்லலாம். வீட்டுக்குள் இந்த வீட்டை, பதுங்கல் ஸ்தானத்தைத் தயார் செய்ய, நாம் குருவிகளின் சிறகுகளைத் திருடுகிறோம்; அவற்றின் கூண்டுகளைக் கொள்ளையடிக்கிறோம். தன் வளைக்குள்ளே மண்ணுருட்டிப் பூச்சி புல்லையும் இலைகளையும் பதுக்கி வைத்துப் படுக்கை தயாரித்திருப்பது போல, மனிதனும் படுக்கை தயாரித்துக் கொள்கிறான். ஏழை எளியவர்கள் உலகே குளிர்மயமாக இருக்கிறது, என்று குற்றம் சாட்டுவது சாதாரண விஷயமாக இருக்கிறது, நம் கஷ்டங்களில், துயரங்களில் பல வெளிக்குளிராலும், சமூகத்தினரின் குளுமையினாலும் ஏற்படுகின்றன என்று நாம் சொல்லுகிறோம். சில தேசங்களில், சீதோஷ்ணநிலை காரணமாக, மனிதன் சிலகாலமாவது ஸ்வர்க்க வாழ்வு வாழ்வது சாத்தியமாக இருக்கிறது. உணவைச் சமைப்பதற்குத் தவிர வேறு எதற்கும் அவனுக்கு அந்த நிலையில் எரிபொருள் தேவையில்லாதிருக்கும். சூரியனே அவனுக்கு எரிபொருளாக உபயோகப்பட்டு விடுகிறது. கனி வகைகள் கூட சூரியனின் கிரணங்களால் சரியானபடி சமைக்கப்பட்டு விடுகின்றன. உணவு வகைகளிலே ஏராளமான தினுசுகள் அவனுக்குச் சுலபமாகக் கிடைத்துவிடுகின்றன; உடைகளோ, வீடோ அநேகமாக, பாதிக்குமேல் தேவையில்லை என்று சொல்கிற அளவுக்கு ஆகிவிடுகிறது. இன்று இந்த நாட்டில் பார்க்கலாம்; என் சொந்த அனுபவத்தை மட்டும் கொண்டு சொல்கிறேன். சில ஆயுதங்கள்—ஒரு கத்தி, ஒரு கோடாலி, ஒரு மண்வெட்டி, ஒரு தள்ளு

வண்டி இவற்றுடனும், வாசிப்பதில் கவனமுள்ளவர்களுக்கு, விளக்கு, காகிதங்கள், சில புஸ்தகங்கள் அல்லது புஸ்தகங்கள் இருக்குமிடத்துக்கு அருகாமையில் இருப்பது—இவை தான் மனிதனின் அவசியத் தேவைகளுக்கு அடுத்தபடியான தேவைகள், இவற்றுடன் வாழ்க்கையைப் பூரணமாக, சுலபமாகக் கழித்துவிடலாம் இவையெல்லாம் சொல்ப செலவில் சம்பாதித்துக் கொண்டு விடலாம். ஆனாலும் சிலர்—அவர்களை அறிவாளிகள் என்று சொல்ல முடியாது—உலகின் எதிர்க்கோடி வரையில் போகிறார்கள்; காட்டுமிராண்டிகளும், உலகத்தின் வியாதிகளும் நிறைந்த தேசங்களுக் கெல்லாம் போகிறார்கள்; போய்ப் பத்து இருபது வருஷங்களுக்கு வியாபாரமோ வேறு தொழிலோ செய்கிறார்கள், இவ்வளவும் எதற்காக? திரும்பி இங்கே புது இங்கிலாந்துப் பிரதேசத்துக்கு வந்து, சம்பாதித்த பணத்தை வைத்துக் கொண்டு சௌகரியமாக வாழ்ந்து சாவதற்காகத் தான் இத்தனை பாடும் படுகிறார்கள். சௌகரியமாக வாழ்வது என்றால் என்ன? குளிர் நாட்டில் உஷ்ணக் கத கதப்புடன் வாழத் தான் இவ்வளவும், ஆனால் ரொம்ப ரொம்ப நாஸூக்கும் நாகரிகமும் படைத்த பணக்காரர்கள் போதுமான உஷ்ணத்துடன் வாழ்வதுடன் திருப்தியடைந்து விடுவதில்லை; அவர்கள் அமிதமான உஷ்ணத்துடன் வாழ்கிறார்கள்; இயற்கைக்கு ஒவ்வாத உஷ்ணத்துக்காகப் பாடுபடுகிறார்கள் அவர்கள். ஒரு விதத்தில் அவர்களையே சமையல் பொருள்கள் என்று சொல்வதுங் கூடப்பொருந்தும்.

உல்லாஸ நாகரிகப் பொருள்களில் அநேகமாக எல்லாமும், சௌகரியமான வாழ்க்கைக்கு அவசியமானவை என்று கருதப்படுபவைகளில் பெரும்பாலானவையும் உண்மையில் அத்தியாவசியமான பொருள்களே அல்ல.

அது மட்டுமல்ல; மனித குலம் மற்றவழிகளில் உயரத் தடை செய்வதும் இவையே என்று கூடச்சொல்லலாம். வாழ்க்கைச் சௌகரியங்கள், உல்லாஸப் பொருள்கள் எல்லாம் இல்லாமலே தான் உலகில் அறிஞர்கள் எல்லோரும் வாழ்ந்திருக்கிறார்கள் என்று சொல்லவேண்டும். ஏழைகளையும் விட எளிமையும் தியாகங்களும் நிறைந்த வாழ்க்கை தான் அறிஞர்கள் எல்லோரும் வாழ்ந்திருக்கிறார்கள்: பண்டைக் காலத்து ஞானிகள்—சீனர்கள், ஹிந்துக்கள், பார்ஸியர்கள், கிரேக்கர்கள், இவர்கள் எல்லோரும்—ஏழைகளிலும் ஏழைகளாக வாழ்க்கை நடத்தியவர்கள் தான். ஜனங்கள் ஐசுவரியங்கள் என்று சொல்லுகிற வெளிப்பகட்டுப் பொருள்கள் அவர்களிடம் கிடையாது. ஆனால் அவர்கள் உள் சௌகரியங்களில், மகத்தான பொக்கிஷங்களில் சிறந்தவர்கள்; அவர்களைப் பற்றி நாம் அறிந்தது என்னவோ சொல்பம்தான். எனினும் அவர்களைப்பற்றி இவ்வளவாவது நாம் அறிந்திருப்பதே பெரிது என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. அந்தத் தேசங்களில் நவீன காலத்தில் தோன்றிச் செயலாற்றியுள்ள சீர்திருத்தவாதிகள், தலைவர்கள் பற்றியும் கூட இது முழுவதும் உண்மை யென்றே சொல்லவேண்டும். தானாகத் தேடி அடையும் ஏழலுமை என்று நாம் சொல்லும் நிலையை எட்டியவர் யாரும் மனித வாழ்க்கைபற்றி பக்ஷபாதமற்ற அறிவுள்ள விமர்சகனாக இருக்கமுடியாது. தானாகவே ஏழையாகத் துணிந்தவனுக்குத்தான் இவ்வுலகில் பல விஷயங்கள் சந்தேகத்துக்கு இடமறத் தெரியமுடியும். நாகரிக, உல்லாஸ வாழ்வின் கனியே நாகரிகமும், உல்லாஸமும்தான்—அந்த வாழ்வு விவசாயம், வியாபாரம், இலக்கியம், கலை எதை ஒட்டியதாக இருந்தாலும் சரிதான். இந்த நாட்களில் தத்துவப் போதகாசிரியர்கள் நம்மிடையே இருக்கிறார்களே தவிர, தத்துவதரிசிகள் யாரும் இல்லை. எனினும் தத்துவபோதனையும் அதிசய

மானதுதான்—ஏனென்றால் ஒரு காலத்தில் வாழ்ந்த வாழ்க்கை என்பதே அதிசயமானதுதான் அல்லவா? தத்துவதரிசியாக இருப்பதென்றால் என்ன? நுட்பமான சிந்தனைகள் உள்ளவராக இருப்பது மட்டுமல்ல; ஒரு முறையை ஸ்தாபிப்பது மட்டுமல்ல; ஞானம் என்பதை அறிவு என்பதைக் காதலித்து. அதன் சட்டப்படி, எளிய, சுதந்திரமான, நம்பிக்கையுடன் கூடிய, தாராள புத்தியுள்ள வாழ்வு வாழ்பவரைத்தான் தத்துவதரிசி என்று சொல்லவேண்டும். வாழ்க்கையின் பிரச்னைகளில் சிலவற் றையேனும், நேரடியாக, நடைமுறையில், வெறும் விவாத ரீதியில் மட்டுமில்லாமல், தெளிவாகச் சிக்கறுத்து வழிகண்டவரே தத்துவதரிசி. பெரிய ஆராய்ச்சியாளர் களும், பண்டிதர்களும் பெற்ற வெற்றிகள் எல்லாம் சாதாரணமாக நாடகமேடை வெற்றிபோலத்தான்; வேஷம் போட்டவனின் வெற்றிபோலத்தான்; ராஜரீக மானது அல்ல அவை, மனுஷ்யத்வம் பொருந்தியவையும் அல்ல, ஊரோடு ஒத்துவாழ்ந்து ஏதோ எப்படியோ வாழ்க்கை நடத்தி வெற்றி பெற்று விடுகிறார்கள்: அவர் கள் தகப்பன்மார்களும் அப்படி வெற்றி பெற்றவர்கள் தான்: அதே வழியைப் பின்பற்றித்தான் இவர்கள் கண்ட வெற்றிகளும், மனித குலத்தின் நேர்த்தியான கிளை ஒன் றுக்கு விதை ஊன்றுகிறவர்கள் அல்ல அவர்கள். ஆனால் மனிதர்களின் தரம் ஏன் குறைந்துகொண்டே வருகிறது? ஏன் குடும்பங்கள் நசித்து க்ஷீணிக்கின்றன? தேசங்களை யும் நாடுகளையும் க்ஷீணிக்கச் செய்யும் உல்லாஸப் பொருள்கள், நாகரிக வாழ்க்கைப் பண்புகள் என் னென்ன? அவற்றில் ஏதுவும் இன்று நம்மிடையே நம் வாழ்க்கையில் காணப்படவில்லை என்று நாம் சொல்ல முடியுமா? தன் வாழ்க்கையின் வெளி உருவத்திலும் அம் சங்களிலும் கூட தத்துவதரிசி என்பவன் தன் காலத் துக்கு அப்பாற்பட்டவனாக, முற்பட்டவனாக இருப்பான்.

அவன் தன் காலத்திய மற்றவர்களைப்போல் உணவு அருந்துவதில்லை; குடியிருப்பதில்லை; ஆடை உடுத்துவதில்லை; மற்றவர்களைப்போல அவன் உஷ்ணம் தேடுவதில்லை. மற்றவர்களைவிடச் சிறந்த வழிகளால் தன் உயிர்ச் சத்தான உஷ்ணத்தைக் காப்பாற்றிக் கொள்ளாத மனிதனை எப்படித் தத்துவதரிசி என்று சொல்லமுடியும்?

ஒரு மனிதன் இப்படியாக நான் சொன்ன வழிகளில் எல்லாம் உஷ்ணம் தேடிக் கொண்டு விட்டான் என்றால், அதற்கப்பால் அவன் தேவை என்று நினைப்பதென்ன? இன்னும் அதிகப்படியான அதே மாதிரியான உஷ்ணம் தேடாமல் அவன் உணவுப் பொருள்களில் விதவிதமானதைத் தேடுகிறான், பெரிய அழகான வீடுகளைத் தேடுகிறான்; நேர்த்தியான இன்னும் அதிகமான உடைகளைத் தேடுகிறான். அதிகப்படியான, அணையவே அணையாத, கணப்புகளைத் தேடி அலைகிறான். வாழ்க்கைக்குத் தேவையானவற்றை அவன் அடைந்துவிட்டவுடனே, தேவைப்படாததை, அவசியமில்லாததைத் தேடுவதைத் தவிர்த்து அவன் வேறு ஒரு காரியமும் செய்யக்கூடும். அதாவது, வாழ்க்கையிலே அவன் புது அனுபவங்களைத் தேடலாம்; தாழ்மையானது என்று கருதப்படும் உழைப்பினின்றும் அவனுடைய விடுமுறை அப்போது தொடங்கிவிடலாம். விதைக் கேற்றதுதான் மண்ணும் என்று சொல்ல வேண்டும்; அது ஒரு வேரைப் பூமிக்குள் விட்டுவிட்டது; இன்னொரு தளிரை நம்பிக்கையுடன் மேல் நோக்கி அனுப்புகிறது. மனிதன் பூமியிலே இப்படி ஆழ வேர் விட்டு அசையாமல் நிற்பது எதனால்? அதே அளவில் வானைநோக்கி வளர்ந்து ஓங்கலாம் என்பதற்காகத்தானே இருக்க வேண்டும்? தாவர வர்க்கங்களிலே நேர்த்தியானது எது என்றால் ஆழமாக வேர் விட்டு ஆகாயத்திலே காற்றிலும் வெளிச்சத்திலும் பழம் தரும், மரங்கள்தான் என்று

எல்லோருமே ஒப்புக் கொண்டு விட்டார்கள் மற்ற தாவரங்களை ஜனங்கள் நடத்துவதிலிருந்தே அவற்றிற்குள்ள மதிப்பு தெளிவாகவே தெரியவருகிறது என்றுதான் சொல்ல வேண்டும்.

பலசாலிகளுக்கும் வீரம் மிகுந்தவர்களுக்கும் விதிகள் செய்ய நான் முனையவில்லை. ஏனென்றால் இப்படிப்பட்டவர்கள் தங்கள் காரியங்களைதாங்களே பார்த்துக் கொள்வார்கள்; ஸ்வர்க்கத்திலும் நரகத்திலும் அவர்கள் தங்கள் காரியங்களைச் செவ்வனே செய்து கொண்டுவிடுவார்கள்; அவர்கள் மற்றவர்களைவிட அதி அற்புதமான மாளிகைகள் எழுப்பி விடுவார்கள்; மஹாராஜசுவரியவான்களையும் விட அதிகமாகச் செலவு செய்து விடுவார்கள்; அதனால் அவர்களுடைய செல்வங்களில் சிறிதும் குறையாது. தங்கள் வாழ்க்கை வழிகளைப் பற்றி அவர்களுக்குப் பிரக்ஞையே இல்லாமல் இருக்கலாம்! இப்படிப்பட்டவர்கள் உண்டு என்றுதான் நாம் கனவுகள் காண்கிறோம். இன்றுள்ள நிலைமையில் திருப்தியையும் தைரியத்தையும் காண்கிறவர்களுக்காகவும் நான் எதுவும் சொல்லவில்லை:— நானே ஓரளவு அந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவன் என்றுதான் நான் நினைக்கிறேன். இன்றைய நிலைமையை அருமையாகவும் உத்ஸாகத்துடனும் காப்பாற்றக் காதலர்கள் போலப் பாடுபடுபவர்களுக்காக நான் எதுவும் சொல்லவில்லை. நல்லபடியான வேலையில் ஈடுபட்டு, நல்லபடியாக வேலையில் ஈடுபட்டிருப்பதை அறிந்தவர்களுக்கும், அறியாதவர்களுக்கும் நான் எதுவும் சொல்லவில்லை. நான் சொல்வதெல்லாம் முக்கியமாக அதிருப்தி யடைந்தவர்களுக்குத்தான்; காலமும், இவ்வுலகில் தங்கள் நிலைமையும் எவ்வளவு கடினமானதாக இருக்கிறது என்று எப்பொழுது பார்த்தாலும் குறைப்பட்டுக் கொண்டிருப்பவர்களுக்குத்தான் நான் சொல்ல வேண்

டியது நிறைய இருக்கிறது. இப்படிப்பட்டவர்கள்தான் இன்று நம்மிடையே அதிகம். மற்றவர்களைவிடச் சிலர் அதிக விருவிருப்புடனும், ஆறுதலையற்ற பாணியிலும் குறைப்படுபவர்களாக இருக்கிறார்கள்; தங்கள் கடமைகளை உரியபடிச் செய்து கொண்டிருப்பதாக அவர்கள் எப்போதுமே சொல்லிக் கொண்டிருப்பவர்கள். இவர்களைத் தவிர இன்னொரு வகுப்பினரையும் மனசில் வைத்துக் கொண்டு இதையெல்லாம் நான் எழுதுகிறேன்; அவர்கள் மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்போது பணக்காரர்கள்; உண்மையில் பயங்கரமான பரம ஏழைகள்; குப்பை கூளங்களை ஏராளமாகச் சேர்த்து வைத்துக் கொண்டு விட்டார்கள்; அதை உபயோகிக்கவும், தொலைத்து முழுகவும் வழி அறியாதவர்கள்; இப்படியாகத் தங்களைப் பிணைக்கும் தங்கம் அல்லது வெள்ளிச் சங்கிலிகளை அவர்களே உண்டாக்கிக் கொண்டவர்கள்; அவர்களையும் உத்தேசித்தே நான் எழுதுவதை எழுதுகிறேன்.

என் வாழ்க்கையில் சென்று போன வருஷங்களை எப்படியெல்லாம் கழிக்கவேண்டும் என்று நான் விரும்பி வந்திருக்கிறேன் என்று சொன்னேன் என்றால், எல்லோருமே ஆச்சரியப்படுவார்கள். என் வாழ்க்கைச் சரிதத்தை ஓரளவு அறிந்தவர்கள் மட்டுமின்றி, என்னைப் பற்றிச் சிறிதும் அறியாதவர்களும் கூட ஆச்சரியப்படுவார்கள். நான் செய்ய வேண்டும் என்று எண்ணிய சில விஷயங்களைப் பற்றி மட்டும் இங்கு குறிப்பிடுகிறேன்.

இரவு பகல் எந்த நேரத்திலும், எந்த சமயத்திலும், காலத்தின் முடிச்சைப் பெரிதாக்கிப் பார்க்கவேண்டும் என்று நான் ஆசைப்பட்டதுண்டு. அதாவது இரண்டு நித்தியத்வங்களிற்கு மத்தியில் நின்று, பழசு புதுசு என்கிற இரண்டு நித்ய காலங்களும் சந்திக்கும் அந்த விநாடியை முக்கியமானதாக உணர நான் பெரிதும்

முயன்று பார்த்திருக்கிறேன், இரண்டு எல்லையற்ற பரந்த பிரதேசங்களைப் பிரிக்கும் இந்த விநாடி எனும் புள்ளியிலே நிலைத்து நின்று பார்க்க நான் முயன்றிருக்கிறேன். இது புரியாவிட்டால் என்னை மன்னிப்பீர்கள் என்று நம்புகிறேன்; ஏனென்றால் எல்லா வியாபாரங்களிலும் உள்ளது போல என் வியாபாரத்திலும் சில தந்திரங்கள் உண்டு. இந்தத் தந்திரங்களை என்னையும் மீறியே நான் அனுசரிக்க வேண்டியதாக இருக்கிறது. என்னைப் பற்றிய வரையில் எதையும் திறந்து சொல்லிவிட நான் தயார். எனக்குத் தெரிந்தவரையில் எந்தப் பிராந்தியத்திலுமே "உள்ளே வரக்கூடாது" என்று அறிக்கை ஒட்ட நான் தயாராக இல்லை.

வெகு காலத்துக்கு முன் நான் ஒரு வேட்டை நாயையும், ஒரு குதிரையையும், ஒரு டார்ட்டில் புறுவையும் இழந்தேன். அவற்றை இன்னமும் தேடி அலைந்து கொண்டிருக்கிறேன். அவற்றைப் பற்றி நான் பேசி விசாரித்த வழிப்போக்கர்கள் பலர்; அவை எப்படி இருக்கும், எந்தக் குரலுக்குப் பதில் தரும் என்றெல்லாம் பலருக்கு விவரித்திருக்கிறேன். ஒன்றிரண்டு பேர் என் வேட்டை நாய் குரைப்பதை கேட்டதாகச் சொன்னார்கள்: வேறு சிலர் அந்தக் குதிரையின் குளம்பொலியைக் கேட்டிருப்பதாகச் சொன்னார்கள்; அந்தப் புறு மேகத்துக்கப்பால் பறந்து செல்வதைப் பார்த்ததாகக்கூடச் சிலர் சொன்னார்கள். தாங்களே அவற்றை இழந்து விட்டவர்கள் போல் எனக்காக அவர்களும் அவற்றைத் திரும்பவும்பெற ஆசைப்பட்டார்கள்.

சூரியோதயத்தையும், பகலின்வரவையும் எதிர் பார்த்து வரவேற்பது போதாது. சாத்தியமானல் இயற்கையையே எதிர்பார்த்து வரவேற்கவேண்டும்! கோடையிலும் மாரியிலும், எத்தனையோ அதிகாலைப் பொழுது

களில், அண்டை அயலில் யாரும் எழுந்திருக்குமுன் நான் எழுந்து என் அலுவல்களைக் கவனித்திருக்கிறேன். என் ஊர்க்காரர்களில் பலர் நான் திரும்பும்போது என்னைச் சந்தித்திருப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை; குடியானவர்களில் பலர் அப்பொழுதுதான் எழுந்து போஸ்டன் நகருக்குக் கிளம்பிக்கொண்டிருப்பார்கள்; மரம் வெட்டிகள் அப்பொழுதுதான் எழுந்து கூலி வேலை செய்யக் கிளம்பிக் கொண்டிருப்பார்கள். சூரியன் உதயமாவதற்கு நான் எவ்விதத்திலும் உதவி செய்ததில்லை என்பது உண்மைதான்; ஆனால் சூரியன் உதயமாகும்போது அங்கு இருப்பது என்பதே அதிமுக்கியமான விஷயம் என்பதும் உண்மைதான்.

மாரிக்காலத்திலும், இலையுதிர்காலத்திலும் எத்தனையோ நாட்கள், நகருக்கு வெளியே காற்று என்னதான் சொல்லுகிறது, எதைத்தான் தூக்கி வருகிறது என்பதைக் கவனித்துக்கொண்டு நின்றிருக்கிறேன். அதை நானும் கேட்டு, சுமந்து செல்லவேண்டும் என்று நான் விரும்பியதுண்டு. என் கையிலிருந்த முதலில் பெரும்பகுதியை நான் இந்த விஷயத்தில் வீணாக்கிவிட்டேன்; காற்றை எதிர்த்து ஓடி என் மூச்சுக்கூடப் பல தடவைகளில் திணறியதுண்டு. இரண்டு அரசியல் கட்சிகளும் சம்பந்தப்பட்ட விஷயமாக மட்டும் இருந்திருந்தால் இச்செய்தி கெஸட்டில்கூட வெளிவந்திருக்கும் என்பதில் சந்தேகமே யில்லை. எத்தனையோ தடவைகள் குன்றின் உச்சியிலோ, ஒரு மரத்தின் உச்சியிலோ ஏறி நின்று, வானத்தையும் பூமியையும் கண்களால் துருவித் தேடி, புதுசாக வருவது என்னென்ன என்று முன் கூட்டியே அறிந்துகொண்டு அறிவிக்க முயன்றிருக்கிறேன். மாலையில் மலையுச்சியிலே நின்றுகொண்டு, வானம் இடிந்து விழும், அதில் சில துணுக்குகளையேனும் கையில் பிடித்து

விடவேண்டும் என்று நான் பொறுமையுடன் காத்திருந்த துண்டு. என் கையில் அதிகமாக எதுவும் சிக்கியதில்லை; சிக்கியதும் கூட, அமிர்தம்போல, சூர்ய ஒளியிலே கரைந்து மறைந்துவிடும்.

பலநாள் நான் ஒரு பத்திரிகையின் நிருபனாக இருந்தேன். நிறையப் பிரதிகள் செலவான பத்திரிகை அல்ல அது, தவிரவும் என் நிருபர் கடிதங்களில் பெரும் பகுதியை அதன் ஆசிரியர் வெளியிடக் கூட வெளியிடவில்லை. எழுதுகிறவர்களில் பெரும்பாலோருக்கு நேருவது போல எனக்கும் என் எழுத்துக்களுக்குக் கிடைத்த கூலி நான் பட்ட சிரமம் ஒன்றுதான். ஆனால் இந்த விஷயத்தில் இது எனக்குத் திருப்திகரமானதாகத்தான் இருந்தது.

பல வருஷங்கள் நான் சுயமாகவே பனிப்புயல்களுக்கும் மழைப் புயல்களுக்கும் மேற்பார்வையாளனாக இருந்தேன். என்னாலியன்ற அளவில் உண்மையாகவே இந்த வேலையில் நான் பாடுபட்டேன். ராஜபாட்டைகளில்லாவிட்டாலும், காட்டுப்பாதைகளும் குறுக்குப் பாதைகளும் வீணாகிவிடாமல் செப்பனிட்டு, வருஷத்தில் எல்லா மாதங்களிலும் சரியானபடி இருக்கும்படிப் பார்த்துக் கொண்டேன். உபயோகமான பாலங்கள், செங்குத்தான சரிவுகள் எல்லாம் சரியானபடி இருக்கின்றனவா என்று கவனித்துக்கொண்டேன்.

நகரத்தை ஒட்டிய காட்டுப் பிராணிகளை எல்லாம் நான் கவனித்துக் கொண்டேன்; அவை வேலிகளைத் தாண்டி நாணயஸ்தர்களான இடையர்களுக்குத்தொந்தரவு கொடுத்தன. வயல் வெளிகளில் மனித சஞ்சாரம் அதிகமில்லாத பகுதிகளை யெல்லாம் நான் கவனித்துக் கொண்டேன். ஆனால் எந்த வயலில் இன்று ஸாலமனோ, ஜோனஸோ வேலை செய்தான் என்பது வேண்டுமானால் எனக்குத் தெரியாதே தவிர, மற்றதெல்லாம் எனக்குத்

தெரியும். அதை மட்டும் நான் என் காரியம் என்று எண்ணவில்லை. சிவந்த ஹக்கிள்பெர்ரி, மண்செர்ரி, சிவந்த பைன், கருத்த ஆஷ், மற்றும் முள்மரம் இவற்றிற் கெல்லாம் தண்ணீர் ஊற்றிக் கோடையிலும் அவை வாடி விடாமல் நான் பார்த்துக் கொண்டேன். வெள்ளை திரா க்ஷையும் மஞ்சள் வயலெட் செடிகளும் நானில்லாவிட் டால் பட்டுப் போயிருக்கும் என்பது நிச்சயம்.

சுருக்கமாகச் சொன்னால் நான் பல நாள் என் காரி யத்தைச் செவ்வனே செய்து வந்திருக்கிறேன் என்றுதான் சொல்ல வேண்டும். வெறும் தற்பெருமையல்ல இது. நகரத்தின் உத்தியோகஸ்தர்களில் ஒருவனாக என்னை நகர வாசிகள் ஏற்கமாட்டார்கள் என்பது எனக்கு நாளடை வில்தான் தெளிவாகத் தெரிந்தது, சொல்ப ஊதிய மாவது தந்து என் உத்தியோகத்தைச் சுலபமாக்குவார்கள் என்று நான் எதிர்பார்ப்பதற்கில்லை என்பது எனக்குத் தெளிவாகத் தெரிந்தது, நான் என் கணக்குவழக்குகளை நாணயமாகத்தான் வைத்துக் கொண்டு வந்திருக்கிறேன் எனினும் இவற்றை நான் 'ஆடிட்' செய்யவில்லை; அதிகாரிகளின் அங்கீகாரம் பெறச் செய்யவில்லை; கணக் குத் தீர்த்துப் பணம் பெற்றுக் கொள்ளவில்லை. ஆனால் அதைப்பற்றி நான் வெகுவாக ஆதுரப்படவில்லை.

சில நாட்களுக்கு முன் ஒரு நாடோடி இந்தியன் நகரில் எனக்குப் பக்கத்தில் வசித்துவந்த ஒரு பிரபல வக்கீ லுடைய வீட்டில் கூடைகள் விற்கப் போனான். "கூடை கள் வாங்க விரும்புகிறீர்களா?" என்று விசாரித்தான். "வேண்டாம், தேவையில்லை" என்று பதில் வந்தது. "என்ன அது? எங்களையெல்லாம் பட்டினி போட்டுக் கொல்லவா பார்க்கிறீர்கள்?" என்று சொல்லிக்கொண்டே வெளியேறினான் அந்த இந்தியன். பாவம்! சுருசுருப் பான வெள்ளையர்கள் ஏதோ செய்து பணக்காரர்களா

வதைக் கண்டவன் அவன். அந்த வக்கீல் வாதப்பிரதி வாதங்களைப் பின்னிப் பின்னிப் பணமும் பவிஷும் சம்பாதிப்பதைக் கண்டவன்—தானும் ஏதாவது செய்து அதே மாதிரிப் பொருளும் பதவியும் ஈட்டி விடலாம் என்று எண்ணிவிட்டான்! நானும் வியாபாரம் செய்கிறேன்; எனக்குக் கூடை பின்னத்தெரியும்; கூடைகள் பின்னுகிறேன் என்று தொடங்கி விட்டான். கூடைகள் பின்னுவதுடன் தன் காரியம் முடிந்துவிட்டது என்று அவன் எண்ணி விட்டான், கூடைகள் தயாரானவுடனேயே வெள்ளையன் அவற்றை வாங்கிவிடுவான் என்று அவன் எண்ணி விட்டான். மற்றவனுக்கு அதை வாங்குவது அவசியம் என்று தோன்றும்படிச் செய்ய வேண்டியது தன் பொறுப்பு என்று அவன் உணரவில்லை, அதேபோல நானும் ஒரு கூடை பின்னிவிட்டேன்; அழகான கூடை தான்; நேர்த்தியான பின்னல் தான். ஆனால் என் கூடைகளை வாங்குவது அவசியம் என்று யாரும் உணரும்படி நான் செய்யவில்லையே! அது எப்படியானாலும், என்னைப் பற்றிய வரையில், அந்தக் கூடைகளைப் பின்னுவதே போதுமானது என்று நான் எண்ணினேன். பிறர் அவற்றை வாங்கும்படியாகப் பண்ணுவதைவிட. அவற்றை விற்காமலிருப்பது எப்படி என்கிற விஷயத்தில் நான் அதிக கவனம் செலுத்தினேன். மனிதர்கள் வெற்றிகரமானது என்று புகழ்ந்து மதிப்புத் தரும் வாழ்க்கை, வாழ்க்கை வழிகளிலே ஒன்று தான். மற்ற வழிகளை இகழ்ந்து ஒதுக்கிவிட்டு நாம் ஒன்றை மட்டும் மதிப்பது, புகழ்வது ஏன்?

நகரத்தில் என்னுடன் வசித்தவர்கள், நகரப்பொதுவில் எனக்கு இருக்க இடம் தரமாட்டார்கள் என்பது தெரிந்தது—என் உத்தியோகத்தையும் ஏற்று கூலி தர மாட்டார்கள் என்பது தெரிந்தது. நானாகவே தான் வேறு

இடமும் வழியும் தேடிக்கொள்ள வேண்டும் என்று நான் வேண்டுமென்றே எனக்கு அதிகப் பச்சிசயமான காட்டுப் பக்கம் திரும்பினேன். முதல் என்று எதற்காகவும் காத்துக் கொண்டிராமல், கையில் உள்ள சொல்பத்தையே கொண்டு, வியாபாரம் தொடங்குவது என்று துணிந்து விட்டேன். நான் வால்டன் ஏரிக்கரையில் வாழப்போன தற்குக் காரணம், வாழ்க்கை மலிவாகவோ அல்லது ஐசு வரியம் நிறைந்ததாகவோ இருக்கவேண்டும் என்பதற்காக அல்ல. என் சொந்த வியவகாரங்களை அதிக இடைஞ்சல் கள் இல்லாமல் நடத்தவேண்டும் என்பதற்காகத் தான் போனேன். சொல்ப அறிவும். சிறிதளவு வேகமும், வியா பார தந்திரமும் அறியாமல் இந்த சொந்த வியவகாரங்களை நழுவ விட்டுவிடுவதென்பது துக்ககரமானதல்ல— அசட் டுத்தனமானது என்று நான் எண்ணினேன்.

கண்டிப்பான வியாபார பழக்க வழக்கங்களை அடைய நான் எப்போதுமே முயன்று வந்திருக்கிறேன். ஒவ்வொரு வனுக்கும் அவை அத்யாவசியமாகும். உன் வியாபாரம் கடலுக்கப்பாலுள்ள சாம்ராஜ்யத்துடன் நடப்பது வானல், சேலம் துறைமுகத்தில் கரையோரத்திலுள்ள ஒரு கடை தலைமைக் காரியாலயமாக உபயோகப்படும்; நாட்டில் அகப்படுகிற சாமான்களை ஏற்றுமதி செய்வாய்; பனிக்கட்டி, பைன் மரம், ஏதோ கொஞ்சம் கெட்டிக்கல் இவற்றை நாட்டுப் படகுகளில் ஏற்றி அனுப்புவாய். இதெல்லாம் நல்ல பலன் தரும் வியாபாரங்கள். நீயாகவே எல்லா அம்சங்களையும் மேற்பார்வை பார்த்துக்கொள்ள லாம். மாலுமியும் கப்பித்தானும் நீயே தான்; சொந்தக் காரனும் தள்ளுபடி செய்பவனும் நீயே தான். நீயே வருகிற கடிதங்களை எல்லாம் படித்துப் பதில் எழுத வேண்டும். இரவு பகலாக நீயே இறக்குமதிப் பொருள் களை ஏற்றுக் கொள்ளவேண்டும். ஒரே சமயத்

தில் பல துறைமுகங்களில் இருந்தாகவேண்டும் நீ. நீயே தந்தி போலப் பேசவேண்டும். கண்ணில்படுகிற கப்பல்களுடன், எங்கேயோ தொலைவில் இருந்து கொண்டு, திருப்தியே யடையாத ஒரு தேசத்துக் குத் தேவைப்படுவதை யெல்லாம் முன் கூட்டியே உணர்ந்து நீ அனுப்பியாகவேண்டும். ஊர்ச் சந்தை களின் விவரங்கள் பூராவும் உனக்குத் தெரியவேண்டும். அமைதி எங்கு எப்போது நிலவும்—சண்டை எப்போது வரும் என்று நீ அறிந்திருக்கவேண்டும். வியாபாரம் எப்படி முன்னேறும், நாகரிகம் எந்தப் பாதையில் செல் லும் என்று நீ அறிந்திருக்கவேண்டும். இதிலே புதுப் புது வழிகள், புதுப்புது உத்திகள் எல்லாவற்றையும் லாபகரமாக உபயோகிக்க அறிந்திருக்கவேண்டும். கணக் குகள் போடவேண்டும்—புதுப் படங்களை அடிக்கடி பார்த்து கடலில் ஏற்படக் கூடிய ஆபத்துக்களையும் விபத்துக்களையும் தாண்டிச் செல்லத் தெரிந்து கொண் டிருக்கவேண்டும். விஞ்ஞான முன்னேற்றத்துடன் நீயும் முன்னேறவேண்டும், எல்லாவற்றிற்கும் மேலாக கொடுக்கல் வாங்கல், கொள்முதல் விற்பனைப் புள்ளி விவரங்கள் எல்லாம் விரல் நுனிகளில் தயாராக இருக்க வேண்டும், ஒரு மனிதனின் எல்லாச் சக்திகளுக்கும் ஈடு கொடுத்து வேலை வாங்கக் கூடிய காரியம் இது— லாப நஷ்டம், வட்டி முதல், வாங்கல் விற்றல், அளவு கோல்களால் தளர்த்தல், ஒப்பிட்டுப் பார்த்தல் இப்படி யாக உலகத்து ஞானம் பூராவும் உபயோகப்படும் விஷ யம் இது.

என் வியாபாரத்துக்கு வால்டன் ஏரி நல்ல இடம் என்றுதான் எண்ணினேன். ரெயில்வேயும் ஐஸ்பாதை யும் அருகில் இருப்பதனால் மட்டும் அல்ல. அதிலுள்ள சௌகரியங்களைச் சொல்வது அவ்வளவாக நல்லதல்ல

என்றுதான் தோன்றுகிறது. நல்ல துறைமுகம் அது. அங்கு எதற்கும் அஸ்திவாரம் பலமாகப் போட்டுக் கொள்ளலாம். சதுப்பு நிலமல்ல அது. ஆனால் எழுப்பு கிற ஒவ்வொரு கட்டிடத்துக்கும் நீயே தான் அஸ்தி வாரம் போட்டுக் கொள்ளவேண்டும். அது நேவா சதுப்பு நிலமல்ல. மேல் காற்றும் வெள்ள வேகமும் நேவாவில் பனிக்கட்டியும் சேர்ந்து கொண்டால், ஸெயிண்ட் பீடர்ஸ்பர்க் நகரத்தையே அடித்துக்கொண்டு போய்விடும் என்கிறார்களே—அப்படி ஒன்றும் அங்கு நேர்ந்துவிடாது.

வழக்கமான மூலதனம் எதுவுமில்லாமல் தொடங்கப் போகிற தொழில் இது. ஆகவே, இந்த மாதிரியான முயற்சி களுக்கு அவசியமான வழி வசதிகளுக்கு எங்கே போவது, எப்படி ஏற்பாடு செய்வது என்பது அவ்வளவாக சுலப மாகப் புரிந்து கொள்ளக்கூடிய விஷயமன்று. பிரச்னையின் அடிப்படை, நடைமுறை என்கிறவகையில் ஆடை களைப்பற்றி முதலில் கவனித்தோமானால் தெரிய வருவது என்ன ? நமக்கு புதுமை மோகத்தினாலும் பிறர் செய்கிறார் களே என்கிற காரணத்தினாலும், பிறர் அபிப்ராயங்களை மதித்தும் ஆடைத் தேவைகள் ஏற்படுகின்றன. உப யோகத்தை மட்டும் நாம் கருதுவதில்லை, (கருமத்தில் கண்ணாக இருப்பவன் சிந்தித்துப் பார்த்தால் தெரியும்— ஆடை யுடுப்பதன் அவசியம் என்ன என்பது. முதலில் அது உடலின் உஷ்ணத்தைப் பாதுகாக்கவேண்டும். இரண்டாவதாக, இன்றைய சமுதாய நிலையில், நாம் நிர்வாணமாக நிற்காமல் இருக்க உதவவேண்டும். அவ சியமான முக்கியமான வேலைகள் பலவும் ஆடைப்பெட் டியை நிரப்பிக் கொள்ளாமலே நடந்துவிடும் என்பது தெளிவாக எல்லோரும் அறிந்த விஷயமேயாகும்.) (ஒரே ஒரு தடவைக்கு மேல் எந்த ஆடையையும் உடுத்தாத

ராஜாவுக்கோ ராணிக்கோ பொருத்தமான உடைகள் என்ன என்பது தெரியுமா? சௌகரியமான உடைகள் என்ன என்பது தெரியுமா? அந்த உடைகளைச் செய்து தந்தவன் உயர்ந்த தையற்காரனாகவேதான் இருக்கட்டுமே! ஒருநாள் மட்டும் அணிந்துகொண்டு ஆடைகளை எறிந்துவிடுகிற ராஜாவும் ராணியும் சுத்தமான துணிகள் மாட்டும் ஸ்டாண்டுகளே தவிர வேறு அல்ல. பழகப் பழகத்தான் உடைகள் நம்முடையவையாகின்றன; ஒவ்வொரு நாளும் நம் உடைகள் நம் குணநிசயங்களுக்கேற்றவாறு தாமாகவே மாறி உருப்பெருகின்றன. அவற்றை எடுத்து அப்பால் வைப்பதானல், நம் உடம்பைப் பாதுகாப்பதுபோல, மருந்து இட்டு அரைமனதுடன், பக்திசிரத்தையுடன் வைக்கவே நமக்குத் தோன்றவேண்டும். ஒட்டுப்போட்ட உடைகளை அணிந்திருக்கிருன் என்பதற்காக நான் எந்த மனிதனையும் கீழானவனுக எண்ணியது கிடையாது. இருந்தாலும், பொதுவாக, சுத்தமான மனச்சாட்சியுடன் இருக்கவேண்டும் என்பதில் காட்டப்படும் கவலையைவிட, அதிக கவலையை, நவீன, எடுப்பான ஆடைகளுடன் அல்லது குறைந்தபட்சத்தில் சுத்தமான, ஒட்டில்லாத ஆடைகளுடன் இருக்கவேண்டும் என்பதில் காட்டுகிருர்கள். கிழிந்த உடைக்கு ஒட்டுப் போடாதிருப்பதனல் கூட அதிக பாதகமில்லை—மேலும் கிழியாமல் பாதுகாக்கும் அறிவில்லாதவன் என்று அவனை உலகம் தெரிந்துகொள்ளும்—அவ்வளவுதான். நான் என் நண்பர்களின் தராதரத்தை, குணநிசயத்தை இரவெல்லாம் சிந்தித்துச் சோதித்துப் பார்ப்பது உண்டு; ஒட்டுப்போட்ட துணியை, முழங்காலுக்குமேல் தெரியும்படியாகக் கிழிந்து தைத்த துணியை அணிந்து கொள்ளக் கூடியவன் யார்? இப்படித் துணியணிந்து கொண்டால் தங்கள் வாழ்க்

கையே பாழாகிவிடும் என்று எண்ணுகிறவர்கள் போலத் தான் பெரும்பாலோர் நடந்துகொள்ளுகிறார்கள். தெரு வோடு நொண்டி நொண்டி நடந்துபோகத் தைரியமுள் ளவர்கள் கூடக் கிழிந்த கால் சட்டையை அணிந்து கொண்டு நடக்கத் துணிவது கிடையாது. நமக்குத் தெரிந்தவர்களில் மனிதர்கள் என்று சொல்லக் கூடிய வர்கள் சிலர்தான். ஆனால் சட்டை துணிமணிகளில் மட் டும் ஆயிரமாயிரம் வகைகள் தெரியும் நமக்கு. (வைக்கோல் பொம்மைக்கு உன் சட்டையை அணிவித்துவிட்டு நீ சட்டையில்லாமல் பக்கத்தில் நின்று பார் தெரியும்; பொம்மைக்கு வணங்குபவர்கள்தான் அதிகமாக இருக் கும்.) ஆடைகள் அணிந்து தன் யசமானன் வீட்டை அணுகிய புதிய நபர் ஒவ்வொருவரையும் பார்த்துக் குலைக் கும் ஒரு நாய். நிர்வாணமாக வந்த ஒரு திருடனைப் பார்த்துக் குலைக்காமல் இருந்துவிட்டது என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். துணிகளை அகற்றிவிட்டால் மனிதர்கள் தங்கள் உயர்வு தாழ்வு என்கிற நிலைகளை எப்படிக் காப்பாற்றிக் கொள்வார்கள் என்று ஆச்சரியத் துடன் நான் பல தடவைகளில் சிந்தித்துப் பார்த்த துண்டு. அந்த மாதிரி ஒரு சந்தர்ப்பத்தில் இவர்கள் மரியாதைக்குரிய வர்க்கத்தினர் என்று ஒரு கோஷ்டியைப் பற்றி நாகரிக மடைந்தவர்கள் யாராலாவது திடமாகச் சொல்ல முடியுமா? ஜனநாயகப் பிரதேசமாகிய இந்த நியூ இங்கிலாந்து பிரதேசத்திலேயும் கூட சந்தர்ப்பச் சூழ் நிலையால் ஏற்பட்ட ஐசுவரியமும் அது காரணமாக உயர்ந்த ஆடைகளும் படாடோபமும் ஒரு மனிதனுக்கு உண்டாக்கித் தருகிற மரியாதையை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். ஆனால் இப்படி ஆடைக்கும் படாடோபத் துக்கும் மரியாதை செலுத்துகிற மனிதர்கள் அஞ்ஞானி கள்: அவர்களைச் சீர் செய்ய அவர்களிடையே மதகுரு

ஒருவனை அனுப்பவேண்டியது அவசியம். தவிரவும் ஆடைகள் ஏற்படுத்தித் தந்த ஒரு தொழில் தையல் வேலை—அதை முடிவில்லாதது என்றே சொல்ல வேண்டும்.

செய்வதற்கு என்று ஒன்றைத் திடமாகக் கண்டு கொண்டவன், அதைச் செய்யப் புது ஆடைதேடிக் கொண்டு காலந்தாழ்த்த மாட்டான். பழைய ஆடையே போதுமானது—எத்தனையோ காலமாகப் புழுதி படிந்து அறையில் மூலையில் கிடந்த ஆடையே போதுமானது என்று எண்ணுவான். சேவகனுக்கு உபயோகப்படு வதைவிட, ஒரு வீரனுக்கு அவன் செருப்புகள் அதிக காலம் உழைக்கும் என்பதில் சந்தேகமில்லை. செருப்பு களை விட மனிதனின் கால்கள் அதிக காலமாக இருப் பவை என்பதில் சந்தேகமில்லையே: அவையே போதும் என்றும் இருக்கலாம். அரசியல் சபைகளுக்கும் வேறு சபைகளுக்கும் போகிறவர்களுக்குத்தான் அநேகவித சட்டைகள் வேண்டும். மனிதன் மாறுகிறதற்கு ஏற்ற படி சட்டைகளையும் மாற்றிக் கொள்ளலாம். கடவுளை வணங்குவதற்கு என் இந்தக் கோட்டும் சட்டையும் போதுமானதாக இருக்கும்போது, வேறு எதற்கு எனக்கு வேறு பலவித சட்டைகளும் கோட்டுகளும் வேண்டும்? இனமாக ஏழைக்குக் கொடுக்கக் கூடிய அளவுக்குச் சட்டை பழையதாகி விட்டாலும் கூட, அதையும் உப யோகிப்பவர்கள் இல்லாது போய்விட மாட்டார்கள்— உன்னிடம் பெற்றுக்கொண்ட அந்த சட்டையை தன் னையும்விட அதிக ஏழை ஒருவனிடம் அவன் தந்துவிடு வான். புது ஆடைகள் தேவை என்று இருக்கிற காரியங்களைப்பற்றி ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்று நான் சொல்லுகிறேன். (ஆடைகளை அணிபவன் புதியவனாக மாறவேண்டுமே தவிர, ஆடைகள் மட்டும்

மாறி லாபம் என்ன? புது மனிதன் இல்லாவிட்டால், புது ஆடைகள் எப்படித் தக்கவையாக இருக்கமுடியும்? செய்ய வேண்டிய காரியம் ஏதாவது இருந்தால், பழைய ஆடைகளை அணிந்துகொண்டே அதைச் செய்ய முயல்வது நல்லது. செய்கிற காரியம் முக்கியமே தவிர, எதைப் போட்டுக் கொண்டு அதை நீ செய்தாய் என்பது முக்கியமல்ல. பழைய துணிகள் கிழிந்தாலும் அழுக்கடைந்து போனாலும், நாம் புதிய ஆடைகள் வாங்குவது கூடாது—அதாவது நாமே புது மனிதர்களாக மாறுகிற வரையில் புதுசு வாங்கக்கூடாது.) ஏதாவது ஒரு காரியத்தைத் திருப்திகரமாகச் சாதித்துவிட்டோம் என்கிற நினைவு ஏற்பட்டு, பழைய ஆடைகளை இந்தப் புது மனிதன் அணிவது சரியல்ல என்கிற எண்ணம் ஏற்படுகிற வரையில் புது ஆடைகள் தேடக்கூடாது. கோழிகளுக்குள்ளதுபோல, நம் ஆடைமாற்றும் பருவம் ஒரு முக்கியமான திருப்பமாக நம் வாழ்விலே அமையவேண்டும், லூன்கள் அந்தப் பருவத்தைத் தனிமையில் குட்டைகளில் கழிக்கின்றன. பாம்பு சட்டை யுரிப்பதும், பூச்சி தன் கம்பளிச் சட்டையை உரிப்பதும் உள்ளூற ஏற்படுகிற.ஒரு புரட்சி காரணமாகத்தான்; அகத்தில் ஏற்படுகிற ஒரு புது விரிவு காரணமாகத்தான். உடைகள் நம்முடைய வெளித்தோல்தான்—அழிந்துவிடக் கூடிய ஒரு தோற்றம் தான். அவசியமான ஒரு உள் தேவையில்லாமல் ஆடைகள் மாற்றுபவன் உலகை ஏமாற்றத் துணிபவன் என்றே நான் சொல்வேன். அப்படி ஏமாற்றத் துணிபவன் முதலில் தன் மனச்சான்றினாலும், பிறகு உரிய காலத்தில் உலகினராலும் சாட்டையடிகள் அடிக்கப்படுவான்—தண்டனைக் குள்ளாவான்.

ஆடைக்குமேல் ஆடையாக நாம் அணிகிறோம்—செடிகளில் சில வெளியே அம்சங்கள் சில சேர்த்துச்

சேர்த்து வளருவதுபோல, மெல்லிய அழகிய வெளித் துணிகள் நம்முடைய பொய்த்தோல் போன்றவை. அவை நம் உயிருக்கு அவசியமானவையல்ல. இங்கும் அங்குமாக அவற்றை எடுத்துவிடுவதனுல் நமக்கு எவ் வித கெடுதியும் நேர்ந்துவிடாது. இடைவிடாது அணிந்து கொண்டிருக்கிற தடித்த துணிகள் தோலுக்குள் வளர்ந்து காப்பாற்றுகிற உள் அறைகளைப் போன்றது; அவைதான் மேல் தோலை உள்ளபடி விரித்து வைத்துக் காப்பாற்றுகின்றன. ஆனுல் நமது சட்டைகள் மரப் பட்டைகள் போன்றவை; அவற்றை அகற்றிவிட்டால் மனிதனுக்கே ஆபத்து வந்துவிடும். உன் சட்டை போன்ற ஒரு துணியை உலகில் எந்தப் பாகத்திலுள்ளவர் களானுலும் மனிதர்கள் எப்போதாவது ஒரு சமயம் அணிகிருர்கள் என்று தான் நான் நம்புகிறேன். ஆடை கள் எளியனவாக இருக்கவேண்டும். இருட்டிலேயும் கூடத் தவிக்காமல் அகற்றக் கூடியனவாக இருக்கவேண் டும். ஆடை விஷயத்தில் மட்டுமல்ல—மற்றெல்லா விஷயங்களிலும் கூட தத்துவ ஞானியைப்போல மனிதன் வாழக் கற்றுக் கொள்ளவேண்டும். கோட்டையை எதிரி பிடித்துக்கொண்டு விட்டானுனுல், பழைய ஞானி யைப் போல, அவன் கையில் எதுவும் எடுத்துக்கொள் ளாமல் தனியாக வெளியேறத் தயாராக இருக்கவேண் டும்; கவலைகள் எதுவும் அற்றவனுக இருக்கவேண்டும். கெட்டியான ஒரு துணி மூன்று மெல்லிய துணிகளுக் குச் சமம். அவசியமான துணிகளை எல்லாம் மலிவா கவே ஒருவன் வாங்கிக் கொள்ளலாம். தானே சம் பாதித்து தனக்கு அவசியமான துணிகளை வாங்கிக் கொள்ள முடியாத ஏழை என்று ஒருவனும் இவ்வுலகில் இல்லை! இப்படி வாங்கிக் கொள்பவனை ஞானிகளும் வணங்குவார்கள்.

எனக்கு இந்த மாதிரி ஒரு ஆடை வேண்டுமென்று கேட்டால் என் தையற்காரி சொல்லுகிருள்; "அப்படி அவர்கள் இப்பொழுது தைப்பது இல்லை." 'அவர்கள்' என்பதை அவள் அழுத்தமாகச் சொல்வதில்லை. அவர்கள் என்ருல் யார் என்பதுதான் எனக்குத் தெரியவில்லை. தையற்காரி சொல்வதைக் கேட்டால் அவர்கள் சொல்லி விட்டால் அது விதி; தப்ப முடியாது என்று அர்த்தப் படுகிற மாதிரி இருக்கிறது. நான் கேட்கிற மாதிரி துணியைத் தைத்துத் தரச்சொல்வதற்கு எனக்குப் பெரும் பாடாகிவிடுகிறது. நான் சொல்கிறபடியே செய்ய வேண்டும் என்று விரும்புகிறேன் என்பது அவளுக்குப் புரியவே புரியவில்லை. நான் அசடன் என்று எண்ணு கிருள் அவள். மனித குலத்தின் விதியை நிர்ண யிக்கிற மாதிரி அவள் கூறுகிற வாக்கியத்தைக் கேட்கும் போதெல்லாம், நான் சில விஞடிகள் சிந்தனையில் ஆழ்ந்துவிடுகிறேன்—இந்த வாக்கியத்துக்கு என்னதான் அர்த்தம் என்று கண்டுபிடிக்க நான் வார்த்தை வார்த்தை யாக ஆராய்ந்து பார்க்கிறேன். அவர்களுக்கும் எனக்கும் என்ன உறவு என்பதை ஆராய்ந்து அறிய நான் வெகுவாகச் சிரமப்படுகிறேன். என் சட்டையைப் பற்றிய வரையுல் தீர்ப்புச் சொல்ல 'அவர்கள்' யார், 'அவர்களு'க்கு என்ன உரிமை இருக்கிறது என்பது தான் எனக்குத் தெரியவில்லை. "அவர்கள் நேற்றுவரை அப்படிச் செய்யவில்லை. இன்று செய்கிருர்கள், செய்" என்று பதில் சொல்ல எனக்கு ஆசை தோன்றுகிறது. தையற்காரி என் தோள்பட்டையை மட்டும் அளந்து என்ன பயன்? அதே சமயம் என் குணுதிசயங்களையும் அளக்க வேண்டாமா? இல்லாவிட்டால் என் தோள் பட்டையும் சட்டையை மாட்ட உபயோகப்படும் ஒரு ஸ்டாண்டு தானே! (தேவதை மோஹத்திலோ, கந்தருவ

மோஹத்திலோ அகப்பட்டுக் கொண்டு இன்று உழல வில்லை நாம்; மோஸ்தர் மோஹத்திலே அகப்பட்டு உழலு கிறோம். நூற்று, நெய்து, வெட்டி, மோஸ்தர் நாகரிகம் நம் ஆடைகளின்மேல் ஆதிக்கம் செலுத்துகிறது. பாரிஸிலுள்ள தலைமைக் குரங்கு ஒரு குல்லாயை அணிந்து கொள்ளுகிறது. உடனே அமெரிக்காவிலுள்ள குரங்கு கள் எல்லாம் அதே மாதிரிக் குல்லாய்களை அணிந்து கொள்ளுகின்றன.) எளிய நாணயமான காரியம் எதை யும் செய்து முடிக்க மனிதர்கள் யாரும் உபயோகப்பட மாட்டார்கள் என்று சில சமயம் எனக்கு அச்சமாக இருக்கிறது. ஒரு பலமான அமுக்கு யந்திரத்திலே போட்டு அமுக்கி, அவர்களுடைய பழைய கொள்கை களை யெல்லாம் பிழிந்து எடுத்துவிட்டால் தேவலை என்று எனக்குத் தோன்றுகிறது. அப்படியும் கூடப் பழைய சிந்தனைகளில் ஏதாவதொன்று எங்கேயாவது ஒளிந்திருந்து ஒரு முட்டையிட்டு மனிதர்கள் புது மனிதர்களாகாமல் தடுத்துவிடும் என்று எனக்குப் பயமாகத்தான் இருக் கிறது. தீ கூட இந்த அசட்டுத்தனங்களை எரித்து அழித்துவிடாது. இதற்காக நாம் படுகிற சிரமங்கள் வீண் என்று தான் சொல்லவேண்டும். இருந்தாலும் எகிப்திய மம்மி ஒன்றின்மூலம் நமக்கு எகிப்திய கோதுமை கொஞ்சம் கிடைத்தது என்பதை நாம் மறந்து விடக் கூடாது.

மொத்தத்தில் சொல்லப்போனால், ஆடைகள் உடுத் துவது என்பது இந்தத் தேசத்திலோ, வேறு எந்தத்தேசத் திலோ ஒரு கலை அந்தஸ்துக்கு உயர்ந்திருக்கிறது என்று சொல்ல முடியாது. அகப்படுவதை அணிவது என்று தான் மனிதர்கள் காலந்தள்ளி வருகிறார்கள். கப்பல் உடைந்து முன்பின் அறியாத தீவிலே சிக்கிய மாலுமிகள் போல, கரையில் கிடைக்கும் துணிமணிகளை அணிந்து

கொள்கிறார்கள் : அணிந்து கொண்டு ஒருவர் வேஷத்தைப் பார்த்து மற்றவர் சிரித்துக் கொந்தளிக்கிறார்கள். பழைய மோஸ்தர்களைப் பார்த்து நகைக்கிற இந்தத் தலைமுறையினர், புது மோஸ்தர்களை ஒரு மதத்தைப் பின்பற்றுவதைப் போலப் பின்பற்றுகின்றனர். எட்டாம் ஹென்ரி, ராணி எலிஸபெத் இவர்களின் ஆடைகளைக் கண்டு நாம் நகைக்கிறோம்; நரபக்ஷிணிகளான காட்டுமிராண்டிகளின் ராஜாவோ ராணியோ அணிந்துள்ள ஆடைகளைக் கண்டு நகைப்பது போலவே நகைக்கிறோம். மனிதன் அணியாத ஆடை வேடிக்கையாகவும், பார்க்கப் பரிதாபமாகவும் இருக்கிறது. உள்ளே மனிதன் இருப்பதனால் தானே ஆடைக்கு மதிப்பு. பார்க்கும் கண்ணின் பொருத்தமான நோக்கும், உள்ளொளியுடன் வாழ்ந்த வாழ்க்கையுமே எந்த மக்களுடைய வாழ்வுக்கும் அர்த்தம் தருகின்றன, அவர்களுடைய உடைகளுக்கும் புற அம்சங்களுக்கும் அர்த்தம் தருகின்றன. விநோதமான உடை அணிந்தவர்களும் கூட மதிப்புக்குரியவர்களாக இருக்கக் கூடாது என்று உண்டா என்ன? கோமாளி வேஷம் பூண்டவனுக்கு வயிற்று வலி வந்தால், அவன் உடைகள் அந்த வலிக்கும் ஈடு சொல்லித் தானேயாக வேண்டும்? பீரங்கிக் குண்டால் அடிபட்டு விழுகிற போர்வீரனின் கந்தலும் கூட ராஜாவின் சிவப்பு நிற ஆடைகளுக்கு ஈடானவையாக ஆகிவிடுகின்றன என்பதில் சந்தேகம் என்ன?

ஆண்களுக்கும் பெண்களுக்கும் இன்றுள்ள ருசி மிகவும் குழந்தைத் தனமானது. காட்டுமிராண்டித் தனமானது. புதுசு புதுசாக அவர்கள் தேடுகிற வர்ண விசித்திரங்களை உண்டாக்கித் தருவதற்காகப் பலர் வர்ண ஜால வேடிக்கைக் குழாய்களைத் திருப்பித் திருப்பி மண்டையை உடைத்துக் கொள்கிறார்கள் இந்த ருசி மிகவும் மேலெழுந்த வாரியானது என்பதை உற்பத்தியாளர்கள் கண்டு

கொண்டு விட்டார்கள். இரண்டு ரகத்துணிகளில், ஒரு இழை வர்ணம் அதிகம் உள்ளது எத்தனையானாலும் வியாபாரமாகி விடுகிறது, மற்றது எத்தனை நாளானாலும் இருந்த இடத்தை விட்டு இறங்குவதேயில்லை. கொஞ்ச நாளில் இரண்டாவது ரகம் அதி அபாரமாக விற்க ஆரம்பிப்பதும் உண்டு—முதல் ரகத்தைக் கேட்பாரில்லாமல் போய்விடுவதும் உண்டு. இதனுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் பொது, பச்சை குத்திக் கொள்வது என்பது அப்படி ஒன்றும் காட்டுமிராண்டித் தனமான வழக்கம் அல்ல. அந்த அச்சு தோல் ஆழந்தான்; மாற்றமுடியாதது தான்; அதனாலேயே அது காட்டுமிராண்டித் தனமானது என்று சொல்லி விடமுடியாது!

மனிதர்களுக்குத் துணிகள் தயார் செய்து தருகிற காரியத்தில் நமது தொழிற்சாலை முறை தான் சிறந்தது என்று எனக்குத் தோன்றவில்லை. நம் தொழிலதிகாரிகளின் நோக்கங்களும் ஆங்கிலேயர்களுடையதைப் போலாகிக் கொண்டிருக்கின்றன. அதைப் பற்றி ஆச்சரியப்பட ஒன்றுமில்லை. நான் கேள்விப்பட்டு அறிந்து கொண்ட வரையில் இந்த நெசவாலைகளின் நோக்கம் மக்கள் நன்றாகவும் நாணயமாகவும் ஆடைகள் அணிந்திருக்க வேண்டும் என்பதல்ல. ஆலைகளில் முதல் போட்டிருப்பவர்கள் பணக்காரர்களாக வேண்டும் என்பதைத் தவிர வேறு எவ்வித நோக்கமும் இல்லாமல் இந்தத் தொழிற்சாலைகள் இயங்குகின்றன. நாளடைவில் மனிதர்கள் குறிபார்க்கிறதைத்தான் எட்டிவிடுவார்கள்: ஆகவே மனிதர்கள் மட்டமானதைவிட்டு உயர்ந்த தொன்றைக் குறிக்கோளாகக் கொள்ளவேண்டியது மிக மிக அவசியம். குறிக்கோள் உயர்ந்ததாக இருந்தால், உடனடியாகத் தோல்வி ஏற்பட்டாலும் கூடப் பாராட்டாதிருந்து விடலாம்.

தங்குமிடம் என்பது வாழ்க்கைக்கு இன்றியமையாதது என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். இப்போது அதை மறுப்பதற்கில்லை. இருந்தாலும் இதையும்விடக் குளிரான பல பிரதேசங்களில் பலர் தங்குமிடம் என்று ஒன்றுமில்லாமலே வசிக்கிறார்கள் என்பதற்கு உதாரணங்கள் பல உண்டு என்று சொல்லவேண்டியதாக இருக்கிறது. ஸாம்யுவல் லேங் என்பவர்சொல்வதைக் கவனியுங்கள்: "தோலாலான ஆடையை உடுத்திக்கொண்டு ஒரு தோல் பையைத் தலைக்கும் தோளுக்கும் உறையாகப் போட்டுக்கொண்டு லாப்லாந்தைச் சேர்ந்தவன் இரவுக்குப் பின் இரவு பனியிலேயே படுத்துறங்குவான்.........அந்தக் குளிரில் உஷ்ணமான கம்பளிஆடை அணிந்தவன் விரைத்துச் செத்துப்போவான்." இப்படி லாப்லாந்தர்கள் தங்க ஒரு இடம் தேடாமல் திறந்த வெளியில் பனியில் படுத்து உறங்குவதைப் பார்த்தவர் அவர். "லாப்லாந்தர்கள் அப்படி ஒன்றும் மற்றவர்களைவிடத் திடசாலிகள் என்று சொல்லமுடியாது." ஆனால் ஒன்று, மனிதன் பூமியில் அதிகநாள் வசிப்பதற்குள்ளாகவே வீடு என்கிற வசதியை, அதன் சௌகரியங்களைக் கண்டு கொண்டுவிட்டான் என்றுதான் சொல்லவேண்டும். குடும்ப சௌகரியங்கள் என்பதற்கு அடிநாட்களில் வீட்டுச் சௌகரியங்கள் என்றுதான் அர்த்தம் இருந்திருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. மித சீதோஷ்ணப் பிரதேசங்களில் வசிக்கும் பலருக்கு வருஷத்தில் பல நாட்கள் வீடு என்பது ஒரு சௌகரியமாகவே தோன்றாமலிருந்திருக்கலாம், மாரிக் காலத்தில். கடுங்குளிரில், ஒதுங்க, படுக்க ஒரு இடம் என்பது தவிர வேறு எவ்வித சிந்தனையும் வீடுபற்றி இல்லாதிருந்திருக்கலாம். நம் சீதோஷ்ணநிலையில் கோடையில் இரவில் படுக்க ஒரு இடம் என்பது தவிர நாம் வீட்டைப் பற்றி நினைக்க வேறு எவ்வித அவசியமும் இல்லை என்றே

வைத்துக்கொள்ளலாம். வெளியுலகிலே தங்கிப் பழகி விடக்கூடிய, அளவிலே பெரியவனாக மனிதன் படைக்கப் படவில்லை. அவன் தன் உலகத்தைக் குறுக்கிக் கொள்ள விரும்பியதில் அதிசயம் ஒன்றுமில்லை; தனக்கேற்றமாதிரி தன் பிரபஞ்சத்தைச் சுவர்கள் போட்டுத் தடுத்துச் சின்ன தாக்கிக்கொள்ள அவன் விரும்பியதில் தவறு எதுவும் இல்லை, முதலில் அவன் வெளியேதான் இருந்திருப்பான். மிதமான வெப்பத்திலும் குளிரிலும் இது சௌகரிய மாகவே இருந்திருக்கும். ஆனால் மழை கொட்டும்போதும் உஷ்ணம் அதிகமாகும்போதும், மாரிக் குளிரிலும் அவன் வீடு என்று ஒரு சாதனத்தைக் கண்டுபிடித்துக் கொண்டு ஒதுங்கியிராவிட்டால் மனிதகுலமே நசித்துப் போயிருக் கும். துணிமணிகளை அணியுமுன் முதல் மனிதர்களான ஆதாமும் ஈவாளும் தங்குவதற்கு ஒரு நிழலடர்ந்த பிர தேசத்தைக் கண்டுபிடித்துக் கொண்டனர் என்றுதான் கதை சொல்லுகிறது. மனிதனுக்கு ஒரு வீடு தேவைப்பட் டது. உடம்புக்கு முதலில் கதகதப்புத் தேடிக்கொண் டான் அவன். பிறகு வீட்டிலே உள்ளத்துக்கும் கதகதப் புத் தேடிக் கொண்டான் என்று சொன்னால் அது மிகையேயாகாது.

மனித குலத்தின் குழந்தைப் பருவத்திலே என்ன நடந்திருக்கும் என்று நாம் கற்பனை செய்துகொள்ளலாம். முன்னேக்குள்ள ஒரு தைரியசாலி தங்குவதற்கு இட மொன்று பாறைகளுக்கிடையே ஒரு பொந்தில் பிடித்துக் கொண்டிருந்திருப்பான். ஒவ்வொரு குழந்தையுடனும் பிரபஞ்ச வாழ்வு மீண்டும் திரும்புகிறது என்று நாம் வைத் துக் கொள்ளலாம்; மழையோ குளிரோ குழந்தை பதுங்கிக் கொள்ளாமல் வெளியே நிற்கத்தான் ஆசைப்படுகிறது. அதன் உள்ளுணர்ச்சிகள் தூண்டுகிறபடி ஒவ்வொரு குழந்தையும் வீடுகட்டி விளையாடுகிறது. குதிரை விளை

சாத்திக் கொண்டு உள்ளே ஒரு மனிதன் தங்கிவிடலாமே என்று நான் எண்ணுவேன். காதல் புரிய சுதந்திரமும் தனிமையும், உள்ளமைதியும் அடைவதற்கு அந்தப் பெட்டி போதாதா என்ன? தங்குமிடங்களில் அது அவமதிக்கத் தக்கதாகவோ அல்லது மஹாமோசமானதாகவோ எனக்குத்தோன்றவில்லை. இரவில்எவ்வளவு நேரம்வேண்டுமானாலும் இஷ்டப்படி உட்கார்ந்து கொண்டிருக்கலாம். இஷ்டப்படி எங்குவேண்டுமானாலும் போகலாம், துரத்திக் கொண்டு வீட்டுக்காரன் என்று யாரும் வரமாட்டான். இதைவிடப் பெரிதாகவும் படாடோபமாகவும் உள்ள ஒரு பெட்டியை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு எவ்வளவுபேர் வாடகை தரமாட்டாமல் அவஸ்தைப்படுகிறார்கள்! அவர்கள் இந்தப் பெட்டிகளில் தங்கினால் குளிரால் விரைத்து உயிர்விட்டுவிடுவார்களா என்ன? நான் கோமாளித்தனமாக விளையாட்டுக்குச் சொல்லவில்லை இதை. பொருளாதாரம் என்பதைக் கோமாளித்தனமாகப் பேசித் தீர்த்துவிட முடியாது. பிரச்னை வேடிக்கையாகப் பேசுவதால் மட்டும் தீர்ந்துவிடாது. வளம் அதிகமில்லாத திடமுள்ள ஒரு மனித ஜாதியினருக்கு ஏற்ற மாதிரியான வீடுகள் ஒரு காலத்தில் இங்கு கட்டப்பட்டுத் தானே வந்தன? அவர்கள் பெரும்பாலும் வீட்டுக்கு வெளியே வசித்துவந்தார்கள். ஆனால் வீடுகள், தங்குமிடங்கள், அவர்களுக்கும் தேவையாக இருந்தன. அவற்றை வெகு சுலபமாகக் கிடைத்த சாமான்களைக் கொண்டு, தங்கள் தேவைகளுக்கேற்றபடி அவர்கள் கட்டிக் கொண்டார்கள். இந்தப் பிரதேசத்தில் வசித்த இந்தியர்களின் வீடுகளைப்பற்றி கூகின் என்பவர் 1674-ல் எழுதியிருக்கிறார்: "அவர்களுடைய வீடுகளில் சிறந்தவற்றின் கூரைகள், இறுக்கமாக, நெருக்கமாக, மரப்பட்டைகளாலானவை......சற்றுத் தரம் குறைந்த வீடுகளின் கூரைகள்

இவ்வளவு இறுக்கமாகவோ நெருக்கமாகவோ இரா. அவை ஒருவிதமான புல்லினல் வேயப்பட்டவை. அறுபது முதல் நூறுஅடிவரை நீளமும், முப்பது அடி அகலமுமுள்ள கூரைகளை நான் பார்த்திருக்கிறேன்.........இந்த வீடுகளில் நான் தங்கியுமிருக்கிறேன். இங்கிலாந்து தேசத்திலுள்ள வீடுகளைப்போல அவை கதகதப்பாகவும் சௌகரியமாகவும் இருக்கின்றன.'' தரையில் அழகான பாய்கள், அலங்காரமாக நெய்யப்பட்டு விரித்திருந்தன. வீட்டிலே உபயோகத்துக்கான பாத்திரங்களும் ஏராளமாக இருந்தன என்று அவர் எழுதுகிறார். கூரையில் ஒரு ஓட்டை செய்து அது வழியாகக் காற்று உள்ளே வரும்படியாகச் செய்தார்கள் இந்தியர்கள். ஒரு பாயை அந்த ஓட்டையண்டை தொங்கவிட்டு, அதைக் கொண்டு உள்ளே வருகிற காற்றை அதிகப்படுத்தவோ குறைக்கவோ செய்கிற அளவுக்கு இந்தியர்கள் முன்னேறியிருந்தார்கள். இந்த மாதிரியான ஒரு வீடு, தங்குமிடம், சுலபத்தில் அமைக்கக் கூடியது. ஒருநாள் அல்லது அதிகமானல் இரண்டுநாள் தான் பிடிக்கும் அதை நிர்மாணிக்க. ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு அதை அப்படியே சுலபமாகக் கொண்டுபோய் வைத்துக்கொண்டு விடலாம். ஒவ்வொரு குடும்பத்துக்கும் இந்தமாதிரி ஒரு வீடு இருந்தது.

நாகரிகமடையாதவர்கள் என்று கருதப்படுகிற மக்களிடையே கூட ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஒரு வீடு சொந்தமாக இருந்தது. அந்தக் குடும்பத்தின் தேவைகளுக்கு ஏற்ற எளிய, அவ்வளவாக நாகரிகமில்லாத வீடுதான் எனினும் அதுவும் வீடுதானே ?. காற்றிலே பறக்கும் பறவைகளுக்கும் அதனதன் கூடுகள் இருக்கின்றன. நரிகளுக்கும் அவற்றின் பொந்துகள் உண்டு. இன்றைய சமுகத்திலே, நாகரிகமடைந்து விட்டவர்கள் என்று கருதப்படுகிற மக்களுக்கிடையே பாதிப்பேர்வழிகளுக்

யாட்டு விளையாடுகிறது. அப்படி விளையாடவேண்டு மென்ற எண்ணம் குழந்தைகளுக்கு இயற்கையாகவே உண்டாகிறது. பாறைகளுக்கிடையே உள்ள ஒரு பொந்து குழந்தைப் பருவத்தில் நம் மனத்தை எப்படிக் கவர்ந்தது என்று நாமே சிந்தித்துப்பார்த்தால் விளங்கி விடும். மனித குலத்தின் ஆரம்பகாலத்திலிருந்த அந்த நம் முன்னோர்களில் ஒருவனின் போக்குத்தான் இன்று நம் குழந்தைகளையும் பீடிக்கிறது என்று சொல்வது தவறில்லை. குகையில் வசிப்பதில் தொடங்கி இப்போது நாம் தென்னை ஓலைகள், மரப்பட்டைகளும் கிளை களும், விரித்த துணிகள், புல்லும்வைக்கோலும், பலகைகளும் கற்களும், பாறைகளும் ஓடுகளும் என்று கூரைகள் அமைந்த வீடுகளில் வசிக்கிற அளவுக்கு முன் னேறியிருக்கிறோம். திறந்த வெளிகளில் வசிப்பதென்றால் என்ன, எப்படி என்பதையே நாம் மறந்து விட்டோம். நாம் நினைப்பதை விடவும் அதிகமாகவே நம் வாழ்க்கை வீட்டை ஒட்டி அமைந்து விட்டது. வீட்டுக் கணப்பி லிருந்து வயல் வெளிக்கு வெகு தூரம் இருக்கிறது. இயற் கையின் அழியாப் பொருள்களான வானத்துச் சுடர் களுக்கும் நமக்கும் இடையே எதுவும் குறுக்கிடாமல் நாம் இப்போது வாழமுடியுமானால், நம் ஆயுளில் அதிக நாட்களைத் திறந்த வெளிகளிலே நம்மால் கழிக்க முடியு மானால் மிகவும் நல்லது தான் என்று சொல்ல எனக்குத் தோன்றுகிறது. கூரைக்கடியிலிருந்து கவி பாடாதிருந் தால்,அதாவது கொஞ்சமாவது அவன் திறந்த வெளிகளைப் பற்றிப் பாடினால் தேவலை என்று சொல்லவேண்டும் போல இருக்கிறது. மஹாத்மாக்கள் வீடுகளில் தங்குவதை விட்டு வெளியே வந்தார்களானால் எல்லோருக்கும் நல்லது என்றும் சொல்லலாம். குகைகளிலே பறவைகள் குரலெ டுத்துப் பாடுவதில்லை. கூண்டிலே அடைபட்டுள்ள புறுக்

கள் தங்கள் நல்லதனத்தை, மென்மையை அதிக நாள் காப்பாற்றிக் கொள்வதில்லை.

வீடு என்று தங்க இடமொன்று அமைத்துக்கொள்ள விரும்புகிறவன் கொஞ்சம் சுய அறிவையும் 'யாங்கி' கெட்டிக்காரத் தனத்தையும் உபயோகித்துக் கொண்டா ஞல் நல்லது. (வீடு என்று அமைக்கப்போய் அது அநாதாசிரமமாகவோ, வழி தெரியாத பளிங்கு மண்டப மாகவோ, செத்த காலேஜாகவோ, சத்திரமாகவோ. சிறைக் கூடமாகவோ அல்லது ஒரு அழகான சமாதி யாகவோ ஆகிவிடாமல் பார்த்துக்கொள்வதற்குக் கெட் டிக்காரத்தனம் தேவை. தங்குவதற்கு என்று எவ்வளவு சிறிய இடம் போதுமானது என்று முதலில் சிந்தித்துப் பார்.) நான் பார்த்திருக்கிறேன். பெனுப்ஸ்காட் வர்க் கத்தைச் சேர்ந்த இந்தியர்கள், மெல்லிய பருத்தித் துணி யால் ஆன கூடாரங்களில் தங்குவார்கள். கூடாரத்துக்கு வெளியே நாலு பக்கமும் பனி ஒரு அடி உயரத்துக்குப் படர்ந்திருக்கும். பனிச்சுவர் இன்னும் அதிக உயரம் இருந் தால் குளிர் காற்று தங்களை பாதிக்காதிருக்குமே என்று அவர்கள் எண்ணுவார்கள். நாணயமாக வாழ்வதுஎப்படி, என் காரியங்களைச் சுதந்தரத்துடன் என் மட்டும் பார்த் துக் கொள்வது எப்படி, என்றெல்லாம் அதிகமாகக் கவலைப்பட்டுக் கொண்டிருந்த அந்த நாட்களில் நான் ரெயில் பாதைக்கருகில் ஆறடிக்கு மூன்றடி அகல நீள முள்ள பெட்டிகள் வைக்கப்பட்டிருந்ததைப் பார்த்திருக் கிறேன். கூலிவேலை செய்பவர்கள் தங்கள் ஆயுதங்களை அந்தப் பெட்டிகளில் போட்டுப் பூட்டிவைப்பார்கள்— இரவில் அவை திருட்டுப் போகாமல் இருப்பதற்காக. இந்தமாதிரிப் பெட்டி ஒன்று ஒரு டாலருக்குக் கிடைக்கும். அதில் சில ஓட்டைகளைப் போட்டு விட்டு, மழை பெய்யும் போதும் இரவுகளிலும், மூடியைச்

அதிகம் கிடைக்கிறது என்பதற்குப் பதில் சொல்லவேண்டுமானால் பலருக்கு இதையும்விடக் குறைவாகவே கிடைக்கிறது என்றுதான் சொல்லவேண்டும். வேலை செய்யக்கூடிய அவன் ஆயுளில் ஒருபாதிக்கும் அதிகமாக அவன் தன் வீட்டைத் தன்னுடையதாக்கிக் கொள்ளச் செலவிட்டாக வேண்டும். வாடகை கொடுக்கிறான் என்று வைத்துக்கொள்வோமானால், நிலைமை திருந்துவதாக எந்தக் கணக்கின்படியும் சொல்லமுடியாது. இந்த நிபந்தனையின் பேரில் ஒரு அநாகரிகமான இந்தியன் தன் வீட்டை அமெரிக்கனின் அரண்மனையாக மாற்றிக் கொள்ளச் சம்மதித்தான் என்றால் அவனை அறிவாளி என்று சொல்ல முடியுமா ?

இந்தமாதிரி, அவசியமில்லாத ஒரு சொத்தை ஒவ்வொருவனும் தன்னுடையதாக்கிக் கொள்ளவேண்டும் என்றுநான் வற்புறுத்திச் சொல்வதற்குக் காரணம் ஒன்று உண்டு. அது என்ன என்பதைச் சுலபமாகவே ஊஹித்துக் கொள்ளலாம். தனி மனிதனைப் பொறுத்த வரையில் இந்தச் சொத்து அவனுடைய இறுதிச் சடங்குகளின் செலவுக்கு உபயோகப்படுவதாக இருக்க வேண்டும் என்பதே என்கருத்து. ஆனால் இறந்தபிறகு தன்னையே ஒரு மனிதன் புதைத்துக் கொள்ளவேண்டும் என்கிற அவசியமில்லை. அது உண்மைதான். எனினும் இதை அடிப்படையாகக் கொண்டு நாகரிகமடைந்தவனும் நாகரிகமடையாதவனுக்கும் இடையே உள்ள வித்தியாசத்தை முக்கியமான ஒரு பேதத்தை, குறிப்பிட்டுக் காட்டலாம். நாகரிக முதிர்ச்சியால் தனி மனிதனின் வாழ்க்கை, பொது சமுதாய வாழ்விலே அமுங்கி ஒரு ஸ்தாபனமாகிவிடுகிறது. இதன் விளைவாக மனிதகுலமே பயனடைகிறது என்று சொல்லலாம். மனிதகுலம் மேன்மை யுறுவதற்காக மனிதனின் தனித் தன்மை மறைவதென்பது நல்ல காரியம் தான்,

ஆனல் இப்போது இது நடப்பது வேறு ஒரு மகத்தான தியாகத்தினல் என்பதையே நான் சுட்டிக்காட்ட விரும்பு கிறேன். இப்படிக் கிடைக்கிற பலன் இந்தத் தியாகத்துக் குப் போதிய, ஈடான பலன் அல்ல என்றும் சொல்ல நான் விரும்புகிறேன். இதனல் கிடைக்கிற சௌகரியங்களை, ஒவ்வொரு மனிதனும் அசௌகரியங்கள் சிறிதும் இன்றி அனுபவிக்கவேண்டும் என்பதைத் தெளிவாக்க விரும்புகி றேன் நான். ஏழைகள் என்றும் உங்களுடன் இருந்தே தீருவார்கள் என்று சொல்லுகிறீர்களே—அதன் அர்த்தம் என்ன? தகப்பன்மார்கள் புளிப்பான திராக்ஷையைத் தின்ருர்கள், குழந்தைகளின் பற்கள் கூசுகின்றன என்று சொல்வதன் அர்த்தம்தான் என்ன?

"நான் உயிருடனிருப்பது உண்மையானல் இந்தப் பழமொழியை மீண்டும் இஸ்ரேலில் உபயோகிக்க உங் களுக்குச் சந்தர்ப்பம் எழாது என்று சொல்கிருர் மஹாப் பிரபுவான தேவன்,

"பாருங்கள்! உள்ள ஆத்மாக்கள் எல்லாம் என்னு டையவை. தகப்பனின் ஆத்மாவைப் போலவே தனய னின் ஆத்மாவும் என்னுடையதே, பாபம் செய்கிற ஆத்மா மரிக்கட்டும்."

என் அண்டை அயலிலுள்ள கான்கார்டு குடியான வர்களைப்பற்றி நான் சிந்தித்துப் பார்க்கிறேன். மற்ற வர்க் கத்தினர்களைவிட அவர்கள் ஏழைகள் அல்ல: பொருள் உள்ளவர்கள்தான், தங்கள் வயல் வெளிகளின் சொந்தக் காரர்களாவதற்காக அவர்கள் இருபது, முப்பது, நாற்பது வருஷங்கள் உழைக்கிருர்கள் என்று காண்கிறேன். இந்த நிலங்கள் அவர்களுக்குச் சொந்தமாகும்போதே வில்லங்கங் களுடன் சொந்தமாகியிருக்கின்றன. அல்லது கடனுகப் பணம் வாங்கி அதைப்போட்டு நிலத்தை விலைக்கு வாங்கி யிருக்கிருர்கள் அவர்கள். வீட்டைச் சொந்தமாக்கிக்

குச் சொந்தமாக வீடென்று ஒன்றும் கிடையாது என்று நான் சொல்வது தகும் என்றே எண்ணுகிறேன். பெரிய நகரங்களிலும் தலைநகரங்களிலும் வசிப்பவர்களில் ஒரு சிறு பகுதியினருக்கே சொந்த வீடுகள் இருக்கின்றன. ஆனல் இந்த நகரங்களிலும் தலைநகரங்களிலும் தான் நாகரிகம் வெகுவாக முற்றியிருக்கிறது என்று சொல்ல வேண்டும். மற்றவர்கள் இந்த அவசியமான தங்குமிடத்துக் கென்று வருஷாந்தர வாடகை கட்டுகிருர்கள். கோடையோ, மாரியோ, வீடில்லாமல் எதுவும் நடக்காது என்றும் இப்போது ஆகிவிட்டது. அவர்கள் செலுத்து கிற வாடகைப் பணத்தைக்கொண்டு ஆயிரக் கணக்கான இந்திய வீடுகள் கட்டிவிடலாம். ஆனல் வாடகையைக் கட்டிவிட்டு ஏழைகளாகவே ஆயுள்பூராவும் இருக்க நகரத்தில் வசிப்பவர்களில் பெரும்பகுதியினர் சம்மதித்து இருக்கின்றனர். வாடகை தருவது அசௌகரியம், சொந்தமாக வீடு வைத்துக்கொள்வது நல்லது என்பதை வலியுறுத்துவதற்காக இதைச் சொல்லவில்லை நான்: நாகரிகமடையாதவன் தன் வீட்டுக்குச் சொந்தக்காரனுக இருப்பது சாத்தியமாவது அந்த வீடு மலிவானது என்பதனுல் தான், நாகரிகமடைந்த நம்மவனுக்கு சொந்தமாக வீடு வாங்குவது என்பது சிரமமான காரியம், அவ்வளவு சொத்தில்லாதவன் அவன். ஆனல் சிந்தித்துப்பார்த்தால் வாடகைக்கிருப்பதைக் கூடச் சமாளிக்க அவனுக்கிருக்கிற சொத்துப் போதாது என்பது வெளிப்படையாகவே தெரியும். ஏதோ வாடகையைக் கொடுத்தாலும், அநாகரிகமான இந்தியனுடைய வீட்டுடன் ஒப்பிடும்போது அரண்மனையாகத் தோன்றுகிற ஒரு மாளிகையில் வசிக்க முடிகிறதே, அது பெரிதில்லையா என்று யாராவது கேட்கலாம். இருபத்தைந்து முதல் நூறு டாலர்கள்வரை வருஷத்துக்கு வாடகை தந்தால், எத்தனையோ வருஷங்களாக வழக்கப்பட்ட சௌகரியங்கள் கிடைக்கின்றனவே — பெரிய

அறைகள், சுத்தமான வர்ணம் வைத்த சுவர்கள், ரூம் ஃபோர்டு கணப்பு, அழகான ஜன்னல்கள், செப்புக்குழாய், அழுத்தினால் பூட்டிக்கொள்ளும் பூட்டுகள், விசாலமான கீழறை, என்னவெல்லாமோ கிடைக்கின்றனவே என்று சொல்லலாம். ஆனால் இவைகளை எல்லாம் அனுபவிப்ப வன் நாகரிகமடைந்தவன் தான் என்றாலும் ஏழையாகவே இருக்கிறான். அதே சமயத்தில் அநாகரிகமானவன் என்றா லும் சொந்தவீடு உள்ள இந்தியன் பணக்காரனாக, அதா வது காட்டுமிராண்டியே யானாலும், பொருளுள்ளவனாக, சொத்துள்ளவனாக இருக்கிறானே—அது ஏன்? (மனித னின் நிலையை உயர்த்துவதுதான் நாகரிகம்) என்பது உண்மை என்றால்—அது உண்மை என்றுதான் நான் நினைக்கிறேன்; (உயர்ந்த நிலையை உண்மையில் அனுப வித்து அதிகப்படுத்திக் கொள்பவனை அறிவாளி) என்று சொல்லவேண்டும் என்றும் நான் நினைக்கிறேன்—நாகரிகத் தின் காரணமாக மனிதன் வாழும் வீடுகளில் சுக சௌகரி யங்கள் அதிகரித்திருக்க வேண்டும். அதே சமயம் அவை முன்போலவே மலிவாகவும் இருக்கவேண்டும்; விலை அதிகமாகிவிடக் கூடாது; (ஒரு வஸ்துவின் விலை என்றால் என்ன என்று என்னைக்கேட்டால், உடனடியாகவோ, நாளடைவிலோ, அந்த வஸ்துவிற்காகச் செலவிடப்படுகிற மனித ஆயுள்தான் அதன்விலை என்று நான் சொல்லு வேன்.) இந்த பிரதேசத்தில் ஒரு சாதாரண வீடு எண்ணூறு டாலர்கள் விலையாகும் என்று சொல்லலாம். இந்த எண் ணூறு டாலர்களைச் சம்பாதித்துச் சேமிக்க ஒரு கூலியா ளுக்கு அவன் ஆயுளில் பத்து அல்லது பதினைந்து வருஷங் கள் பிடிக்கும். குடும்பம் என்று அவனுக்கு ஒன்றில்லா விட்டால்தான் இத்தனை வருஷங்களில் அவனால் இந்தத் தொகையைச் சேமிக்க முடியும். சராசரி அவனுக்கு ஒரு நாள் வேலைக்கும் கூலி ஒரு டாலராவது கிடைக்கும் என்று வைத்துக்கொண்டு கணக்கிட்டது இது. சிலருக்கு

களாகவே இருக்கிறோம். அவர்கள் அடைந்து அனுபவிக்கிற சுக சௌகரியங்களைக்கூட நாம் அடைவதில்லை—அனுபவிப்பதில்லை. சாப்மன் பாடியது உண்மை. ("மனிதர்களின் சமூகம், கட்டுப்பாடு, பொய்யானது. உலகில் பெருமை, வருங்காலத்து சௌகரியங்களையும் லேசாக்கிப் பறக்கடித்து விடுகிறது.")

(குடியானவனுக்கு வீடு சொந்தமாகி விடுகிறது என்றே வைத்துக் கொள்வோம். அதனால் அவன் பணக்காரனுவதற்குப் பதில், ஏழையாகவும் ஆகிவிடலாம். வீடு அவனுக்குச் சொந்தமாவதற்குப் பதில், அவன் வீட்டுக்கு அடிமைப்பட்டு விடலாம். பழைய கதையில் வருகிறதே அதுபோல "வீடு அசைக்க முடியாததாக இருந்து விட்டால் அதனால் கஷ்டம்தானே! அண்டை அசல் சரியாக இல்லாவிட்டால், வேறு எங்கும் போய்விட முடியாதே!" இது நியாயமான கட்சி என்றே எனக்குத் தோன்றுகிறது. நம் வீடு என்று சொல்லிக் கொள்ளுகிறோமே அது பெரியதாக இருப்பதனாலேயே, அது சுலபமாக அடங்குவதாக இல்லாததனாலேயே நாம் அதில் சிறைப்பட்டு விடுகிறோம். அண்டை அசலைச் சொல்லப்போவானேன்; நாமே சரியானபடியில்லை என்றும் சொல்லிவிடலாம். நகர்க் கோடியிலே உள்ள தங்கள் வீடுகளை விற்றுவிட்டு நகர் மத்தியில் வீடு வாங்கிக்கொள்ள விரும்புகிற இரண்டொரு குடும்பங்களை எனக்குத் தெரியும். ஒரு தலைமுறையாக அவர்களும் முயற்சி செய்கிறார்கள். அவர்கள் சாகும் போதுதான் அவர்களுக்கு அவர்களுடைய வீடுகளிலிருந்து விடுதலை கிடைக்கும் என்று தோன்றுகிறது.)

மக்களில் பெரும்பகுதியினர் தங்கள் வீட்டைச் சொந்தமாக்கிக் கொண்டு விடுகிறார்கள் அல்லது வாடகைக்கு அமர்த்திக் கொண்டு அனுபவிக்க முடிகிறது என்று வைத்துக் கொள்வோம். இந்தக் காலத்திய வீடு

களிலே செளகரிய சாதனங்கள் அதிகமாகவே இருக்கின்றன என்பதையும் ஒத்துக்கொள்வோம். நாகரிகம் முதிர்ந்த காரணமாக வீட்டில் சாதனங்கள், செளகரியங்கள் வளர்ந்துவிட்டன. உண்மை தான். ஆனால் அதற்கேற்றபடி, அந்த வீடுகளில் வசிக்க வேண்டிய மனிதர்கள் வளர வில்லையே? என்னசெய்வது? நாகரிகம் என்பது அரண்மனைகளை உண்டாக்கி விட்டது. ஆனால் அந்த அரண்மனைகளில் வசிக்கத் தகுதியுடைய பிரபுக்களையும் அரசர்களையும் சிருஷ்டிப்பதென்பது அவ்வளவு சுலபமான காரியமாக இல்லையே. நாகரிகமடையாதவனுடைய போக்கை விட, நோக்கைவிட நாகரிக மடைந்தவனுடைய போக்கும் நோக்கும் சிறந்ததாக இல்லை. தன் வாழ்க்கையில் பெரும்பகுதியை நாகரிகமடைந்தவனும் அடையாதவனும், ஒரே மாதிரியாகத் தன் அவசியத் தேவைகளைச் சம்பாதிப்பதிலே கழிக்க வேண்டியதாக இருக்கிறது. இப்படி இருக்கும் போது நாகரிகமடைந்தவனுக்கு வீடு மட்டும் சிறப்பாக அமைய வேண்டுவது ஏன்? அதற்கென்ன அவசியம்?

சிறு பான்மையினரின் விஷயம் என்ன? வெளிப்படையான சந்தர்ப்பச் சூழ் நிலையிலே நம்மில் சிலர் நாகரிகமடையாத மனிதர்களைவிடச் சிறந்த நிலையில் இருப்பதே போல, ஒரு சிலர் அவர்களையும் விடக் கேவலமான நிலையில் இருக்கிறார்கள் போலும்! ஒரு வர்க்கத்தினரின் சுகபோகம் வேறு ஒரு வர்க்கத்தினரின் ஏழ்மையினால் சரிக்கட்டப்பட்டு விடுகிறது போலும்! ஒரு பக்கத்தில் மாளிகை—மறு பக்கத்தில் பிச்சைக்காரர் விடுதியும். "வாயில்லாத ஏழைகளின்" குடிசைகளும்! பாரோக்களின் சவங்களை அடக்கம் செய்ய எழுப்பப்பட்ட பிரமிட்களை நிர்மாணித்த லக்ஷக் கணக்கான அடிமைகள் பூண்டு மட்டும் தின்று வாழ்ந்தவர்கள். அவர்களில் பலர் இறந்த பின் சரியானபடி புதைக்கப்பட்டிருக்கமாட்டார்கள்

கொள்ள உழைப்பதைப் போலச் சாதாரணமாக மூன்று பங்கு உழைப்புத் தேவையாக இருக்கிறது. அவர்கள் நிலங்கள் அவர்களுக்குப் பூரணமாகச் சொந்தமாவதற்கு முன், இத்தனை உழைத்தும் நிலங்களைச் சொந்தமாக்கிக் கொள்ளாதவர்கள் தான் அதிகமாக இருக்கிறார்கள். வில்லங்கங்கள், நிலத்தின் விலைக்கும் அதிகமாக இருந்தாலும் கூட, அதை ஏற்றுக்கொண்டு பாடுபடவே தயாராக இருக்கிறார்கள். தெரிந்தும் வியர்த்தமாக உழைக்கத் தயாராக இருக்கிறார்கள் பலர், அதிகாரிகளைக் கேட்டுப் பார்க்கிறேன் நான். சுதந்திரமாகத் தெளிவாகத் தங்கள் நிலங்களைத் தங்களுடையது என்று சொல்லிக் கொள்ளக்கூடிய குடியானவர்கள் ஒரு டஜன் பேர்வழிகளின் பெயர்களைக்கூட அதிகாரிகளால் சொல்ல முடியவில்லை, இந்த வயல்களில் உழைக்கும் குடும்பங்களின் சரித்திரம் உங்களுக்குத் தெரிய வேண்டுமானால், பெந்தகம் வைத்திருக்கிற பாங்குகளில் விசாரித்துப் பாருங்கள்—தெளிவாகத் தெரியும். உழைத்து நிலத்தைத் தன்னுடையதாக்கிக் கொண்டவன் என்று ஒருவன் உண்டானால் அவனைப் பலரும் சுட்டிக் காட்டுவார்கள்—அது அவ்வளவு அபூர்வமான விஷயம். கான்கார்டிலே அப்படிப் பட்டவர்கள் மூன்று ஆசாமிகளாவது இருக்கிறார்களா என்பது சந்தேகாஸ்பதமான விஷயம் தான். வியாபாரிகளைப் பற்றிச் சொல்வதுண்டு, நூறில் தொண்ணூற்றுஏழு பேர்வழிகள் தோல்வியடைவார்கள் என்று, அது குடியானவர்களைப் பற்றியும் உண்மையான விஷயம்தான், ஆனால் வியாபாரிகளைப் பற்றிய வரையில் தோல்வி என்பது தோல்வியே யல்ல என்றும், பணவிஷயத்தில் அசௌகரியமாக இருக்கிறது என்பதற்காக நாணயம் தவறிவிடுகிறார்கள்பலரும் என்றும் சொல்கிறார்கள்: நாணயத் தோல்வியே தவிர அது பொருளாதாரத் தோல்வியாகாது என்று வியாபாரிகளில் ஒருவர் கட்சி கட்டுவது பொருத்தமானதுதான் என்று ஒப்புக் கொண்

டால், அதனுல் நிலைமை மோசமாகிற மாதிரித்தான் இருக்கிறது. வியாபாரத்தில் வெற்றி பெறுகிறவர்கள் அந்த நூற்றுக்கு மூவரும்கூட தங்கள் ஆத்மாக்களைக் காப்பாற்றிக் கொள்ளச் சக்தியற்றவர்களாகிவிட்டார்கள். நாணயமாகத் தோல்வியை ஏற்றுக்கொள்பவர்களைவிட இவர்கள் நாணயமற்றவர்கள் என்று ஏற்பட்டுவிடும். பாப்பராகி விடுவது, கொடுக்கல் வாங்கலில் நாணயம் தவறுவது என்கிற பாறையில் மோதித்தான் இன்று நமது நாகரிகம் குட்டிக் கரணங்கள் போடுகிறது, எகிரிக் குதிக்கிறது என்று சொல்லவேண்டும். ஆனுல் நாகரிகமடையாத காட்டுமிராண்டி அவ்வளவாக விசையற்ற மரக்கட்டையான பஞ்சத்திலே காலூன்றி நிற்கிருன். இருந்தும் இந்தப் பிராந்தியத்து கால்நடைக் காட்சிகள் வருஷா வருஷம் வழக்கம் போலவே உத்ஸாகத்துடன் தான் நடைபெறுகின்றன. ஏதோ விவசாய யந்திரத்தின் இணைப்புகள் எல்லாம் சரியாக அமைந்துவிட்டது போலத்தான் எல்லாம் நடைபெற்று வருகிறது.

தன் பிழைப்பு என்கிற சிரமமான பிரச்னையை குயுக்தியான, இதைவிடச் சிரமமான வழிகளில் தீர்க்கப் பார்க்கிருன் குடியானவன். கால் பூட்ஸுக்குக் கயிறுவாங்க அவன் ஆட்டு மாட்டு மந்தைகளைக் கணக்கிட்டுப் பார்க்கிருன். பிரச்னை சிரமமானது தான்—அதைவிடச் சிரமமானது அந்தப் பிரச்னையைத் தீர்க்க அவன் கையாளும் வழிகள். பெரிய நிபுணன்போல தனக்குச் சுகமும் சௌகரியங்களும் சுதந்திரமும் தேடிக் கொள்வதற்காகப் பொறி வைக்கிருன் அவன். ஆனுல் திரும்பும்போது அவன் காலே அந்தப் பொறியில் அகப்பட்டுக்கொண்டுவிடுகிறது. அவன் ஏழையாக இருப்பதற்கு இதுதான் காரணம். இதே காரணமாகத்தான் நம்மில் பலரும், நாகரிகமற்ற காட்டுமிராண்டிகளின் தரத்துடன் ஒப்பிடும்போது, ஏழை

வீடுகள் ஏராளமான செலவு பிடிக்கின்றன என்பதை எல்லோருமே ஒப்புக் கொள்வார்கள். இதேபோல கட்டாத வீடுகளை அடையத் தொடர்ந்து முயற்சி செய்வானேன்! குறைவாகக் கிடைத்தாலும் போதும் என்று மனதைத் திருப்திசெய்து கொள்ளமுடியாதா? கௌரவமான பிரஜை தன் உதாரணத்தாலும் உபதேசத்தாலும் தனக்குப் பின் வருகிற சந்ததிகளுக்குத் தன் வழியையே தான் சொல்லிக் கொடுத்தாகவேண்டுமா? அவசியமில்லாத, அதிகப்படியான செருப்புகள், வராத விருந்தாளிகளுக் கென்று அதிகப்படியான அறைகள், ஏராளமான குடைகள் என்று இப்படியேதான் எல்லாம் போய்க் கொண்டிருக்க வேண்டுமா? நமது நாற்காலி மேஜைகள் ஏன் அரேபியர்களதைப் போல, அல்லது இந்தியர்களதைப் போல எளியவையாக இருக்கக்கூடாது? மனித குலத்துக்கு நன்மை செய்தவர்கள், தேவலோகத்தின் தூதர்கள் என்று அழைத்து நாம் வணங்குகிறவர்களைப் பற்றி நாம் நினைக்கும்போது, கடவுளின் அற்புதங்களைச் சாத்தியமாக்கி மனிதர்களுக்குத் தந்தவர்களைப்பற்றி எண்ணும்போது, அவர்களைத் தொடர்ந்து வந்த மனிதர்களைப் பற்றியோ, அவர்கள் உபயோகித்த நாற்காலி மேஜைகளைப் பற்றியோ ஏன் மனத்தில் தோன்றுவதில்லை. அரேபியர்களைவிட நாம் எவ்வளவுக் கெவ்வளவு குணத்திலும் அறிவிலும் மேம்பட்டவர்களாக இருக்கிறோமோ அவ்வளவுக் கவ்வளவு நமது வீட்டு மேஜை நாற்காலிகளும் அவர்கள் உபயோகிப்பதைவிட மேம்பட்டதாக இருக்கட்டுமே! இப்படிச் சொல்வது தவறு என்ன ?(இப்போது நம் வீடுகளில் தட்டுமுட்டு சாமான்கள் எங்கும் கிடந்து நிரம்பி இறைபட்டு எல்லாவற்றையும் கெடுக்கின்றன. அவற்றில் பெரும்பகுதியை யசமானி அம்மாள்—அவள் நல்ல யசமானியாக இருந்தால்—தூக்கிக் குப்பைத்தொட்டியில் எறிந்துவிடுவாள்: எறிந்து

விட்டுத் தான் அவள் தன் காலே வேலேயைக் கவனிப் பாள்.) காலே வேலேயா? மனிதனின் காலே வேலே என்ன வாக இருக்கவேண்டும்? (என் மேஜைமேல் சுக்காங்கற் கள் மூன்று இருந்தன, தினம் காலேயில் அதில் படிந் திருக்கும் அழுக்கைத் தட்டிவைக்கவேண்டியது ஒரு நிர்ப்பந்தமாகிக் கொண்டிருந்தது என்று கண்டு நான் பயந்துவிட்டேன். என் மனத்துள் உள்ள அழுக்கைத் தட்டிச் சுத்தப்படுத்தவே எனக்கு நேரம் போதவில்லே, இது வேறு வேலேயா என்று அந்தக் கற்களேத்தூக்கி ஜன்னல் வழியே வெளியே எறிந்துவிட்டேன். அருவருப் புடன் எறிந்துவிட்டேன்.) தட்டுமுட்டு சாமான்களால் நிரம்பிய வீட்டை வைத்துக் கொண்டு சமாளிப்பது எப் படி? திறந்த வெளியில் உட்கார்ந்திருப்பதே எனக்குப் பிடித்த விஷயம். (புல்லில் புழுதிபடியாது—மனிதனுக அதன்மேல் புழுதிபடிய ஏதாவது செய்தாலொழிய!)

ஆடம்பரப் பிரியர்களும் டம்பாச்சாரிகளும் தான் இந்தப் புது மோஸ்தர் மோஹத்தை ஏற்படுத்துகிறவர்கள். மக்கள் மந்தைகள் அதை வெகு சுறு சுறுப்பாக ஏற்றுப் பின் பற்றுகின்றன. மிகச் சிறந்த விடுதிகளில் தங்குகிற பிரயாணிகளுக்கு இதன் உண்மை சுலபமாகவே தெரிய வருகிறது. விடுதிகளின் சொந்தக்காரர்கள் ஒவ்வொரு பிர யாணியையுமே ஸார்டனுபலஸ் என்று கருதிச் செய லாற்றுகிருர்கள். அவர்களிடம் மாட்டிக் கொண்டவர் களின் ரத்தத்தையே கொஞ்ச நேரத்தில் அவர்கள் உறிஞ்சி எடுத்துவிடுவார்கள். சௌகரியம், தற்காப்பு என்கிற இரண்டு எல்லேகளுமே கடந்த அளவில் நாம் ரெயில் பிர யாணங்களில் ஆடம்பரத்தில் செலவு செய்ய முனேந்து விடுகிருேம் என்று நான் எண்ணுகிறேன். ரெயில் பிர யாணம் இந்த நாட்களில் சௌகரியமாகவும் இல்லே, ஆபத்து விளேவிக்காமலும் இல்லே. ஆனுல் கீழ் நாடுகளில்

அரண்மனையை எழுப்பும் கொத்து மேஸ்திரி இரவானதும் மிகவும் கேவலமான தன்குடிலுக்குத் திரும்புகிறவனாக இருக்கலாம். (நாகரிகம் என்பதன் சின்னங்கள் ஒரு தேசத்தில் காணப்படுவதினால், அந்தத் தேசத்து மக்களில் பெரும் பகுதியினர் காட்டுமிராண்டிகளையும் விடக் கேவலமான நிலையில் இருக்கமாட்டார்கள் என்று நிச்சயமாகச் சொல்லி விட முடியாது.) நான் இப்போது ஏழ்மையால் தாழ்ந்தவர்களைச் சொல்லுகிறேன்—பணமிருந்தும் தாழ்ந்தவர்களைச் சொல்லவில்லை. நான் சொல்வது எவ்வளவு உண்மை என்பதற்கு அத்தாட்சி வேண்டுமானால், நாகரிகத்தின் கடைசிக் கொழுந்தான ரெயில் பாதைகளுக்குப் பக்கத்தில் காணக்கிடக்கிற குடிசைகளைப் பார்த்தால் போதுமானது. அங்கு மனிதர்கள் பன்றிக் கொட்டிலில் அடைபட்டுக் கிடப்பவர்கள் போல இருக்கிறார்கள். மாரிக் காற்றைத் தடுக்க அவர்கள் குடிசைகளிலே கதவுகள் கிடையாது. கணப்புகளுக்கு அங்கே விறகு கிடையாது. வெய்யிலுக்கும் குளிருக்கும் பயந்து சுருங்கிய உடல்கள் அவர்களுடையது—வாலிபர்களும் கிழவர்களும் ஒடுங்கி வாழ்கிறார்கள் அங்கே. அவர்கள் அறிவோ ஆற்றலோ, உடலோ உள்ளமோ விரிவடைய வழியில்லாமல் சுருங்கிச் சுருண்டு கிடக்கிறது. இந்தத் தலை முறையின் நாகரிகம் என்று கருதப்படுவதைச் சாத்தியமாக்கிய அவர்களைக் கவனிப்பது நியாயம் என்றுதான் எனக்குப் படுகிறது. சற்றேறக்குறைய இதே போலத்தான் இருக்கிறது உலகத்தின் உலைக்களம் என்று சொல்லக் கூடிய இங்கிலாந்தின் தொழிலாளிகளின் நிலைமையும், பூகோள படத்தில் முன்னேற்ற மடைந்தது என்பதற்கு அறிகுறியாக வெள்ளையாகத் தீட்டப்பட்டிருக்கும் ஜர்லாந்துப் பகுதியிலும் நிலைமை இதேபோலத்தான் என்று நான் உங்களுக்குச் சுட்டிக் காட்டலாம். நாகரிக மனிதனுடன் பழக்கம் ஏற்படுமுன் வட அமெ-

ரிக்காவிலோ, தென் தீவுகளிலோ இருந்த சுதேசிகளின் உடல் அமைப்புடன் இன்றைய ஜரிஷ்காரனின் உடல் அமைப்பை ஒப்பிட்டுப் பாருங்கள்—வித்தியாசம் தெளிவாகவே தெரியவரும். சாதாரண நாகரிக மக்களின் அதிகாரிகளைப் போன்ற அறிவுள்ளவர்கள் தான் அந்தப் பிரதேசத்தில் ஆள்பவர்களும். நாகரிகம் என்று சொல்லப்படுவதுடன் கூடவே இந்தத் தாழ்மையும் ஏழ்மையும் இருக்க முடியும் என்பதைத் தான் இதெல்லாம் அறிவுறுத்துகிறதே தவிர வேறு அல்ல. இந்த மாதிரி உதாரணங்களை அதிகப்படுத்துவதற்காக நான் நம் தேசத்து ஏற்றுமதிப் பொருள்களைச் சாத்தியமாக்குகிற தென் பிராந்தியத்து கூலியாட்களையும் குறிப்பிடவேண்டியது இனி அவசியமில்லை என்று எண்ணுகிறேன். இவர்கள் தென்பிராந்தியத்துக்கே உரிய அடிமைகள். சாதாரண வாழ்வு. மிதமான வாழ்வு வாழ்கிறவர்களைப் பற்றி மட்டுமே இனி பேசத் தொடங்குகிறேன்.

வீடு என்றால், அடிப்படையில் உண்மையில் அதன் அர்த்தம் என்ன என்று மனிதர்களில் பெரும்பாலோர் சிந்தித்துப் பார்க்க முயற்சித்ததாகவே தெரியவில்லை. அண்டை வீட்டுக்காரனுடைய வீட்டைப் போலவே தன் வீடும் அமையவேண்டும் என்கிற ஒரு தப்பான அபிப்பிராயத்திலே பலரும் தங்கள் ஆயுள் பூராவும் ஏழைகளாக இருக்கத் தொடங்கிவிடுகிறார்கள். தையற்காரன் இஷ்டத்திற்காகவா சட்டை? ஒரு தொப்பி போனால், இன்னொன்று வந்தது என்றில்லாமல், 'அது' மாதிரி ஒன்று வாங்கவேண்டும் என்று ஒரு ஆயுள் நாள் பூராவையும் கழிக்கவேண்டுமா என்ன? இப்பொழுது உள்ள சௌகரியங்களைவிட அதிக சௌகரியமுள்தாகவும், அடக்கமானதாகவும், சுகபோகங்களுக்கு ஏற்றதாகவும் வீடு ஒன்று கண்டுபிடிக்க முடியும். இப்போதிருக்கிற

அந்தப்புரங்களின் ஆடம்பரங்களை இங்கு மிடையே மேலை நாடுகளுக்குக் கொண்டு வந்து தந்துவிட்டது ரெயில் வண்டிகள் என்று தான் சொல்லவேண்டும்; நவீன காலத்திய முன்னறைச் சௌகரியங்கள், திண்டு திவாசுகள், சாய் நாற்காலிகள் முதலிய நூற்றுக் கணக்கான ஆடம்பரங்கள் பிரயாணம் செய்பவனை வழி நெருகத் தொடர்ந்து வருகின்றன. பெண்களுக்கும், பெண்களைப் போன்றவர்களுக்கும் வசிகரமானது என்று கண்டு பிடிக்கப்பட்டு கையாளப்படும் இவற்றின் பெயர்கள் கூட ஜோனதனுக்குத் தெரியாது—அப்படித் தெரிந்திருந்தால் அது பற்றி அவன் வெட்கப்பட வேண்டியதாக இருக்கும். (பறங்கிக்காய் மேல் உட்கார்ந்து என் ஆஸனம் என்னுடையது என்று சொல்லிக் கொள்வது எனக்குத் திருப்தியளிக்கிறது. அதை விட்டு விட்டு வெல்வெட்டுமெத்தையில் பலருடன் இடநெருக்கடியால் அவஸ்தைப் பட்டுக் கொண்டு பிரயாணம் செய்வதை நான் விருப்பவில்லை. சுதந்திரமாகத் திரியக் கூடிய மாட்டு வண்டியில் பூமி முழுவதும் சுற்றிவர நான் தயார். அதை விட்டு விட்டு ஒரு உல்லாஸப் பிரயாண வண்டியின் ஆடம்பரமான பெட்டியில் உட்கார்ந்து கொண்டு, கைலாசம் போய்ச் சேரும் வரையில் மலேரியா காற்றைச் சுவாசித்துக் கொண்டே கிடக்க நான் விரும்பவில்லை.)

ஆதி காலத்து மக்களின் எளிமையான வாழ்வும், அவர்களுடைய நிர்வாணமும் இந்த ஒரு சௌகரியத்தை அவர்களுக்குத் தந்தன; அவை காரணமாக அவர்கள் இயற்கையை விட்டு அதிக தூரம் விலகிவிட வில்லை. இயற்கையை ஒட்டியே வாழ்க்கை நடத்தி வந்தார்கள் இயற்கை யன்னையின் மடியிலே தவழ்ந்து சில காலம் தங்க வந்தவன் என்று தங்களைப் பற்றி எண்ண அவர்களுக்கு இடம் இருந்தது. உணவு அருந்தி சிறிது நேரம் இளைப்

எ—6

பாறிய பின்னர், மீண்டும் அவன் தன் பயணத்தைப் பற்றிச் சிந்திக்கலாம். இந்த உலகில் ஒரு கூடாரத்தில் வசிப்பவன் போல அவன் வசித்துவந்தான். பள்ளத் தாக்குகளிலோ, சமவெளிகளிலோ நடந்து கொண்டிருந் தான் அவன்—மலைச்சரிவுகளிலே ஏறிக் கொண்டிருந்தான். ஆனால், இப்பொழுதோ இம் மனிதர்கள் தங்கள் ஆயுதங் களின் ஆயுதங்களாகவும் கைப்பாவைகளாகவும் ஆகிவிட் டார்கள். பசிக்கும் போது சுதந்திரமாக இஷ்டம்படி பழங் களைப் பறித்துத் தின்ற மனிதன் இப்போது குடியானவன் ஆகிவிட்டான். நிழல் தேடி மரத்தடியில் நின்றவன், குடித்தனத்துத் தலைவனாகவும் வீட்டுக்காரனாகவும் ஆகி விட்டான். இப்போது நாம் இரவில் தங்க முகாம் போடுவ தில்லை. ஆனால் பூமியில் குடி பெயராமல் வாழ்கிறோம். பழைய சொர்க்கத்தை மறந்து விட்டோம். (கிறிஸ்தவ மதம் என்பதையே நாம் முன்னேற்ற மடைந்து விட்ட ஒரு விவசாய முறை என்கிற நினைப்பில் இப்போது பின் பற்றி வரத் தொடங்கிவிட்டோம்.) இந்த வாழ்க்கைக்கு என்று ஒரு குடும்ப மாளிகையையும், வாழ்க்கைக்கு அப் பாலுள்ளதற்கு ஒரு குடும்பக் கல்லறையையும் கட்டிக் கொண்டு நாம் திருப்திப்பட ஆரம்பித்து விட்டோம். கலா சிருஷ்டிகளில் சிறந்தது என்று சொல்லப்பட வேண்டியவை மனிதன் இந்த நிலையிலிருந்து விடுபடுவ தற்குச் செய்கிற முயற்சிகளைத் தான், நடத்துகிற போராட் டங்களைத் தான். ஆனால் இன்றைய கலை இந்த நிலையே சாசுவதம்—இந்தத் தாழ்மையே உயர்வு—வேறு உயர்வு எதுவும் உண்டானால் அதை மறந்து விடலாம் என்று நமக்கு அறிவுறுத்துகிற மாதிரி அமைந்திருக்கிறது. இந்த என் கிராமத்திலே நேர்த்தியான ஒரு கலை சிருஷ்டிக்கு உண்மையில் இடமேயில்லை என்று தான் சொல்ல வேண்டும். நம் வாழ்க்கையின் பிரதிபலிப்பு என்று சொல் லும்படியாக எவ்விதக் கலையும் நமக்குக் கைவர வில்லை.

இப்படிப்பட்ட கலா சிருஷ்டியை நிறுத்திவைக்கக்கூட நம் வாழ்வில் நம் வீடுகளில், நம் தெருக்களில் உற்ற தோர்பீடம் கிடையாது என்பது நிச்சயம். ஒரு படம் மாட்டுவதற்குக் கூட ஒரு ஆணியும் கிடையாது. ஒரு வீரனின் அல்லது ஒரு மகாத்மாவின் உருவச் சிலையை வைப்பதற்குக் கூட நம் வீடுகளில் ஒரு பிறையோ அலமாறித் தட்டோ கிடையாது. நம் வீடுகள் எப்படிக் கட்டப்பட்டு எவ்வளவு பணம் பிடித்திருக்கின்றன என்று நான் எண்ணும் போது எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. அவற்றின் உள் பொருளாகாரம் எப்படிச் சரிக் கட்டப்பட்டு நிலைநிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது என்று சிந்தித்துப் பார்க்கும் போது, முன்னறையில் உள்ள ஆடம்பரப் பொருள்களைப் பார்த்து ஆனந்தித்துக் கொண்டிருக்கும் விருந்தாடியின் காலடியில் தரை பிளந்து அவனை பலமான அஸ்திவாரத்துக்கு ஆதரமான பூமிக்குக் கொண்டு போய் ஏன், எப்படி விடாமல் இருக்கிறது இந்த மெல்லிய தரை என்று எனக்கே வியப்பாக இருக்கிறது. இந்தப் பணக்கார வாழ்வு, நாகரிகமான வாழ்வு என்பது கிடைக்காதா என்று பலரும் ஏங்கித் தவிக்கிறார்கள் என்பதை நான் உணருகிறேன். இதை எட்டிக் குதிக்கத் தயாராக இருக்கிறார்கள் எல்லோரும். இந்த வாழ்வின் நேர்த்தியான கலை அம்சங்கள் என்பவை என் மனத்தில் நிற்கவில்லை—இந்த எட்டிக் குதிக்கும் காரியம் தான் என் கவனத்தைப் பூராவும் கவர்ந்துவிடுகிறது. எனக்குத் தெரிந்த வரையில் வெளி உதவியில்லாமல் தன் சொந்த பலத்தினல் மட்டும் ஒரு மனிதன் எகிரிக் குதிக்கக் கூடிய அளவின் எல்லை நாடோடிகளான அரேபியர்களில் ஒரு சிலர் ஏற்படுத்தியது என்று எனக்கு ஞாபகம் வருகிறது—சமதரையில் அவர்கள் இருபத்தைந்தடி தூரம் தாண்டிக் குதிப்பார்கள். தாண்டுதல் காரியத்தில், வேறு எவ்வித குயுக்தியான உதவியும் இல்லாவிட்டால், இருபத்தைந்து

அடிகளுக்கப்பால் மனிதன் பூமியின் மேல் அழுத்தமாகக் கால் பதிய வைப்பதைத் தவிர வேறு வழி கிடையாது. இந்த நவீன நாகரிக சாதனங்களை எண்ணித் தாண்டிக் குதிப்பவர்கள் எதன் ஆதரவில் நிற்கிறார்கள். எதை ஆதாரமாகக் கொண்டு கால் ஊன்றுகிறார்கள் என்று முதலில் நான் என்னையே கேட்டுக் கொள்கிறேன். இந்தத் தாண்டுதல் அவ்வளவாகச் சரியான காரியந்தானா என்றும் என்னையே கேட்டுக்கொள்கிறேன். தோல்வியடைகிற தொண்ணூற்றி ஏழு பேரைச் சேர்ந்தவனா அவன்? அல்லது ஜயிக்கிற மூவரில் ஒருவனா? இந்தக் கேள்விகளுக்கு முதலில் நீங்கள் பதில் சொல்லுங்கள், அதன் பிறகு நான் உங்களுடைய அல்ப சாமான்களை கண்ணெடுத்துப் பார்க்கிறேன்; அவை அலங்காரமானவை என்று பின்னர் ஏற்றுக்கொள்கிறேன். குதிரைக்குமுன் வண்டியை வைப்பது என்பது அழகான விஷயமும் அல்ல; உபயோகமான விஷயமும் அல்ல. நம் வீடுகளில் அழகான பொருள்கள் சேரவேண்டும் என்றால், முதலில் சுவர்களில் இப்போது உள்ளவற்றையெல்லாம் அகற்றியாக வேண்டும். அதேபோல நம் வாழ்விலும் கருத்துக்களிலும் ஒளியுள்ளவையும் அகற்றப்பட வேண்டும். அழகான குடித்தனம் என்கிற கொள்கைகளும் அழகான வாழ்வு என்கிற தத்துவமும் நம் காரியங்களுக்கு அஸ்திவாரமாக அமையவேண்டும். அழகானதற்கு ஒரு ருசி ஏற்பட வேண்டுமானால் மனிதன் அதை வீட்டிற்கு வெளியே இயற்கையோடு இசைந்து வாழந்துதான் வளம்படுத்திக் கொள்ளவேண்டும். இன்றைய வீடோ, வீட்டைக் கண்காணிக்கும் குடித்தனக்காரனோ இல்லாத திறந்த வெளியிலே தான் மனிதனுக்கு அழகு உணர்ச்சி ஏற்படக் கூடும் என்பது நிச்சயம்.

இந்த பிரதேசங்களில் வந்து குடியேறிய மனிதர்கள் முதலில் வீடுகளைப் பெரிசாகக் கட்டிக் கொள்ளவில்லை.

அந்தக் காலத்தைச் சேர்ந்த அதிகாரி ஒருவர் எழுதுகிறார்; "அவர்கள் இஷ்டப்படி வீடுகள் கட்டிக்கொள்ள அவர்களுக்கு வசதி கிடையாது. நாலுமூலைச் சதுரமாகத் தரையில் ஒரு குழிவெட்டி, மரப்பலகைகளால் சுவர்கள்மாதிரி அமைத்துக் கொண்டு வசித்து வந்தார்கள். குழிகள் ஆறு அல்லது ஏழு அடி ஆழமாகவும், தேவையான அகல நீளமும் உள்ளவையாக இருந்தன. மண் சரிந்துவிடாமல் மரச் சுவர்களுக்கு பட்டைகளாலும் மற்றும் பலவற்றாலும் உள்வரிசை ஒன்று எழுப்பினார்கள். தரையும் மரப் பலகைகளாலானது தான். மேலே மரக்குச்சிகளால் சாரங்கள் போட்டு அதன்மேல் மரப்பட்டை அல்லது புல் பத்தைகளை நெருக்கமாகப் பரப்பிவிடுவார்கள். குடும்பத்தினர் எல்லோருடனும் இந்த மாதிரி அடைக்கப்பட்ட வீடுகளில் இரண்டு, மூன்று அல்லது நான்கு வருஷங்கள் வரையில் அவர்கள் வசித்தார்கள். தேவைப்பட்டபடி, குடும்பத்திலுள்ள நபர்களுக்கு ஏற்றபடி, தடுப்புகள் செய்து அறைகளும் அமைத்துக் கொண்டார்கள். இப்படி நியூ இங்கிலாந்துப் பிரதேசத்து முக்யஸ்தர்களும் பணக்காரர்களும் வீடுகள் அமைத்துக் கொண்டதற்கு இரண்டு காரணங்கள் உண்டு; முதலில் வீடுகள் கட்டுவதில் காலம் விரயமாகும்; அந்தக் காலத்தை உணவு சம்பாதிப்பதில் செலவிட்டாலும் மறுவருஷத்துக்கு உணவு கிடைக்கும், இரண்டாவதாகத் தங்கள் நாடுகளிலிருந்து கொணர்ந்த கூலிவேலைக்காரர்களுக்கு வேலை கிடைக்காமல் அதைரியப்பட்டுப் போய்விடக் கூடாது என்றும் அவர்கள் எண்ணினார்கள், மூன்று நான்கு வருஷங்களில் இந்தப் பகுதியில் விவசாயம் நன்கு தழைத்ததும், அழகான வீடுகளை அவர்கள் கட்டிக் கொண்டார்கள். ஏராளமாக, ஆயிரக்கணக்கில் செலவு செய்து வீடுகள் கட்டிக் கொண்டார்கள்."

இப்படி நமது முன்னோர்கள் வகுத்துக்கொண்ட ஒரு வழியிலே ஒரு முன்யோசனைப் பண்பு காணக்கிடக்கிறது. கொள்கையென்று நோக்கும்போது, மிகவும் அவசியமான தேவைகளை முதலில் பூர்த்தி செய்துகொண்டு மேலே செல்வது என்று எண்ணுவது மிகவும் நல்லது தான்—இல்லையா? மிகவும் ஆடம்பரமான ஒரு மாளிகையை வாங்கி எனக்குச் சொந்தமாக்கிக் கொள்ள வேண்டும் என்று நான் எண்ணுகிறபோதெல்லாம், நான் இரண்டு மூன்று காரணங்களால் தயங்குகிறேன். மண் வளமும் விவசாயமும் எப்படியானாலும் இந்தப் பகுதியில் மனிதத்தன்மை வளம் அவ்வளவாகச் செழித்துவிடவில்லை. நமது முன்னோர்கள் ரொட்டியை மெல்லிதாக வெட்டித் தின்று உணவு வெகுநாளுக்கு வரும்படியாகக் காபந்து பண்ணிக் கொண்டார்கள். உணவு போதாமல் இருந்தது. இப்போதும் ஆத்மீக உணவு நமக்குப் போதாமலே தான் இருக்கிறது என்று நான் எண்ணுகிறேன். எவ்வளவு அநாகரிகமான காலம் என்றாலும் அதிலும் கட்டிட வேலை என்பது அவமதிக்கப்படுவதற்கில்லை என்பது உண்மைதான். ஆனால் வெளியில் அழகாயிருப்பது மட்டும் போதாது, மனிதர் வாழ்க்கையுடன் உரசும் உள் பாகங்கள் நம் வீட்டில் சிறப்பான அழகு கூடித் திகழட்டும்! ஆனால் நான் இரண்டொரு வீடுகளுக்குள் சென்று பார்த்திருக்கிறேன். அவற்றுள் இருப்பது என்னவென்று எனக்குத் தெரியும்,

குகைகளிலோ, இந்தியர்களின் குடிசைகளிலோ தோல் ஆடைகள் அணிந்துகொண்டு வாழுகிற அளவுக்கு நாம் இழிவடைந்துவிடவில்லை என்றாலும், அப்படி வாழ்வதிலுள்ள சௌகரியங்களையும் விட்டுவிடக் கூடாது என்றே எனக்குத் தோன்றுகிறது. அத்துடன் எவ்வளவோ சிரமப்பட்டு, ஏராளமான விலைகொடுத்து, நாகரிக

மடைந்த மனிதன் கண்டுகொண்ட சுக செளகரியங்களை யும் விட்டுவிடக் கூடாது. குகைகளோ, மரக் கட்டை களோ, பட்டைகளோ போதுமான அளவு இந்தப் பிர தேசத்தில் கிடையாது. தட்டையான கற்களோ, இஷ்டப் படி உருட்டக்கூடிய களிமண்ணோகூட இங்கு கிடை யாது, இவற்றையும்விட மலிவாகப் பலகைகளும் சட்டங் களும், சுண்ணும்பும் கற்களும் கிடைக்கின்றன, இந்த விஷயம் பற்றி நான் ஓரளவு அறிந்தவன் என்று அதட் டிச் சொல்ல முடியும், விசாரிக்கும் செயல் முறையிலும் நான் இதைப்பற்றிப் போதிய அளவு அறிவேன். இப் பொழுது ரொம்பப் பணக்காரர்கள் என்று சொல்லிக் கொள்பவர்களைவிடப் பணக்காரர்களாக நாம் ஆவதற்கு இந்தப் பிராந்தியத்தில் கிடைக்கிற பொருள்களையே இன் னும் சற்று கெட்டிக்காரத்தனமாக உபயோகப்படுத்த லாம். அப்படி உபயோகப்படுத்தினுல் நமது நாகரிகம் என் பதே நமக்கு ஒரு ஆசியாக அமையும். (நாகரிகமான மனி தன் என்ருல் என்ன அர்த்தம்? அனுபவமும் அறிவும் பெற்றுவிட்ட காட்டுமிராண்டி என்றுதான் அர்த்தம்— இல்லையா ? ) இப்பொழுது என் முயற்சியைப்பற்றிச் சொல்லத் தொடங்குகிறேன்.

1845-ல் மார்ச்சுமாதக் கடைசியில் நான் ஒரு கோடா லியைக் கடன் வாங்கிக்கொண்டு வால்டன் ஏரிக் கருகிலிருந்த காட்டில், வீடு கட்டிக்கொள்ள உத்தேசித்திருந்த பிரதேசத்தில், நிமிர்ந்து உயர்ந்து நின்ற வெள்ளைப் பைன் மரங்களை வெட்டித் தள்ளத் தொடங்கி னேன், முதலில் கடன் வாங்காமல் ஆரம்பிப்பதென்பது கடினமான விஷயம்தான். ஆனுல் உன் சகோதர மனித னும் உன் முயற்சிகளில் பங்கெடுத்துக்கொள்ள அனும திப்பதென்பது ஒரு தாராள மனப்பான்மையில் ஏற்படு வது என்று சொல்லத்தான் வேண்டும். கோடாலியின்

சொந்தக்காரன் அதை என்னிடம் கொடுக்கும்போது அதைத் தன் கண்ணின் மணியாகக் கருதிப்பார்த்துக் கொள்வதாகச் சொல்லிவிட்டுத் தந்தான். என் கையில் கிடைத்தபோது இருந்ததைவிட அதை அதிகக் கூர்மையான ஆயுதமாகச் செய்து அவனிடம் திருப்பித் தந்தேன் நான், நான் வேலை செய்தஇடம் மலைச்சரிவிலே ஒரு அழகான இடம். சுற்றிலும் பைன் மரங்கள். மரங்களினூடே வால்டன் ஏரியும் தெரிந்தது. பக்கத்தில் இளம் பைன்களும் ஹிக்கரி மரங்களும் வளர்ந்து பெரிதாகிக் கொண்டிருந்தன, ஒரு சிறு வெளியும் இருந்தது. குளத்தில் பனிக்கட்டி அப்பொழுது பூராவும் கரைந்தில்லை. சில இடங்களில் கரைந்து ஜலம் கருமையாகத் தெரிந்தது, ஐஸ்கூடக் கரு நிறமாகத்தான் காட்சி யளித்தது. குளத்தில் நீர் நிறைந்திருந்தது—நீரும் பனிக்கட்டியாகத் தரைமட்டத்துக்கு இருந்தது. நான் அங்கு வேலைசெய்த நாட்களில் பனிக் கட்டி உருகி லேசாக அசையத் தொடங்கிவிட்டது. நான் வீடு நோக்கித் திரும்பும்போது ரெயில்பாதைக் கருகிலுள்ள மணற் பரப்பு மஞ்சாடிச் சுற்றுவட்டத்து வர்ண மின்மையிலே பளபளத்தது, தண்டவாளங்கள் வஸந்தத்தின் சூரிய ஒளியிலே பளபளத்தன. வானம்பாடி, பீவீ முதலிய பறவைகள் மீண்டும் ஒரு புது வருஷத்தை நம்முடன் கழிப்பதற்குத் தயாராகக் குரல் கொடுத்துக் கொண்டிருந்தன. அவை இன்ப மயமான வஸந்த நாட்கள். மனிதனின் அதிருப்தி எனும் மாரிக்காலம் மாறி வஸந்தம் வந்து கொண்டிருந்தது. இயற்கைக்கு மட்டுமல்ல—மனிதனுக்கும் பனி உருகும் காலம்தான் அது. இவ்வளவு நாளும் உறங்கிக் கிடந்த உலகம் தூக்கம் நீங்கி விழிப்புப் பெற்று கை கால்களை அசைக்கத் தொடங்கியிருந்தது. ஒருநாள் என் கோடாலி பிடியிலிருந்து நழுவி விட்டது. ஒரு பச்சை ஹிக்கரிச் செடியை வெட்டி அதற்கு ஆப்பு வைத்துக் கல்லால் அடித்துவிட்டு, மரம்

ஊறிப் பெரிதானால் பிடி கெட்டியாக இருக்கும் என்று அதை குளக்கரையில் இருந்த ஒரு ஆழமான பொந்தில், ஜலத்தில், ஊறவைத்தேன். வர்ண வட்டங் களுடன் கூடிய ஒரு பாம்பு ஜலத்துக்குள் ஓடி, அடியில் படுத்துக் கிடந்தது—நான் அங்கிருந்து அசையும் வரையில் அது எவ்வித அசௌகரியமும் இல்லாமல், ஒரு கால்மணி நேரம் அப்படியே படுத்துக்கிடந்தது, அசைவதற்கே சோம்பலாக இருந்ததோ என்னவோ அதற்கு. இதே போன்ற ஒரு காரணத்தினுல்தான் மனிதர்கள் இப்போது தாழ்மையான அநாகரிகமான ஒரு நிலையில் இருக்கிருர்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. வஸந்தங்களுக்கெல் லாம் ஆதியான, ஆதாரமான வஸந்தம் வந்துவிட்டதானுல் மனிதர்கள் எழுவார்கள்—தாமாகவே எழுந்து மஹோன் னதமான, தெய்வீகமான ஒரு நிலையை எட்டுவார்கள். வாழ்க்கை என்பது அப்போதுதான் வளம் பெரிதும் பெறும். இதற்கு முன்னும் கூட நான், உடம்பில் ஒரு பகுதியை அசைக்கச் சக்தியற்றவைகளாக, சூரிய வெப் பம் படட்டும் என்று காத்திருக்கிற பல பாம்புகளைப் பார்த்திருக்கிறேன். சூரிய வெப்பம் தாக்கி உடம்பு நேராகும் வரையில் அவைகளால் அசையக்கூட முடி யாது. ஏப்ரல் முதல் தேதியன்று மழை பெய்தது. பனிக் கட்டிகள் பூராவும் உருகி ஓடத் தொடங்கிவிட்டன, காலை முன் பகுதியில் பனிப்படலம் வெய்யிலை மறைத்து மங்கச் செய்த வேளையிலே, தனியாக வந்த ஒரு காட்டு வாத்து குளத்திலே குதித்துக் கும்மாளமிட்டுக் கொண்டே குரல் கொடுத்ததைக் கேட்டேன் நான். வழி தெரியாமல் கூவிற்ருே அது—அல்லது பனிப் படலத்தின் குரலே தானே அது ?

மரங்களை வெட்டிச் செதுக்கி, வட்டங்களாகவும் உத்திரங்களாகவும் பலகைகளாகவும் தூண்களாகவும்

செய்கிற காரியம் இப்படிச் சில நாட்கள் நடந்தன. முதலில் என் குறுகிய கோடாலியைத் தவிர வேறு எதுவும் எனக்கு ஆயுதம் இல்லை. சொல்லக்கூடிய சிந்தனைகள், அறிவைக் கிள்ளும் விஷயங்கள் எதுவும் என் மனத்திலில்லை. வேலை நடந்து கொண்டிருக்கும்போது என் வாய் மட்டும் பின் வருகிற பாட்டைப் பாடிக் கொண்டிருக்கும் :

> "மனிதனுக்குப் பல விஷயக்கள் தெரியுமாம்
> பார்! அவன் பறக்கவும் தொடங்கிவிட்டான்
> கலைகளும் சாஸ்திரங்களும்
> ஆயிரக் கணக்கான ஆயுதங்களும் உதவுகின்றன
> ஆனல் அடிக்கும் காற்றைத் தவிர
> மனிதன் அறிந்தது தான் என்ன ?"

முக்கியமான உத்தரக் கட்டைகளை ஆறங்குல சதுரமாக வெட்டினேன், குறுக்குக் கட்டைகளை இரண்டு பக்கங்களில் மட்டும் செதுக்கினேன். தரையில் பரப்பவேண்டிய கட்டைகளையும் கூரை விட்டங்களையும் ஒரு பக்கம் மாத்திரம் சீவிச் செதுக்கி மறு பக்கம் பட்டை இருக்கும்படியாக விட்டுவிட்டேன்; அப்படி விடுவதால் மரத்துக்கு பலம் அதிகம், நன்கு செதுக்கப்பட்ட மரங்கள் பலத்தை இழந்து விடுகின்றன என்பது உண்மை தானே! இதற்குள் கோடாலியைத் தவிர வேறு பல விதமான ஆயுதங்களையும் நான் கடன்வாங்க வேண்டியதாகிவிட்டது. அந்த ஆயுதங்களைக் கொண்டு மரங்களையெல்லாம் உரிய முறையில் செப்பனிட்டுத் தயார் செய்து கொண்டேன், காட்டில் நான் வேலை செய்து கொண்டு தங்கிய பொழுது அதிகமில்லை என்று தான் சொல்ல வேண்டும். எனினும் வெட்டி வீழ்த்திய மரக்கிளைகளுக்கிடையில் உட்கார்ந்து கொண்டு பைன் இலைகளின் வாசனையை அனுபவித்துக் கொண்டு என் சாப்பாட்டுக் கென்று நான் கொணர்ந்த

ரொட்டியையும் வெண்ணெயையும் சாப்பிடுவேன். ரொட்டியைச் சுற்றி எடுத்து வந்திருந்த பத்திரிகைத் தாளைப்படித்தேன் என்கைகளிலெல்லாம் பைன் எண்ணை வழிந்தோடி அந்த உணவுக்கே ஒரு புது ருசியையும் வாசனையையும் தருகிற மாதிரி இருந்தது. நான் மரங்களை வெட்டி முடிப்பதற்குமுன் நான் பைன் மரங்களின் நண்பனாகிவிட்டேன். அவற்றை வெட்டத் தான் வெட்டினேன் என்றாலும் நான் அவற்றின் விரோதியாகிவிட வில்லை. எனக்கு அந்தப் பைன்ரக மரங்களைப் பற்றித் தெரிய வேண்டிய தெல்லாம் தெரிந்து விட்டது. நன்றாகத் தெரிந்து கொண்டவனை நண்பன் என்று சொல்லாமல் வேறு என்ன வென்று சொல்வதாம்? சில சமயம் காட்டிலே யதேச்சையாகத் திரிந்து கொண்டிருக்கிற யாராவது ஒருவன் என் கோடாலியின் சப்தம்கேட்டு வருவான். மரத்தூள்களின் மத்தியில் உட்கார்ந்து கொண்டு நாங்களிருவரும் இன்பமாகச் சம்பாஷிப்போம்.

நான் இந்த வேலையில் அதிகமாக அவசரப்படவில்லை. வேலை செய்வதை ஆனந்தமாக அனுபவித்துச் செய்தேன். ஆகவே ஏப்ரில் மாத மத்தியில் என் வீட்டின் மர வேலை முடிந்து அது நிறுத்திவைப்பதற்குத் தயாராகி விட்டது. ரெயில்வே லைனின் வேலை பார்த்த ஜேம்ஸ்காலின்ஸ் என்கிற ஐரிஷ்காரனின் குடிசையை நான் ஏற்கெனவே பார்த்து விலை பேசி யிருந்தேன், அந்தக் குடிசையில் அடிக்கப்பட்டிருந்த பலகைகளைப் பெயர்த்து எடுத்து வந்து என் வீட்டைத் தயார் செய்தாக வேண்டும். காலின்ஸின் குடிசை மிகவும் நேர்த்தியான குடிசை என்று அந்தப் பக்கத்தில் பெயர் பெற்றது, அதைப் பார்க்க நான் போன போது, அவன் வீட்டில் இல்லை, வெளியே சுற்றிப்பார்த்தேன். வீட்டிலிருந்தவர்கள் யார் கண்ணிலும் படாமல்நான் சிறிது நேரம் சுற்றிப்பார்த்தேன். சுவரில் இருந்த ஜன்னல்

உயரத்தில் உள்ளடங்கி யிருந்தது. மிகவும் சிறிய அளவில் அமைந்திருந்த குடிசை தான் அது. உயர்ந்திருந்த குடிசைக் கூரையுடன் இருந்தது. கூரையைத் தவிர வேறு ஒன்றும் வெளியே யிருந்து பார்க்கும் போது தெரியவில்லை. நாலு பக்கமும் ஐந்தடி உயரத்துக்கு புழுதிமேடு எழுப்பப் பட்டிருந்தது; எருமேடு போலத்தான் உயர்ந்திருந்தது அது. அந்த வீட்டின் கூரை தான் மிகவும் பலமான பகுதி—ஆனால் அதுவும் கூட வெய்யிலில் நன்ருக உலர்ந்து பல இடங்களில் வெடித்துப் போயிருந்தது. வாசற்படி, நிலைப்படி என்று ஒன்றும் இல்லை. ஆனால் கதவுக்கடியிலே கோழிகள் தாராளமாகப் போய் வருவதற்கு ஒரு சாளரம் விடப்பட்டிருந்தது. மிஸ்ஸிஸ் காலின்ஸ் வந்து என்னை உள்ளே அழைத்தாள். உள் பக்கத்தையும் பார்க்கலாமே என்ருள். என்னைக் கண்டு பயந்து கோழிகள் உள்ளே போய்ப் புகுந்து கொண்டன, உள்ளே இருட்டாக இருந்தது, தரையில் பெரும்பகுதியும் மண் தரைதான்; ஈரமாகவும் இருந்தது; கால்களில் ஒட்டுவது போலவும் இருந்தது. தரையில் பதிந்திருந்த பலகைகளில் சில வற்றை அப்புறப்படுத்தி எடுத்துப்போவது அவ்வளவாக லாபகரமாக இராது. ஒரு விளக்கை ஏற்றி கூரையின் உட் புறத்தையும், சுவர்களையும் எனக்குக் காட்டினுள் மிஸ்ஸஸ் கால்லின்ஸ். தரையில் பரப்பியிருந்த பலகை படுக்கைக்கு அடிவரையில் இருந்தது என்று காண்பித் தாள், "கீழ்த்தளத்தில் கால்வைத்து விடாதீர்கள்" என்று சொன்னுள் அவள். கீழ்தளம் என்பது இரண்டடி தூரம் இருந்த ஒரு குழி. "மேலேயும் நல்ல பலகைகள். சுற்றிலும் நல்ல பலகைகள். ஒரு நல்ல ஜன்னல்" என்று சொன்னுள் அவள். அந்த ஜன்னலில் முதலில் இரண்டு சதுரங்கள் இருந்தன. அதன்மூலம் பூனை பாய்ந்தோடிய தால் இப்போது ஒரு சதுரம்தான் இருந்தது. ஒரு ஸ்டவ் அடுப்பு, ஒரு படுக்கை, உட்காருவதற்கு ஒரு ஆஸனம்

எல்லாம் இருந்தது அந்தக் குடிசையில், அங்கேயே பிறந்து வளர்ந்து கொண்டிருந்த ஒரு கைக்குழந்தையும் இருந்தது. ஒரு பட்டுக்குடை வேறு இருந்தது, தங்கமுலாம் பூசிய சட்டம்போட்ட ஒருமுகம் பார்க்கும் கண்ணுடியும் இருந்தது, ஒரு புது காபி அரைக்கும் யந்திரமும் ஒரு மரத்தில் அடிக்கப்பட்டிருந்தது. எங்கள் பேரம் சீக்கிரமே முடிந்துவிட்டது—ஏனென்ருல் நான் உள்ளே சுற்றிப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே ஜேம்ஸ் வந்துவிட்டான். நாலேகால் டாலர் இன்றிரவே நான் கொடுத்துவிடுவது என்றும், அவன் மறுநாள் காலையில் ஐந்துமணிக்கெல்லாம் காலிசெய்து விட்டுப் போய்விட வேண்டியது என்றும் பேசி முடித்தோம். இடையில் அவன் யாருக்கும் எதையும் விற்கக்கூடாது—நான் காலையில் ஆறுமணிக் கெல்லாம் வந்துவிடலாம் என்று பேசி முடித்தோம், அதிகாலையில் வருவது நல்லது இல்லாவிட்டால் யாராவது கடன்காரர்கள்—இதுபற்றி அவன் விவரமாகவோ தெளிவாகவோ சொல்லவில்லை. சில்லரைத் தொந்தரவுகள் தரலாம் என்று சொன்ஞன் அவன். கொடுக்கவேண்டியது எதுவும் இல்லையென்ருலும் கேட்பவர்களுக்குக் குறைவு இராது என்கிற தோரணையில் பேசிஞன் அவன். இடத்துக்கு வாடகை எரிபொருளுக்குக் கிரயம் என்று யாராவது வரலாம் என்ருன் அவன். இதைத் தவிர வேறு எதுவும் வில்லங்கங்கள் கிடையாது என்று சொன்ஞன் அவன். ஆறுமணிக்கு அவன் குடும்பமும் அவனும் வெளியேறிவிட்டார்கள்—நான் தெருவிலே அவர்களைச் சந்தித்தேன். அவர்களுடைய சொத்துப் பூராவையும் ஒரே மூட்டையாகக் கட்டிக்கொண்டு அவர்கள் கிளம்பிவிட்டார்கள்—கண்ணுடி, படுக்கை, காபி அரைக்கும் யந்திரம், கோழிகள் எல்லாமே அந்த மூட்டைக்குள் அடங்கிவிட்டன. பூனை ஒன்றுதான் எஞ்சியது. ஆனல் அந்தப் பூனையும் அங்கு பின்தங்கி

விடவில்லை. அது காட்டிலே தப்பியோடி காட்டுப்பூனை யாகத் திரிந்து கொண்டிருந்தது சில காலம். பின்னர் நான் கேள்விப்பட்டேன்: அது காட்டு மிருகங்களுக் கென்று வைக்கப்பட்டிருந்த ஒரு பொறியில் அகப்பட் டுக் கொண்டு இறந்துவிட்டது என்றும் கேள்விப்பட் டேன். காட்டுப் பூனையிலிருந்து செத்த பூனை ஆவதற்கு அதற்கு அதிகநாள் பிடிக்கவில்லை,

அன்று காலை நேரத்திலேயே அந்தக் குடிசையை நான் பிரித்துவிட்டேன், ஆணிகளை எல்லாம் எடுத்துப் பல கைகளை அடுக்கிச் சிறுசிறு கட்டுகளாக வண்டியில் ஏற்றி எடுத்துக்கொண்டு போனேன். புல் தரையில் அந்தப் பலகைகளைப் பரப்பி வெய்யிலில் உலர்த்திவைத்தேன். காட்டுப் பாதையிலே நான் வண்டி ஓட்டிக்கொண்டு போகும்போது அதிசீக்கிரமே தோன்றிவிட்ட ஒரு த்ரஷ் பறவை குரல் எடுத்து எனக்காகப் பாடியது. அண்டை வீட்டுக்காரனுன ஸீலி என்கிற ஐரிஷ்காரன் நான் வண்டி ஓட்டிக்கொண்டு போயிருக்கும்போது பல நல்ல ஆணி களையும், ஆப்புகளையும், கட்டைகளையும் அப்புறப்படுத்தி விட்டான் என்று சிறுவன் பாட்ரிக் எனக்கு வேவுச் செய்தி கூறினுன். நான் வரும்போது எனக்கு வந்தனம் சொல்லிப் பேச்சுக் கொடுத்துக்கொண்டு நின்ருன் அந்த ஸீலி, தான் அதில் எதிலும் சம்பந்தப்படாதவன் போல நின்ருன் அவன், அழிக்கப்பட்ட குடிசைபற்றி அவன் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அவன் மனத்தில் வஸந் தத்தின் சிந்தனைகள் நிரம்பியிருந்தன. ஊரிலே கூலிக்கு வேலை எதுவும் கிடைக்கவில்லை என்பது அவன் புகார். என் காரியங்களையும் மேன்மையுறச் செய்வதற்கு ஒரு பார்வையாளன் வேண்டாமா? அந்தப் பார்வையாளன் அவன்தான். அவன் அங்கு இருந்ததனுல் நான் செய்து கொண்டிருந்த அல்ப காரியமும் ட்ராய் நகரத்திலிருந்து

கடவுள்கள் அப்புறப்படுத்தப்பட்ட செய்கைக்கு ஒப்பானது என்று சொல்லும்படியாக ஆயிற்று.

என் உணவுப் பொருள்களைச் சேமித்து வைப்பதற்காக என் உக்கிராண அறையை மலைச் சரிவிலே, தென் பக்கத்திலே, அமைத்துக் கொண்டேன். ஆறடிச் சதுரமும் ஏழடி ஆழமுமாக அந்த அறைக்குள் குழி தோண்டிக் கொண்டேன். அங்கு ஒரு வுட்சக்கின் (முயலின்) வளை ஏற்கனவே இருந்தது என்பது தெரிந்தது, ஸரமாக், ப்ளாக் பெர்ரி வேர்களைத் தாண்டி, செடி கொடிகளின் வேர்கள் எட்டாத இடத்திலே, மணற்பாங்கான களத்திலே என் உக்கிராண அறை அமைந்தது. அங்கு சேமித்து வைத்திருந்த உருளைக்கிழங்குகள் கடும் குளிரிலும் உறைந்து விடாது. பக்கத்துச் சுவர்களைச் சரிவாக வெட்டி விட்டிருந்தேன்; கற்கள் பதிக்காமலும் விட்டிருந்தேன், சூரிய வெளிச்சமே படாத இடமாதலால் மணல் சரியாமல் இருந்தது. அந்த உக்கிராண அறையை ஏற்பாடுசெய்துகொள்ள எனக்கு இரண்டேமணி நேரம்தான் பிடித்தது. பூமியிலே குடைவதில் எனக்கு அலாதியான ஒரு இன்பம் இருந்தது. மனிதன் பூமியில் எந்த ரேகைப்பிரதேசத்தில் வசிப்பவனானாலும் மித சீதோஷ்ண நிலையை விரும்பினான் என்றால் பூமிக்குள் தோண்டிக் குடைந்துதான் ஆகவேண்டும். வீடு பிரமாதமான மாளிகையாகவே இருக்கலாம்—அங்கேயும் சாமான்களைப் பதமாக பத்திரப்படுத்தப் பூமியில் குடைந்துதான் சேமிப்பு அறைகள் தயார் செய்கிறார்கள். பழங்காலத்திலிருந்தே வந்த ஒரு பழக்கம் இது. மேல் கட்டிடம் இடிந்து விழுந்து பாழ்த்துப்போன பிறகும் கூட, பின் சந்ததியார் கவனிக்கும்படியாக இந்தக் கீழ்த் தளமும் பள்ளங்களும் நிலைத்திருந்து விடுகின்றன. பூமிக்குள் உள்ள ஒரு வளைக்குள் போவதற்கு ஒரு நடைபாதையாகத்தான் பெரிய பெரிய மாளிகைகளும் கூட

உபயோகப்படுகின்றன என்று சொல்வது மிகையா காது.

கடைசியில், மேமாத ஆரம்பத்தில் நான் என் வீட்டு மரவேலையை நிமிர்த்தி வைத்து நிர்மாணிக்கத் தொடங்கினேன், பல நண்பர்களின் உதவியை நான் இந்த விஷயத்தில் நாடிப் பெற்றுக்கொண்டேன், நான் ஒருவனுகவே அதைச் செய்து முடித்திருக்க முடியாது என்பதில்லை; அண்டை அயலுடன் எனக்குள்ள உறவுகளைப் பலப்படுத்திக் கொள்ளவேண்டும். அதற்கு இது ஒரு நல்ல சந்தர்ப்பம் என்றுதான் அவர்களை நான் என் உதவிக்கு அழைத்தேன், இந்த நிர்மாண திட்டத்தில் எனக்கு உதவி செய்தவர்களைப்போல பாக்கியசாலிகள் வேறு யாரும் உலகில் கிடையாது என்றே நான் சொல்வேன். அதை என் பாக்கியமாகவும் தான் சொல்லவேண்டும். ஒருநாள் அவர்கள் என் வீட்டையும்விடப் பெரிய மாளிகைகளை நிர்மாணிக்க அழைக்கப்படுவார்கள் என்றே நிச்சயமாக நம்புகிறேன். ஜுலை நாலாந்தேதி முதல் நான் என் வீட்டில் வசிக்கத் தொடங்கினேன். அதற்குள் அந்த வீட்டிற்குப் பலகைகள் அடித்து, கூரையும் போட்டாகிவிட்டது. கூரைப் பலகைகளை சரியானபடி சீவி மடித்துப் பொருத்தி வைத்துவிட்டேன். மழை எவ்வளவு பெய்தாலும் உள்ளே ஜலமே வராதபடி செய்துவிட்டேன். ஆனல் கூரையைப் பொருத்துமுன் ஒரு மூலையில் ஒரு புகைபோக்கிக்கும் ஏற்பாடு செய்து கொண்டேன். இதற்கான கற்களை, இரண்டு வண்டிச் சுமையை என் கைகளாலேயே குளத்திலிருந்து தூக்கிக் கொணர்ந்து சேர்த்தேன், மாரி காலத்துக்கு முந்திய மாதங்களில், வயல்களில் களை கொத்தியானபிறகு இந்தப் புகைபோக்கியைக் கட்டினேன்—மாரிக் காலத்தில்தானே கணப்புக்கும் புகைபோக்கிக்கும் அவசியம் ஏற்படும்? அந்த நாட்களிலெல்

லாம் என் சமையலைக்கூட நான் வீட்டுக்கு வெளியேதான் வைத்துக் கொண்டேன். அதிகாலையிலேயே சமையல் வேலையை முடித்துக்கொண்டு விடுவேன். மற்ற நேரங்களில் சமைப்பதைவிட அதிகாலையிலேயே முடித்து விடுவதுதான் சௌகரியமானது, சுகமானது, உபயோகமானது என்று நான் இன்னமும் நம்புகிறேன். என் ரொட்டி வேகு முன் புயல் வீசத் தொடங்கினால், இரண்டு பலகைகளை வைத்து ரொட்டியோ அடுப்போ வீணாகிவிடாமல் மறைவு செய்துவிடுவேன். அந்த மறைவிலே நானும் உட்கார்ந்துகொண்டு, என் ரொட்டியைச் சுட்டுக்கொண்டு, எவ்வளவோ இன்பகரமான நாழிகைகளைப் போக்கியிருக்கிறேன். என் கைகளுக்கு வேலை அதிகமாக இருந்த அந்த நாட்களில் நான் வாசித்தது மிகவும் கொஞ்சம்தான். கீழே கிடந்த பத்திரிகைக் கிழிசல், என் பெட்டி படுக்கை, என் மேஜை விரிப்பு இவற்றைப் பார்த்துக்கொண்டே பொழுதை போக்கிவிடுவேன். இன்பகரமாகவும் உல்லாஸமாகவும் பொழுது போய்விடும். இலியத் காவியம் படிப்பதுபோல அவ்வளவு இன்பம் பயப்பனவாக இருந்தன அவையும் என்று சொல்வது மிகையே யாகாது.

நான் செய்ததையும் விட அதிகச் சாவகாசமாக, அதிக அவகாசம் எடுத்துக் கொண்டு, அவசரப்படாமல், சிந்தனை வசப்பட்டவனாக வீடு கட்டுவதுதான் உண்மையில் நியாயமானது, உபயோகமானது என்று நான் எண்ணுகிறேன். ஜன்னலுக்கும், கதவுக்கும், சுவருக்கும் அஸ்திவாரம் வேண்டும். அதே போல மனிதனுடைய சுபாவத்திலும் இதற்கெல்லாம் எப்படிப் பட்ட அஸ்திவாரம் தேவை என்பதையும் சிந்தித்துப் பார்த்துக் கொண்டு மனிதன் வீடு கட்டத் தொடங்கினால் நல்லது என்று தான் சொல்ல வேண்டும். அஸ்திவாரம் போடுவதோடு நின்றாலும் பாதகமில்லை--மேலே கட்டிடம் எழும்

பாவிட்டாலும் பாதகமில்லை, நம்முடைய இன்றைய அத்தியாவசியத் தேவைகளைக் காப்பதற்காக மட்டும் வீடு கட்டுவது சரியல்ல—வீட்டுக்குள் இருக்க, வைக்க வேறு முக்யமான பொருள் வேண்டும் என்கிற சிந்தனையுடன் வீடு கட்டினுல் தேவலை என்று தான் எனக்குத் தோன்றுகிறது. குருவி தன் கூண்டைத் தானே கட்டிக் கொள்வது போல மனிதனும் தன் கைகளாலேயே தன் வீட்டை நிர்மாணித்துக் கொள்வது என்பது தான் நியாயமான விஷயம். பறவைகள் கூடுகள் கட்டும் போது பாடுகின்றன. அதே போல, தங்கள் வீடுகளைத் தாங்களே கட்டிக் கொள்ளும் போதும், தங்களுக்கும் தங்கள் குடும்பங்களுக்கும் தேவையான உணவுப் பொருள்களைத் ங்களே எளிய நாணயமான வழிகளில் தேடும்போதும் பாடமாட்டார்கள் என்று யார்தான் சொல்ல முடியும்? இப்படி மனிதர்கள் செய்ய ஆரம்பிக்கும் போது கவியின் சக்தி, கவித்வம், எல்லாருக்குமே வந்துவிடலாமே! ஆனுல் அந்தோ! நாம் அப்படிச் செய்வதில்லை. குக்குப் பறவைகளும் கௌபருவைகளும் செய்வது போலச் செய்கிறோம். இந்தப் பறவைகள் பிற பக்ஷிகளின் கூண்டுகளிலே தங்கள் முட்டைகளைத் திருட்டுத்தனமாக வைக்கின்றன. வழிப்போக்கன் எவனையும் இந்தப் பறவைகளின் கீதங்கள் இன்புறச் செய்வதில்லை. இவை பாடவா பாடுகின்றன? சளசள வென்று சப்தம் போடுகின்றனவே தவிர இவை பாடுவதில்லை. நிர்மாணித்து நிறுத்துவது என்கிற ஒரு ஆனந்தத்தை என்றைக்கும் தச்சனிடமே விட்டுவிட்டுத் திருப்தி அடைந்து விடுவதா நாம்? கட்டிடம் கட்டுவது என்பது மக்களிடையே எப்படிப்பட்ட சொந்த அனுபவமாக அமைகிறது என்பதை நாம் கவனிக்கவே வேண்டாமா? நான் எங்கெல்லாமோ சுற்றியலைந்திருக்கிறேன்; எங்கும் தன் வீட்டைத் தானே கட்டிக் கொண்டிருக்கும் மனிதன் என் கண்ணில் பட்டதில்லை;

அது எவ்வளவு எளிய இயற்கையோடு இசைந்த கலப மான ஒரு காரியம்? எனினும் யாரும் அதைச் செய்வ தாகத் தெரியவில்லை. நாம் ஒரு சமுதாயத்தைச் சேர்ந்தவர் கள். தையற்காரன் மட்டும் தான் மனிதனின் ஒன்பதில் ஒரு பங்கு என்று சொல்வதற்கில்லை. மத குருவும், வியாபாரியும், குடியானவனும், சமுதாயத்திலுள்ள ஒவ் வொரு மனிதனையும் தங்களுக்குள் பங்கு போட்டுக் கொண்டு விடுகிறார்கள். தொழிலைப் பாகுபாடு செய்வது என்கிற இந்த விஷயம் எங்கே, எப்போது முடிவடையும்? இந்தத் தொழில் பாகுபாட்டினால் இறுதியில் கிடைக்கிற லாபம் தான் என்ன? இதன் நோக்கம் என்ன? எனக் குப் பதிலாக வேறு ஒருவன் சிந்தித்தால் தான் என்ன தவறு? அது தவறில்லை என்று வைத்துக் கொண்டாலும் கூட, அதற்காக நான் சிந்திக்கும் சக்தியை இழந்துவிட வேண்டும் என்று சொல்லவோ, சிந்திப்பதை நிறுத்திவிட வேண்டும் என்று சொல்வதோ நியாயமல்ல! நல்லதல்ல! விரும்பத் தக்கது மல்ல!

உண்மைதான்—இந்தத் தேசத்திலே கட்டிடவேலை செய்பவர்கள் என்று பலர் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் உண்மையை அடிப்படையாகக்கொண்ட கட்டி டங்களையே நிர்மாணிக்க முயலுகிறார் என்றுகூட நான் கேள்விப்பட்டிருக்கிறேன். உண்மையை அடிப்படை யாகக் கொள்வதனால், அழகும் அவசியமும் உடன் வந்து விடுகின்றன என்பதையும் ஒப்புக்கொள்கிறேன். அவர் நோக்கைமட்டும் வைத்துப் பார்க்கும்போது இதில் ஒன்றும் தவறு இல்லைதான். பொதுஜன சோம்பலையும் ஒரு வேடிக்கை விந்நியாசத்தையும் தவிர இதுபோது எதைக் குறிக்கிறது? கட்டிடக் கலையைச் சீர்திருத்த வந்த அவர் கூடுவாய் மலையிலே தொடங்குகிறார்—அஸ்தி வாரத்தில் தொடங்கவில்லை என்றே எனக்குத் தோன்று

கிறது. கட்டிடத்துக்கு அலங்காரங்களாக அமைகிற வற்றில் உண்மையும் அவசியமும் அழகும் இருப்பது அவசியமென்பது அவர் கட்சி—அதாவது ஒவ்வொரு சர்க் கரைக் கட்டிக்குள்ளும் ஒவ்வொரு பாதாம்பருப்பு அல்லது ஒரு கொட்டை இருக்கவேண்டும் என்று நினைப்பது போல. ஆனால் சர்க்கரையே கலக்காத பாதாம்தான் உடம் புக்கு நல்லது என்று தான் நினைக்கிறேன். வீட்டில் வசிப்பவன் எப்படிப்பட்டவன்; அவன் உள்ளும் புற மும் எப்படியிருக்கவேண்டும் என்பதுபற்றி இந்தக் கட்டிட நிபுணருக்குக் கவலையே கிடையாது. அலங்கார அணிகள் எப்படி வேண்டுமானாலும் தான் இருக்கட்டுமே; மனிதன்தானே இவற்றிற்கெல்லாம் மேலாக முக்கிய மானவன்? அலங்காரம் என்று சொல்லப்படுவது வெளி விவகாரம் மட்டும்தான்; தோல் அளவே உள்ள ஒரு தன்மைதான் என்று சிந்தித்துப்பார்க்கும் எவன் ஒப்புக் கொள்வான். பிராட்வேயில் வசிக்கும் மக்கள் வேண்டு மானால் தங்களுக்கென்று ஒரு மாதா கோயில் கட்டித் தருவதற்கு ஒரு கட்டிட நிபுணரிடம் ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். முத்துக்குள்ள சிப்பியும் ஆமையின் புள்ளி ஓடும் எந்த ஒப்பந்தத்தினால் ஏற்பட்டவை? தன் வீடு எந்தக் கட்டிட பாணியில் அமைந்திருக்கிறது என் பதுபற்றி, ஆமை தன் மேல் ஓட்டைப்பற்றி நினைக்கா திருப்பது நடக்கிறது கொடியைத் தூக்கிச்செல்லும் வீரனின் குணாதிசயத்தின் வர்ணம் அந்தக் கொடியில் இடம் பெற்றிருக்கவேண்டும் என்று சொல்வது அவசி யமா? போர்முனையிலே, எதிரி கண்டுகொண்டுவிடுவான் இந்தப் போர் வீரனின் குணாதிசயத்தை. அவசியம் நேரிட்டு, சமர் தொடங்கும்போது, அவன் முகம் பயத்தால் வெளி றிடலாம். இந்தக் கட்டிட நிபுணர், ஏன் கூடுவாய் மூலை அலங்காரத்தினின்றும் சாய்ந்துகொண்டு, தன் அரை உண்

மையை வீட்டுக்காரனுக்குக் கூறுகிறார். அந்த உண்மையை வீட்டுக்காரன் ஏற்கெனவே நன்கு அறிவான். என்பது பாவம்! அவருக்குக் தெரியவேயில்லை. என் கண்ணில் படுகிற கட்டிட அழகுகள் எல்லாம் வெளியேயிருந்து புகுத்தப்பட்டவை அல்ல; உள்ளேயிருந்து வெளிப்படையாக உருவம் பெற்றவைதான். வீடுகளில் வசிக்கிறவர்களின் அவசியங்கள், தேவைகள், துறைசயங்கள் முதலியவற்றிலிருந்து பிறந்த அழகுகள் இவையெல்லாம், வீட்டில் வசிப்பவன்தான் வீட்டுக்கு அழகு தருபவன்; கட்டிடம் கட்டுபவனும் அவனாகவேதான் இருக்கவேண்டும். அவனே அறியாத ஒரு உண்மை ஒளியும், ஒரு மேன்மைக்குணமும் அவன் வசிக்கும் வீட்டிலே வெளிப்படுகின்றன. இப்படிப்பட்ட ஒரு அழகு தோன்றக்கூடும் என்று எண்ணியிருக்கக்கூட வேண்டியதில்லை. இப்படித் தெளிவாகிற அழகுக்கு முன்னோடியாக வாழ்க்கையிலும் ஒரு அழகு இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவான விஷயம். ஓவியனைக் கேட்டுப் பார்த்தால் தெரியும், இந்தத் தேசத்திலுள்ள கட்டிடங்களில் மிகவும் சுவாரசியமானவை எவை என்றால், படாடோபமோ ஆடம்பரமோ அற்ற, தாழ்மையான மக்கள் வசிக்கும் குடிசைகள்தான் என்று ஓவியன் பதில் சொல்வான். கட்டிடங்களாக இவை அழகாக இருக்கின்றனவோ அல்லவோ? அவற்றில் வசிக்கும் சாதாரண ஏழை மக்களின் வாழ்க்கைத் தரத்தால் அவை அழகு கூடித்திகழ்கின்றன. நகரத்து மனிதனின் மாளிகையும் இப்படி மாறலாம்; எப்பொழுது என்றால் அந்த மனிதனின் வாழ்க்கையும் எளியதாகவும், கற்பனைக்கும் கருத்துக்கும் இசைந்ததாகவும் மாறும்போது என்று நிச்சயமாகப் பதில் சொல்லலாம். வீடும் கட்டிடமும் அழகாக அமைய வேண்டும் அழகாக அமைய வேண்டும்

என்று பாடுபட வேண்டிய அவசியமே யில்லை. மக்களின் வாழ்வு அழகாகும்போது, அவர்கள் வசிக்கும் வீடுகளும் அழகாகிவிடும் என்பதில் சந்தேகமேயில்லை. கட்டிட அலங்காரங்களில் பெரும்பகுதியும் மேல் பூச்சுப் பூசிய கூடுகள்தான்—உள்ளே ஒன்றும் இராது. ஸெப்டம்பர் மாதக் காற்றே போதும்—அவற்றை உலுக்கி உதறித் தள்ளிவிட, வேறு எதற்கும் எவ்வித ஹானியும் விளைவிக்காமல் இந்த அலங்காரங்களில் பலவும் லேசான காற்றிலும் பறந்தோடிப்போய்விடும்—பொய்க் கௌரவம போல ஒரு நொடியில் பறந்தோடிவிடும். உக்கிராண அறையிலே ஆலிவ்களோ, மதுவகையறுக்களோ சேமித்து வைக்க இயலாதவர்கள் கட்டிடக் கலை என்பதில்லாமலே காலந்தள்ளிவிட முடியும். இலக்கிய நடையில் உள்ள அலங்காரங்கள் பற்றி இப்படி அமர்க்களம் செய்து கொண்டிருந்தால் எப்படி இருக்கும்? மாதாகோயிலுக்கு கட்டிட அலங்கார அணிகள் செய்வித்து மகிழ விரும்புகிறவர்கள் பைபிள் நூலில் அலங்கார விசேஷங்கள் தவிர வேறு எதுவுமே இல்லாது போய்விட்டால் என்ன நினைப்பார்கள்? ஒரு விதத்தில் பார்த்தால் இப்படித்தான் இலக்கியக் கோமாளிகள் (பேராசிரியர்கள் உள்படத்தான்) உண்டாகிறார்கள் என்று சொல்ல வேண்டும். மேலே சில கட்டைகள் இப்படிச் சாய்ந்திருந்தால் என்ன—அப்படிச் சாய்ந்திருந்தால் என்ன? கீழேதான் எப்படி இருந்தால் என்ன? எந்த வர்ணம் எந்த வரிசையில் வைத்திருந்தால் என்ன? இதெல்லாம் அவ்வளவாகக் கவலைப்பட வேண்டிய விஷயங்களா என்ன? அவனே அந்த மரங்களைச் சாய்த்து வைத்தால், அவனே அந்த வர்ணங்களைத் தீட்டினால், ஏதோ கொஞ்சம் அர்த்தம் இருக்கிறது என்று சொல்லலாம். அவனாகவே தெரிந்து தன் கையாலேயே ஏதாவது செய்திருந்தானானால் அதற்கு

அர்த்தம் உண்டு என்று சொல்லலாம். வீட்டில் வசிப்பவனின் ஆத்மா பறந்துபோன பிற்பாடு, எது எப்படியிருந்தால்தான் என்ன? தச்சன் என்றால் சவப் பெட்டி பண்ணுபவன் என்று சொல்வதில் தவறு என்ன? ஏதோ ஒரு அலட்சிய பாவத்தில் அல்லது நம்பிக்கை யிழந்துவிட்ட வேகத்தில், மண்ணை எடுத்து உன் வீட்டைப் பூசு என்கிறான்—அந்த வர்ணம் நல்ல வர்ண மில்லையா என்கிறான். அவன் தன் கடைசி வீட்டைப் பற்றிய நினைவில் பேசுகிறானா? ஒரு காசைச் சுண்டிப் பூவா தலையா பார்க்க வேண்டியதுதான் விஷயத்தை அறிந்து கொள்ள. காசைப்பற்றியே நினைத்துக்கொண் டிருப்பவனுக்கு ஓய்வு நேரம் சற்று அதிகமாகவே தான் இருக்கவேண்டும்.' புழுதியை எடுத்து அந்த வர்ணத்தை வீட்டுக்கு வைப்பானேன்? உன் முகம் இருக்கிற வர்ணமே உன் வீடும் இருக்கட்டுமே; உனக்காக வெட்கப்பட்டு அதன் முகமும் சிவக்கட்டும் அல்லது உனக்காகப் பயந்து அதன் முகமும் வெளிரிடட்டும். குடிசைக் கட்டிடக்கலையைச் சீர்திருத்தம் செய்வதற்காக ஒரு முழு முயற்சியா? என் அலங்காரங்கள் எனக்காக வென்று தயாராகும்போது நான் அவற்றை அணியவும் தயாராகிவிட மாட்டேனா!

மாரிகாலத்துக்கு முன் புகைபோக்கியை அமைத்துக் கொண்டுவிட்டேன். என் வீட்டின் சுவர்களில் ஈரம் காக்காவண்ணம் மரப்பட்டைகளையும் அறைந்து விட்டேன்,

இப்படியாகப் பத்தடி அகலமும் பதினைந்தடி நீளமும் உள்ள ஒரு வீட்டை நான் கட்டிக்கொண்டுவிட்டேன். அதில் தூண்கள் எட்டடி உயரம் உள்ளவை, ஒரு சிறு அறையும் மச்சும் அதில் இருக்கின்றன. ஒவ்வொரு பக்கத்திலும் ஒரு ஜன்னல் இருக்கிறது. இரு தள்ளு

கதவுகள். ஒரு வெளிக்கதவு—எதிர்ப்பக்கத்தில் கணப்பும் அடுப்படியும் இருக்கிறது. நானே செய்த வேலைக்குக் கூலி என்று எதுவும் சேர்க்காமல் என்வீட்டுக்கு உபயோகப்பட்ட சாமான்கள் மட்டும் என்ன விலை என்று நான் கணக்குப் போட்டு வைத்திருக்கிறேன். இந்த வீட்டுக்கு எனக்கு மொத்தமாக ஆன செலவு இருபத்தியெட்டு டாலர்களும் பன்னிரண்டரை சதங்களும் ஆகும்.

வீட்டைக் கட்டியானபிறகு மிகுந்த மரங்களைக் கொண்டு பக்கத்தில் ஒரு சிறிய மரக் கொட்டிலும் நிர்மாணித்துக் கொண்டேன் நான்.

ஆடம்பரத்திலும் படாடோபத்திலும் கான்கார்டு நகரிலுள்ள எந்த மாளிகைக்கும் ஈடான, மேலான ஒரு மாளிகை நான் கட்டிக்கொள்ளப்போகிறேன். எப்போது என்று கேட்டால்.........சொல்லுகிறேன். இந்த என் வீட்டைப்போல அந்த மாளிகையும் எனக்கு இன்பம் தரும் என்று எனக்கே தோன்றவேண்டும். அதைக் கட்டுவதற்கும் இதைவிட அதிகமாகப் பொருள் செலவாகக் கூடாது.

ஒரு வருஷத்து வாடகைக்கு அதிகமாகாத செலவில், ஒரு ஆயுள் காலம் பூராவுக்கும் பயன்படக் கூடிய உபயோககரமான ஒரு வீட்டை இப்படிச் சுலபமாக எந்த மாணவனும் ஆராய்ச்சியாளனும் அமைத்துக் கொண்டு விடலாம் என்று அனுபவ பூர்வமாக நான் கண்டுகொண்டு விட்டேன். நான் இதுபற்றி அளவுக்கு மீறிப் பெருமை பாராட்டிக் கொள்ளுகிறேன் என்று நினைப்பவர்கள் சற்று நிதானித்துச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். நான் எனக்காகப் பெருமைப்பட்டுக் கொள்ளவில்லை; மனித குலத்துக்காகத்தான் பெருமைப்பட்டுக் கொள்கிறேன். நான் சொல்கிற, சுட்டிக் காட்டுகிற இந்த உண்மையை என் குறைபாடுகளும் முரண்பாடுகளும் எள்ளளவும் பாதிப்பதில்லை

என்றே சொல்லத் தோன்றுகிறது எனக்கு. பயனில் சொல்லாடலும் பொய்ம்மையும் இருக்கத்தான் இருக்கின்றன; தானியத்திலிருந்து கருக்காயை அகற்ற முடியவில்லையே என்று எல்லோருக்கும் உள்ளது போலவே எனக்கும் வருத்தம் உண்டுதான். ஆனால் இந்த விஷயத்தில் இஷ்டப்படி சொல்லவும் பெருமைப் பட்டுக் கொள்ளவும் எனக்கு உரிமை யுண்டு. பெருமைப்பட்டுக் கொள்வது தவறு என்கிற நினைப்பில் நான் சாத்தானுக்கு வக்காலத்து வாங்கிக் கொள்ள விரும்பவில்லை. உண்மையின் சார்பில் அழுத்தமான ஒரு வார்த்தையைச் சொல்லவே நான் விரும்புகிறேன். என் வீட்டைப்போல அதே விஸ்தீரணமுள்ள ஒரு அறைக்கு கேம்ப்ரிட்ஜ் கல்லூரியில் ஒரு மாணவன் வருஷத்துக்கு முப்பது டாலராவது வாடகை தர வேண்டியதாக இருக்கிறது. இதில் விசேஷமென்னவென்றால் ஒன்றுக்கு முப்பத்திரண்டாக இப்படிப்பட்ட அறைகளைக் கட்டிய அலுவலகத்துக்குச் செலவு மிகவும் குறைவாகத்தான் ஆயிருக்க வேண்டும். அங்கு வசிக்கிற மாணவர்களுக்கு அசௌகரியங்களுக்கும் குறைவில்லை; சந்தடி நெருக்கடி எல்லாம் அங்குண்டு; அறை நாலாவது மாடியிலிருந்தால் படியேறிப் போகிற சிரமமும் உண்டு. இந்த விஷயங்களிலெல்லாம் நமக்கு உண்மையிலேயே அறிவு கொஞ்சம் அதிகமாக இருந்தால், படிப்புக்காகச் செலவிடுகிற பணத்தைக் கொஞ்சம் குறைத்துக் கொள்ளலாம் என்று கூட எனக்குத் தோன்றுகிறது. கல்வி கற்பது என்பது இப்பொதெல்லாம் எவ்வளவு விலை கிராக்கியான விஷயமாக இருக்கிறது, கேம்பிரிட்ஜிலோ வேறு இடங்களிலோ சௌகரியங்களுக்கு என்று மாணவனோ அவன் உறவினரோ செலவழிப்பது அதிகமாகத்தான் இருக்கிறது. உரியபடி இதை நிர்வகிக்க முடியுமானால் வாழ்க்கை விரயம் என்பது பத்தில் ஒரு பங்காகக் குறையக் கூடும். பணத்தில் பெரும் பகுதி எந்த விஷயங்களுக்

காக கோரப்படுகிறதோ, அந்த விஷயங்கள் மாணவனுக்கு அத்யாவசியத் தேவைகள் அல்ல. மொத்தக் கணக்கில் பார்த்தால் பாடம் சொல்லிக் கொடுப்பது என்பதற்காக அதிகப் பணம் வாங்குகிருர்கள், ஆனல் பாடம் சொல்லி அறிந்து கொள்வதைவிட அதிகமாக மாணவன் பிறருடன், அறிஞர்களுடன் பழகுவதால், கற்றுக் கொள்கிருன்; அதற்கொன்றும் சம்பளம் கிடையாது. சாதாரணமாக ஒரு கல்லூரியைத் தொடங்குவது என்ருல் என்ன செய்கிருர்கள்? டாலர்களும் சதங்களுமாகச் சந்தா சேர்க்கிருர்கள். பிறகு, வேலையைப் பங்கிட்டுக் கொள்வது என்கிற கொள்கைப்படி—இந்தக் கொள்கையை எதற்கும் கண்ணை மூடிக்கொண்டு பின்பற்றக் கூடாது என்பது என் கட்சி—ஒரு கண்டிராக்டரைக் கூப்பிட்டுக் கட்டிடம் கட்டுவதை ஒப்புவித்து விடுகிருர்கள். அந்தக் கண்டிராக்டர் ஐரிஷ் கூலிகளையோ மற்றவர்களையோ கொண்டு வேலை வாங்குகிருன். எப்படி அதிக லாபம் சம்பாதிப்பது என்பது ஒன்றுதான் அவனுக்குக் குறி. மாணவர்கள் இந்தக் கல்லூரியிலிருந்து ஏதோ கற்றுக் கொள்வதாகச் சொல்லப்படுகிறது! கல்லூரிக் கட்டிடங்கள் தயாராகும் வரையில் அவர்களும் படிப்பதற்குத் தங்களைத் தயார் செய்து கொள்வதில் மும்முரமாக ஈடுபட்டிருக்கிருர்கள். இப்படியெல்லாம் நடப்பதனுல்தான், தலைமுறைக்குப் பின் தலைமுறையாக, கல்வி என்கிற காரியம் கிராக்கியாகிக் கொண்டிருக்கிறது; அளவுக்கு மீறிப் பணம் பிடிக்கிறது. மனிதனுக்கு அவசியமான தொழில்களையும் வேலைகளையும் செய்யாமல் ஒதுங்கி ஒதுங்கிப்போய் ஓய்வும் விடுமுறையும் பேராசையுடன் தேடுகிற மாணவனின் ஓய்வும் விடுமுறையும் லாபகரமான ஓய்வல்ல; நியாயமான கௌரவமான விடுமுறையல்ல. ஓய்வு பலனளிப்பது அனுபவத்தினுல்தான். இந்த அனுபவமே தனக்கு ஏற்படாமல் பார்த்

துக்கொண்டு விடுகிருன் மாணவன்—அது நல்லதல்ல. கல்லூரிக் கட்டிடங்களையும் மாணவர்களே அஸ்திவாரம் போட்டு எழுப்புவது, தங்கள் கைகளாலேயே உழைத்து எழுப்புவது நல்லது என்றே நான் நினைக்கிறேன். "மூளையால் வேலை செய்வதற்குப் பதில் மாணவர்கள் கைகளால் வேலை செய்யவேண்டியது அவசியமா? அதைத்தான் சொல்கிருயா நீ?" என்று ஒருவர் கேட்கக் கூடும். அப்படிச் சொல்லவில்லை நான்: ஆனுல் நான் சொல்வது சற்றேறக்குறைய அப்படித்தான் தொனிக்கிறது. வாழ்க்கையுடன் விளையாடுவதை விட்டுவிட்டு, வாழ்வதாக நடிப்பதை விட்டுவிட்டு, பாடத்திலே மட்டும் வாழ்க்கையைப் பற்றிப் படிப்பதை நிறுத்திவிட்டு, மாணவர்கள் வாழவும் தொடங்கினுல் நல்லது என்று நான் எண்ணுகிறேன். சமூகம் அவர்களை ஏராளமான செலவில் காப்பாற்றுவதற்குப் பதில், அவர்களும் ஆரம்ப முதல் முடிவுவரை கல்வி கற்கும்போதே, வாழவும் தொடங்கிவிடலாம். (வாழ்க்கை என்பது ஒரு ஆராய்ச்சிச் சாலை. அதில் வாழத் தொடங்குவது, உடனடியாக வாழத் தொடங்கி விடுவதுதான்,) மற்றெல்லாப் பாடங்களையும் விடச் சிறந்த பாடம். மனசுக்கு கணக்கு என்னும் பாடம் எவ்வளவு பயிற்சியளிக்கிறதோ அவ்வளவு பயிற்சி இப்படி வாழ்வதும் அளிக்கும் என்பதில் சந்தேகமேயில்லை. ஒரு பையன் கலைகளிலும் சாஸ்திரங்களிலும் பயிற்சிபெற வேண்டும் என்று நான் விரும்பினுல் என்ன செய்வேன் தெரியுமா? சாதாரணமாக இப்பொழுது படிப்பு என்று சொல்லித் தருவதில் என்ன செய்கிருர்கள்? வாழ்க்கைக் கலையைத் தவிர மற்றதெல்லாம் பற்றிப்பேசி, அனுஷ்டிக்கிற ஒரு பேராசிரியரிடம் பையனை அனுப்பி விடுகிருர்கள். தூரதரிசினியையும், நுண்பெருக்கியையும் கொண்டு எதையும் பார்க்கிருர்கள். கண்களை உபயோகப்படுத்துவதில்லை. ரஸாயனம் எல்லாம் கற்றுக் கொள்கிருர்கள்; சாப்பிடுகிற ரொட்டி சுடுவது

எப்படி என்று மட்டும் தெரியாது. யுக்திகள் பல படிப்பார்கள்; பொருளீட்டுவது மட்டும் தெரியாது. நெப்டியூனைச் சுற்றி வருகிற சில்லரைக் கிரஹங்கள் பலவற்றைக் கண்டுபிடிப்பார்கள்; கண்ணிற்குள் விழுந்து உறுத்துகிற தூசி தெரியாது; தன்னைக் கவரும் நாடோடி யார் என்றும் மாணவன் அறியான்! காடியிலேயுள்ள கிருமிகளைக் கவனிப்பதில் தன்னை உயிரோடு விழுங்கிக்கொண்டிருக்கிற ராக்ஷஸப் பூச்சிகள் மாணவன் கண்ணில் படுவதே கிடையாது. ஒரு பையன் கலைகளிலும் சாஸ்திரங்களிலும் பயிற்சி பெற்று முன்னேற வேண்டுமென்று நான் விரும்பினுல் அவனுக்கு இந்தமாதிரிக் கல்விப் பயிற்சி அளிக்க மாட்டேன். (கனிப் பொருளைத்தானே தோண்டி எடுத்து, உருக்கிவார்த்து தானே ஒரு கத்தியைச் செய்துகொண்டு அதற்கு மட்டும் தேவையான படிப்பைப் பெற்ற மாணவன் படிப்பாளியா அல்லது மாதம் பூராவும் உலோகங்கள் சம்பந்தமான பாடப் பிரசங்கங்களைக் கேட்டுவிட்டு அப்பா செலவில் ஒரு ராட்ஜர்ஸ் கத்தி வாங்கிக் கொண்டவன் படிப்பாளியா? கத்தியைச் சரியாக உபயோகித்துக் கையை வெட்டிக் கொள்ளாதவன் இவ்விருவரில் யாராக இருக்க முடியும்?)....(நான் படித்து முடித்துவிட்டு வெளி வரும்போது நான் கப்பலோட்டுவதில் படித்துத் தேர்ந்துவிட்டதாக அதிகாரிகள் சொன்னுர்கள். அது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. ஆனுல் துறைமுகத்தில் ஒரு திருப்பம் திரும்பியிருந்தேனுனுல் நான் படித்துக்கற்றுக் கொண்டதையெல்லாம்விட அதிகமாக அறிந்து கொண்டிருப்பேன் என்பதில் எனக்குச் சந்தேகமேயில்லை.) ஏழை மாணவன்கூடக் கல்லூரியில் படிப்பது அரசியல் பொருளாதாரம் தான். வாழ்க்கைக்கு ஆதாரமான, நேர் அர்த்தமான தத்துவம் என்பதோ கல்லூரிகளிலே சொல்லிக் கொடுப்பதாகக் கூடச் சொல்லப்படுவதில்லை. பலன் என்னவென்ருல் பையன் ஆடம் ஸ்மித், ரிகார்டோ, ஸே,

என்று பாடம் படித்துக் கொண்டிருக்கிற காலத்தில், தகப்பனுக்குக் கடன் ஏறிக் கொண்டிருக்கிறது.

கல்லூரிகளில் போலத்தான், "நவீன காலத்தவை என்று சொல்லப்படுகிற மற்ற பல முன்னேற்றங்" களிலும் என்று சொல்வது மிகையே யாகாது. இவற்றை யெல்லாம் பற்றி நாம் நம்மையே ஏமாற்றிக் கொள்ள முற்படுகிறோம். நிச்சயமாக முன்னேறி யிருக்கிறோம் என்று சொல்வதற்கு வகையே யில்லை. சாத்தான் தந்த முதலுக்கு வட்டி, வட்டிக்கு வட்டி என்று கணக்கு ஏறிக் கொண்டிருக்கிறதே தவிர வேறு அல்ல. முதல் கோணல் முற்றுங் கோணல் என்கிற வகையில் கடைசி வரையில் சாத்தானின் முதல் தான் அதிகரித்துக் கொண்டே போகிறது. ஏதோ கண்டுபிடிக்கிறோம்—கண்டு பிடித்ததைப் பெரிசாக எண்ணுகிறோம். அல்ப விஷயமாக இருக்கும் அது. இந்த அல்ப விஷயம், வாழ்க்கையில் பல முக்கியமான விஷயங்கள் நம் கண்ணில் படாதபடி மறைத்துவிடுகிறது. போவதற்கு வழிகளில் முன்னேற்றங் காண்பது சரிதான்—ஆனால் போகிற முடிவிலேயே முன்னேற்றம் இல்லை என்றால் இதிலெல்லாம் என்ன பிரயோசனம்? அந்த முடிவு சுலபமாக அடையக் கூடியதாகவே இருக்கிறது; ரெயில் வண்டிகள் ஓடி நியூயார்க்கையும் போஸ்டனையும் அடைவது போலத்தான் இதுவும். அவசரம் அவசரமாக நாம் மெயின் பிரதேசத்திலிருந்து டெக்ஸாஸ் பிரதேசத்திற்கு காந்தத் தந்தி அமைக்கிறோம்; அவை பேசலாம் ஒன்றேடொன்று, ஆனால் பேசுவதற்கு உறவாடுவதற்கு விஷயமே இல்லாமல் போய் விட்டால் என்ன பண்ணுவது? பிரபலஸ்தியான ஒரு செவிடனுக்கு ஒரு மனிதனைஅறிமுகம் செய்து வைத்தாகி விட்டது. காதுக் குழாய்க் கருகில் வாய் வைத்தாகி விட்டது; ஆனால் அவனுக்குச் சொல்வதற்கு விஷயம்

இருக்க வேண்டுமே! பேசினால் போதும், புத்திசாலித் தனமாகப் பேச வேண்டியதில்லை என்று இருந்தால் சரிதான்; ஆனால் அப்படியில்லையே! பழைய உலகத்தை யும் புதிய உலகத்தையும் பிணைத்து அட்லாண்டிக் சமுத் திரத்துக்கடியில் குழாய் மூலம் பேச ஏற்பாடுகள் செய்தாகி விட்டது. இரண்டு தேசங்களும் மிகவும் நெருங்கி வந்து விட்டன. செய்திகளைப் பல வாரங்களுக்கு முன்னதாக அங்கே கிடைக்கும்படி அனுப்பலாம்; அதெல் லாம் சரி. ஆனால் அகன்று துடிக்கும் அமெரிக்கக் காது களுக்கு எட்டும் முதல் செய்தி என்ன? ராஜகுமாரி அடி லெய்டுக்கு கக்குவாய் இருமல் வந்துவிட்டது என்பது தான் செய்தி என்றால் அதனால் என்ன பயன்? தூது சொல்பவனின் குதிரை மணிக்கு ஒரு மைல் ஓடுகிறது என்பதனால் அவன் கொண்டுவருகிற விஷயம் முக்யமான தாக ஆகிவிடுமா? கடவுளின்செய்தியைக்கொண்டு வருப வனல்ல அவன்; அதிசயங்கள் விளைவித்துக் கொண்டு ஏழையாக வெட்டுக் கிளிகளையும் காட்டுத்தேனையும் சாப்பிட்டுக் கொண்டு வருபவன் அல்ல அவன்.

ஒருவன் என்னிடம் சொல்கிறான்: "நீ ஏன் பணம் சேர்த்து வைக்கமாட்டேன் என்கிறாய்? பிரயாணம் செய்ய உனக்குப் பிடிக்கும். வண்டியேறி பிச்பர்க் போயேன். நாட்டைச் சுற்றிப் பார்." இதைச் செய்ய நான் அசடனல்ல. நடந்து போகிறவன்தான் அதிசீக்கிர மாக ஒரு குறிப்பிட்ட இடத்தை அடைய முடியும் என் பதை அறிந்தவன் நான். நான் என் நண்பனிடம் சொல் கிறேன்; "யார் முதலில் போகிறார்கள் பார்க்கலாமா? முப்பது மைல் இருக்கிறது பிச்பர்குக்கு; ரெயிலில் போனால் டிக்கட் தொண்ணூறு சதம். தொண்ணூறு சதம் என்றால் ஒரு நாள் கூலி—அதாவது சற்றேறக் குறைய. இதே ரெயில் பாதைபோட ஆட்களுக்கு அறுபது சதந்

கள் தான் ஒரு நாளைக்குக் கூலி கொடுத்தார்கள் என்பது எனக்குத் தெரியும். இந்தக் கூலியைச் சம்பாதிக்க ஒரு நாளோ ஒன்றரை நாளோ உழைத்து விட்டு நீ ரெயிலேறி பிச்பர்க் வரும் போது நாளை மாலை ஆகிவிடும். நான் இப்பொழுது விடியற் காலையிலேயே கிளம்பி இன்று அஸ்தமிப்பதற்குள்ளாகவே போய்ச் சேர்ந்துவிடுவேன். இன்று முழுவதும் வேலை உடனே கிடைத்து நீ உழைத்தாலும் கூட ரெயில் டிக்கட்டுக்குத் தேவையான தொண்ணூறு சதம் உனக்குக் கிடைக்குமா என்பது சந்தேகம் தான். உலகத்தையே இந்த ரெயில் பாதை சுற்றி வருவதாக வைத்துக் கொண்டாலும் கூட், எங்கும் உன்னை விட முந்தி நான் நடந்தே போய் விட முடியும். அனுபவம், நாட்டை அறிந்து கொள்வது என்கிற விஷயம் பற்றி யாருக்கு அதிக லாபம் என்று சொல்ல வேண்டிய அவசியமே யில்லை." அதற்குப் பிறகு அவனுடன் பேசக் கூட எனக்கு மனம் இருந்து.

இது தான் இயற்கை நியதி. இதை எந்த மனிதனும் ஏமாற்ற முடியாது. ரெயில் பாதையைப் பற்றி வேறு என்ன சொல்வது? அது எவ்வளவு அகலமோ அவ்வளவு தான் அதன் நீளமும்! பங்கு சேர்த்து, மண் வெட்டி எடுத்து வெட்டி, ரெயில் பாதைகள் போடுகிற காரியத்தைத் தொடர்ந்து செய்து கொண்டே யிருந்தால் மனிதர்கள் கடைசியில் எங்காவது ரெயில் ஏறி, எங்கேயாவது போய்ச் சேருவார்கள் என்று மனிதர்கள் தெளிவில்லாத ஒரு சிந்தனையில் ஈடுபட்டிருக்கிறார்கள்; கால விரயம் ஆகாது, பண விரயமும் ஆகாது என்று எண்ணுகிறார்கள். நிலையத்தை நோக்கி ஒரு கும்பல் ஓடலாம்; கார்டு "எல்லோரும் ஏறிக் கொள்ளுங்கள், கிளம்புகிறது" என்று சொல்லலாம்; புகை நீராவி எல்லாம் அடங்கிய பின் தெரிவது என்ன? வண்டியில் சிலர் இருக்கலாம்

மற்றவர்கள் வண்டிக் கடியில் அகப்பட்டுக் கொண்டு இறந்தவர்கள் தான்—“சோக சம்பவம்” என்று அதைக் குறிப்பிட்டு விடுவார்கள், டிக்கட்டுக்கான பணத்தைச் சம்பாதித்துக் கொண்டுவிட்டவர்கள் ரெயிலேறிப் போகலாம்—உண்மை தான்—ஆனால் சம்பாதிப்பதற்கு முன் பிரயாணம் செய்ய வேண்டும் என்கிற ஆர்வம் அற்றுப் போய் விடலாமே! அதற்கென்ன செய்வது? எப்பொழுதோ கிடைக்கப் போகிறது பிரயாணம் செய்கிற சுதந்திரம் என்பதற்காக பணம் சம்பாதிப்பது என்கிற காரியம் இருக்கிறதே—அதற்கு எதை ஒப்பாகச் சொல்லலாம், தெரியுமா? கவியாக வாழ்க்கை நடத்த விரும்பிய ஒரு ஆங்கிலேயன், பணம் சம்பாதித்துக் கொண்டு வந்து கவியாகலாம் என்று இந்தியாவுக்குக் கிளம்புகிற மாதிரி தான் இதுவும், பணம் சம்பாதிக்கிறானோ, இல்லையோ—அவன் கவியாக மாட்டான் என்பது நிச்சயம், அப்படி உண்மையிலேயே கவியாக விரும்புகிறவன் உடனேயே மேல் மாடியில் ஒரு குறுகலான அறையைப் பார்த்துக் குடியேறியிருக்க மாட்டானா? நாட்டிலிருக்கும் லக்ஷக் கணக்கான ஜரிஷ்காரர்கள் ஒரே குரலாக “நாங்கள் போட்ட ரெயில் பாதை நல்லதில்லையா?” என்று கோபமாகக் குதித்தெழுந்து கேட்கலாம். அதற்கு நான் சொல்லக் கூடிய பதில் இதுவே; “ஓரளவு நல்லது தான்; இன்னும் மோசமான காரியங்கள் பல நடந்திருக்கலாமே! மண்ணைத் தோண்டிப் புழுதியைக் கிளறிக் கொண்டு தள்ளிய காலத்தை நீங்கள் இன்னும் சிறப்பாகச் செலவிட்டிருந்தால் நன்றாயிருந்திருக்குமே! என்று நான் சொல்வேன்.

என் வீட்டைக் கட்டி முடிக்குமுன் எனக்குப் பத்துப் பனிரெண்டு டாலர்கள் சம்பாதிக்க வேண்டும் என்கிற எண்ணம் ஏற்பட்டது. அசாதாரணமான என்

செலவுகளைச் சமாளிக்க நான் நாணயமான, மனதுக்குகந்த வழியில் இந்தப் பத்துப் பனிரெண்டு டாலர்களையும் சம்பாதிக்க விரும்பினேன். அருகில் இருந்த இடத்தில், ஒரு இரண்டரைக் காணி நிலத்தில், பெரும்பகுதியில் அவரையும், மற்றப்பகுதிகளில் உருளை, தானியம், பட்டாணி, டர்ணிப்ஸ் முதலியவற்றையும் பயிரிட்டேன். சுற்றுவட்டத்திலிருந்த மொத்த நிலம் பதினேரு காணி. அதில் அநேகமாகப் பைன்மரங்களும் ஹிக்கரி மரங்களுமே வளர்ந்தன. சென்ற வருஷம் இந்த நிலம் ஒரு காணிக்கு எட்டு டாலர் எட்டு சதவிகிதம் விலைபோயிற்று. "அணில்களைத் தவிர வேறு எதுவும் இந்த நிலத்தில் விளையாது" என்று ஒரு குடியானவன் அபிப்பிராயம் சொன்னுன். நான் இந்த நிலத்தில் எருக்கூடப் போடவில்லை. பூமியை அதிகமாகப் பண்படுத்தவுமில்லை. சொந்தக்காரனுக இருந்தால் பூமிக்கு இவ்வளவும் செய்யலாம்—நான் வந்து உட்கார்ந்துகொண்டு இப்பசத்தியாக சொந்தம் கொண்டாடுகிறவன்தானே? முழுவதும் உழக்கூட இல்லை நான். உழுவதில் புரட்டிய வேர்கள் எனக்குப் பல நாள் விறகாக எரிக்க உபயோகப்பட்டன, வேரை வெட்டி எடுத்த இடங்களில் பீன்ஸ் பயிர் செழித்து வளர்ந்தது. முதல் பருவத்தில் ஆயுதங்கள் வாடகை, உதவிக்கு வந்தவனுக்குக் கூலி, விதை எல்லாமாகச் சேர்ந்து 14 டாலரும் எழுபத்திரண்டரை சதங்களும் ஆயிற்று. என் விவசாயத்திலிருந்து அந்தப் பருவத்தில் என் மொத்த வருவாய் 23 டாலரும் 44 சதங்களும், செலவு போக எனக்கு மிகுந்தது 8 டாலரும் எழுபத்தொண்ணரை சதங்களும். சாப்பிட்டது, உபயோகித்தது இதெல்லாம் கணக்கில் சேர்க்கவில்லை. கையில் இருந்த பொருள்களின் மதிப்பு நாலரை டாலர் என்று வைத்துக்கொள்ளலாம். எல்லாவற்றையும் சிந்தித்துப் பார்க்கும்போது—

அதாவது இன்று என்பதையும், மனிதனின் ஆத்மா எவ்வளவு முக்கியமானது என்பதையும் சிந்தித்துப் பார்க்கும் போது—இந்தக் குறுகலான கால அளவில், கான்கார்டில் மற்ற எந்தக் குடியானவனையும்விட நான் அதிக லாபத்துடன் விவசாயம் செய்துவிட்டேன் என்றுதான் சொல்ல வேண்டும்.

அடுத்த வருஷம் இதையும்விடச் சிறப்பாகவே என் விவசாயம் நடந்தது; பலன் தந்தது. என் தேவைக்குப் போதுமான அளவு நிலத்தை—சற்றேறக்குறைய ஒரு காணியில் மூன்றில் ஒரு பங்கை—நன்ருக மண்வெட்டியால் கொத்தி, பண் செய்தேன், இரண்டு வருஷத்து அனுபவத்தில் நான் கற்றுக்கொண்டது இதுதான். எளிமையான வாழ்வு வாழ்ந்து, கையாலேயே உழுது விளைவித்ததையே சாப்பிட்டு வாழ விரும்புகிறவனுக்குத் தேவையான நிலம் மிகவும் ஸ்வல்பமே. தேவைக்கு அதிகமாக எதையும் பயிரிடக்கூடாது. உழுது பயிரிட மாடு குதிரை தேவையில்லை. ஒருவனே மண்வெட்டியால் கொத்தி நிலத்தைச் சாகுபடிக்குப் பண் செய்து விடலாம். பழைய வயலுக்கு எருப்போட்டு விளையச் செய்வதைவிடப் புது வயலை உழுது பயிர் செய்வது லாபகரமானது. அவசியமான பண்ணை வேலைகளைச் சுலபமாகவே ஓய்வு நேரங்களில் செய்துகொண்டு விடலாம், குடியானவன் என்ருல் இப்போது செய்வது போல மாட்டையோ, குதிரையோ, பன்றியையோ கட்டிக்கொண்டு மாரடிக்க வேண்டியதில்லை. இவ்வளவும் என் அனுபவபூர்வமாக ஏற்பட்ட முடிவுகள். இது விஷயம் பற்றிப் பக்ஷபாதமில்லாமல் சொல்லவே நான் விரும்புகிறேன். இன்று நடைமுறையில் உள்ள முறைகள், கொள்கைகள், தோல்வியுறுகின்றனவா, வெற்றி பெறுகின்றனவா என்பதுபற்றியும் எனக்குக் கவலை இல்லை.

சமூக வாழ்வு இதனால் சிதைந்துவிடுமோ என்கிற பயமும் எனக்குக் கிடையாது. உண்மை இதுதான். மற்ற குடியானவர்களைவிட நான் அதிக சுதந்திரத்துடன் வாழ முடிந்தது, வீடோ வயலோ என்னை அசைக்க முடியாமல் பிணைத்துக் கட்டிப் போடவில்லை. கோணல்மாணலான என் சித்தப்படி என்னால் வாழ்க்கை நடத்த முடிந்தது. மற்ற குடியானவர்களைவிட நான் பணக்காரனாகவே இருந்தேன். என் வீடு எரிந்தாலும், என் பயிர்கள் வாடினாலும் அது என்னை அதிகமாக பாதிக்காது; என் நிலைமை முன்பிருந்ததைவிட மோசமாகிவிடாது.

மனிதர்கள் மந்தைகளை வைத்திருப்பதாக நாம் சொல்லுகிறோம். யோசித்துப்பார்த்தால் மந்தைகள்தான் மனிதர்களை வைத்திருக்கின்றன என்று சொல்லத் தோன்றுகிறது. மந்தைகளுக்குள்ள சுதந்திரம் அவற்றின் சொந்தக்காரனுக்கு இல்லை. மனிதர்களும் எருதுகளும் மாறிமாறி வேலை செய்கிறார்கள். அவசியமான வேலைகளைப்பற்றி மட்டும் கவனித்தோமானால், எருதுகளுக்குத் தான் சௌகரியங்கள் அதிகமாக இருக்கின்றன. எருதுகளுக்கு உணவு சம்பாதிப்பதிலேயே மனிதர்களின் பொழுதில் பெரும்பகுதி போய்விடுகிறது என்று சொல்ல வேண்டும். ஆடுமாடுகளுக்குத் தீவனம் சம்பாதிக்க ஆறு வாரங்களில் மனிதன் செய்கிற வேலை சாமான்யமானது அல்ல. எல்லாவிதங்களிலும் எளிய வாழ்வு நடத்துகிற எந்த தேசத்திலும், அதாவது எல்லோரும் ஞானிகளாய் உள்ள ஒரு தேசத்தில், மனிதர்கள் ஆடுமாடுகளைக் கட்டி மேய்க்கமாட்டார்கள்; அவற்றை நம்பி வாழமாட்டார்கள். ஞானிகள் தேசம் என்று ஒன்று இருந்ததுமில்லை, இனி இருக்கப போவதுமில்லை; உண்மைதான். அப்படி ஒரு தேசம் இருப்பது விரும்பத்தக்க விஷயம் என்றும் நான் எண்ணவில்லை. அது எப்படியானாலும், நான் எந்தக்

காரியத்திற்கும் தேவை என்று குதிரையையோ, மாட்டையோ வளர்க்க மாட்டேன், ஏனென்றால் குதிரை மனிதனாகவோ, மந்தை மனிதனாகவோ மட்டும் இருக்க நான் விரும்பவில்லை. சமூகத்துக்கு இதனால் லாபம் என்று நினைப்பவர்களும்கூட, யசமானிடம் திருப்தியடைய ஒரு குதிரைக் காசாரிக்குச் சந்தர்ப்பம் இருக்குமா என்பது பற்றிச் சிந்தித்துப்பார்க்க வேண்டியதுதான். மிருகங்களின் உதவியில்லாமல் மனிதனால் சில பொதுக்காரியங்களைச் சாதித்திருக்க முடியாது என்றே வைத்துக் கொள்வோம். அவற்றையும்விடச் சிறந்த வேறு பல விஷயங்களை மனிதன் தானாகவே செய்திருக்க முடியாது என்று சொல்லிவிட முடியுமா, என்ன? தனக்கே பெருமை தரும் காரியங்களைச் செய்துமுடித்திருக்க முடியும். அனுவசியமான, கலை சம்பந்தமான காரியங்கள் மட்டுமின்றி, படாடோபமான பயனற்ற பல காரியங்களையும் செய்ய மனிதன் மிருகங்களின் உதவியை நாடுவது என்று வந்துவிடும்போது, எருதுக்கு என்று மனிதன் அதிகமாக உழைக்கவேண்டிய நிலைமை ஏற்பட்டுவிடுகிறது. தனக்கென்று உழைப்பதுபோய், அவன் மாட்டுக்கென்று உழைக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டு விடுகிறது. அவற்றிற்கு அடிமையாகித்தானேதீரவேண்டும்? செங்கல்லாலும் சுண்ணும்பாலும் கட்டிய வீடுகள் பல இருப்பது உண்மைதான் என்றாலும், வீட்டைவிட அதிகப் பெரிதாக உள்ள கொட்டிலை உடையவனைத்தான் உலகம் பணக்காரனாக மதிக்கிறது. மாட்டுக் கொட்டிலின் நிழலிலே.வீடு வளருவது சரியல்ல. இந்த நகரிலே மாடுகளுக்கும், பசுக்களுக்கும், குதிரைகளுக்கும் பெரிய பெரிய கொட்டில்கள் இருக்கின்றன; பொதுக் கட்டிடங்களும் நிறையவே இருக்கின்றன; ஆனாலும் இந்தப் பிரதேசத்திலே சுதந்திரமான பிரார்த்தனைக்கும், சுதந்திரமான பேச்சுக்கும் போதுமான கூடங்கள் இன்னும் ஏற்படவில்லை.

(கட்டிடங்களை வைத்து மதிப்பிடுவதற்குப் பதில், தத்துவ பரமான சிந்தனைகளை வைத்து ஏன் தேசங்களை மதிப்பிடக் கூடாது? சிந்திக்கும் சக்தியைவிட ஒரு தேசத்துக்குச் சிறந்த ஞாபகச் சின்னம் வேறு என்ன இருக்கமுடியும்? இளை நாடுகளின் இடிபாடுகளை யெல்லாம்விட பகவத் கீதை எவ்வளவு மகோன்னதமானது!) கோபுரங்களும் கோயில்களும் அரசர்களின் ஆடம்பரத்தின் சின்னங்கள். எளிய, சுயேச்சையான மனம் படைத்தவன், அந்த அரச னின் கட்டளைக்குப் பணிந்து உழைக்க மாட்டான். (மேதையை எந்தச் சக்கரவர்த்தியும் விலைகொடுத்து வாங்கி வைத்திருக்க முடியாது.) ஏதோ சொல்ப அளவில் வேண்டு மானால் அதன் சாதனங்கள் வெள்ளியும் தங்கமும் சல வைக் கல்லும் என்று சொல்லலாம். மேதை என்பது இதற்கெல்லாம் அப்பாற்பட்டது. எதற்காக இத்தனை கற் கள் சுத்திகளால் தட்டி உரு மாற்றப்படுகின்றன—யாரா லாவது தயவு செய்து இதற்குப் பதில் சொல்ல இயலுமா? ஆர்கேடியா என்கிற லக்ஷிய பூமியிலே யாரும் கல் தச்சர் கள் என் கண்ணில் படவில்லை. உடைபட்ட ஏராள கற் கள் மூலம் தங்கள் ஞாபகத்தை நிலைநிறுத்த வேண் டும் என்ற பைத்தியக்கார ஆசை பல்வேறு நாடுகளுக்கு இருக்கிறது. அதேபோல அவை தங்களுடைய பழக்க வழக்கங்களை மிருதுவாக்கி, மெருகு கொடுப்பதில் சிரத்தை காட்டினால் எவ்வளவு நன்றாயிருக்கும்! புத்திசாலித்தன மான ஒரு காரியம், ஒரு சைகை, எத்தனையோ டன் கல் வேலைக்குச் சமானமானது, அல்லவா? வாளளாவிய ஞாப கச் சின்னமாக அந்தக் காரியம், சைகை, உலகம் உள்ள ளவும் நிற்குமே! கற்கள் அதனதன் இடத்தில் இருப்ப தைப் பார்க்கவே நான் விரும்புகிறேன். தீப்ஸ் நகரின் பெருமை, படாடோபம் மட்டமானது, ருசிப்பிசகானது. நூறு பாகங்கள் அமைந்த தீப்ஸ் நகரின் சுவரைவிட ஒரு எளிய ஏழைக் குடியானவனின் குடிசைச் சுவர் மதிப்புக்

குரியதாக எனக்குப் படுகிறது. தீப்ஸ் நகரத்தின் கற்கள் மனித வாழ்வின் உண்மை லக்ஷியத்துக்குப் புறம்பாக நகர்ந்து விட்டன. காட்டுமிராண்டித் தனமான, ஞான மில்லாத நாகரிகங்களும் மதங்களும் விசித்திர விசித்திர மான, அற்புதமான கோயில்கள் கட்டுகின்றன. உண் மைக் கிறிஸ்தவம் இதைச் செய்வதில்லை. ஒரு தேசத்தில் செதுக்கப்படும் கற்களில் பெரும்பகுதி அதன் கல்லறை களுக்கே உபயோகப்படுகின்றன. உயிருடனேயே அது தன்னை புதைத்துக் கொள்கிறது. பிரமிட்கள் என்று சொல்லுகிறார்களோ அவற்றைப் பார்த்து ஆச்சரியப்பட என்ன இருக்கிறது? இத்தனை அசட்டு மனிதர்கள் இவ்வ ளவு கேவலமான வேலையில் ஈடுபட்டு இதைச் செய்திருக் கிறார்களே என்று வேண்டுமானால் ஆச்சரியப் படலாம். பேராசைபிடித்த ஒரு அசட்டு ராஜாவின் உடலைப் புதைக்க இவ்வளவு மனிதர்கள் தங்கள் ஆயுட்காலம் பூரா வையும் செலவிட்டிருக்கிறார்களே என்று எண்ணிப் பார்க் கும் போது இது அதிசயமாகத்தானே இருக்கிறது! அந்த அரசனை நைல் நதியில் தள்ளிச் சாகவிட்டு, உடலை நாய் நரிகளுக்குக் கொடுத்திருந்தால் அது புத்திசாலித்தனமான, ஆண்மையான காரியமாக இருக்கும். ஏன் இப்படியெல் லாம் நடக்கவில்லை, ஏன் அப்படியெல்லாம் நடந்தது என்று கற்பனை செய்து ஒரு காரணம் கண்டுபிடிக்க என் னாலும் முடியும்! ஆனால் எனக்கு அவகாசமில்லை. மதம், கலைமோஹம் என்று சொன்னால், அது எகிப்திய கோயிலா னால் என்ன, அமெரிக்க பாங்கியானால் என்ன? உலகம் பூராவுமே இது ஒரே அடிப்படை விஷயம்தான். அதற்கு ஆகிற செலவு, அதனால் ஏற்படக்கூடிய பலனின் அளவுக்கு மீறி அதிகமாக இருக்கிறது. தற்பெருமை, படா டோப மோஹம் என்பதுதான் ஆதாரம் இதற்கெல்லாம்— பூண்டு ரொட்டி, வெண்ணை இவற்றில் சில மனிதர்களுக்கு இருந்த ஆசை மேற்படி மனோபாவம் நிறைவேறுவதற்கு

உதவியாக இருந்திருக்கிறது. மேல் நாடுகளிலும்கீழ் நாடுகளிலும் உள்ள ஞாபகச் சின்னங்கள் பற்றிப்பலர் அக்கறை காண்பிக்கிறார்கள், அவற்றைக் கட்டியது யார் யார்என்று அறிய ஆவலாக இருக்கிறார்கள். என்னைப் பொறுத்த வரையில்! யார் அந்த நாளில் இந்த மாதிரி யெல்லாம் கட்டாதிருந்தார்கள்? இப்படி அல்ப விஷயங்களில் காலம் செலுத்தாமல் இருந்தார்கள்? அதை அறியவே விரும்புவேன்.

இது போகட்டும். என் புள்ளி விவரங்களைத் தொடரலாம்.

ஸர்வே செய்வது, தச்சுவேலை செய்வது, வேறு கூலி வேலைகள் செய்வது என்று பக்கத்து கிராமத்தில் போய் வேலை செய்து நான் 13 டாலர் 34 சதங்கள் சம்பாதித்தேன். ஜுலை 4-ந் தேதியிலிருந்து மார்ச் முதல்தேதி வரையில் எட்டு மாதங்களில் 8 டாலர் 74 சதங்கள் மதிப்புள்ள சாமான்களை நான் உணவாக அருந்தினேன். நான் உணவு விஷயமாகச் செய்த முயற்சிகளில் பல தோல்வியுற்றன என்று தான் சொல்லவேண்டும்.

8 டாலர் நாற்பதேமுக்கால் சதங்கள் என் துணிமணிகள் பொருட்டு இந்தக் காலத்தில் எனக்குச் செலவாயின. எண்ணெ, மற்றும் சில பாத்திரங்கள் வாங்குவதற்கு என்று 2 டாலர் செலவாயிற்று.

இப்படியாக மொத்தத்தில் எனக்குச் செலவானது 66 டாலர் தொண்ணூற்றுஒன்பதே முக்கால் சதம்:

விளைபொருளை விற்றும், கூலிவேலை செய்தும் நான் சம்பாதித்தது மொத்தம் 36 டாலர் 78 சதங்கள் தான். செலவானதில் இதைக் கழித்துப் பார்த்தால் 25 டாலர் இருபத்தொன்றே முக்கால் சதங்கள் துண்டு விழுகிறது. இந்த ஆராய்ச்சியை நான் நடத்தத் தொடங்கியபோது என் கையில் சற்றேறக்குறைய இந்தத் தொகைதான்

இருந்தது. அதனுல் இதைவிட அதிகமாக என்னுல் கையை விட்டுச் செலவு செய்திருக்கமுடியாது. இதற்கு ஈடாக மறு பக்கத்தில் என் சுதந்திரத்தைக் காப்பாற்றிக் கொண்டது, அடிமைப்படாமல் ஓய்வு நேரத்தை அனுப வித்தது, வேலை செய்ததால் ஏற்பட்ட உடல் நலம் இவற் றுடன் நான் தங்குவதற்கு இஷ்டப்படுகிறவரையில் தங்குவதற்கு ஒரு சௌகரியமான வீடு இவ்வளவும் எனக்கு லாபம்.

அகஸ்மாத்தானது, அறிவு புகட்டாதது என்று இந்தக் கணக்கு விவரம் முதலில் தோன்றலாம். ஆனுல் அவை பூரணமாக இருப்பதாலும், அனுபவ பூர்வமாக ஏற்பட்டவை என்பதாலும், இந்தக் கணக்குக்கு ஒரு மதிப்பு இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. எனக்குத் தரப்பட்டதில் எதையும் கணக்கில் சேர்க்காமல் விட்டு விட வில்லை நான். மேலே கொடுத்த கணக்கு விவரங் களிலிருந்து ஒரு வாரத்துக்கு எனக்கு உணவுக்கு மட்டும் 27 சதங்கள் செலவானதாகத் தெரிகிறது. இந்தக் காலத் துக்கப் புறம், சுமார் இரண்டு வருஷங்களுக்கு என் முக்ய உணவு அரிசி தான். இந்தியாவின் தத்துவ ஞானத்தைப் பாராட்டிய நான் அரிசியை உணவாகக் கொண்டதும் நியாயம் தானே! நான் குடித்தது எப்பொதுமே தண்ணீர் தான்.

இந்த சீதோஷ்ண நிலையிலும் கூட ஆச்சரியகரமான சொல்ப சிரமத்துடன் ஒருவனுக்குத் தேவையான உணவை ஒருவன் அடைய முடியும் என்று என் இந்த இரண்டு வருஷ அனுபவம் எனக்கு அறிவுறுத்தியது. மிரு கங்களைப் போல எளிய உணவு உண்டு, மனிதன் தன் பலத்தையும் உடல் நலத்தையும், காப்பாற்றிக் கொள்ள முடியும் என்றும் அறிந்து கொண்டேன். எத்தனையோ நாள் என் வயலில் திரட்டிய பார்ஸ்லே (போர்ட்டுலாகா

அலீர்ஸியா) தானியத்தை வேகவைத்து உப்புப் போட்டுத் திருப்தியாகச் சாப்பிட்டிருக்கிறேன். பல விதங்களிலும் இந்த உணவு திருப்திகரமாகத்தான் இருந்தது. தித்திப்பான பச்சை தானியத்தை உப்புப் போட்டு வேகவைத்துச் சாப்பிடுவதை விட வேறு என்ன வேண்டும் மனிதனுக்கு? சாதாரண நாட்களுக்கு, அமைதியான போது சாப்பிட இதை விடச் சிறந்தது வேறு என்ன இருக்கக் கூடும்? இதை மாற்றி நான் சாப்பிட்ட சமயங்களில் கூட, ஏதோ பசி ருசி என்று செய்தேனே தவிர ஆரோக்கியம் கெட்டுவிட்டது என்றோ, உடம்பில் திடமில்லை என்றோ அல்ல. ஆனால் இப்போது நடப்பதென்ன? மனிதர்களில் பலர் அவசியமான தேவைகள் இல்லாது பட்டினி கிடப்பதை விட, ஆடம்பரங்களையும் ஷோக்குகளையும் விரும்பிப் பட்டினி கிடப்பது தான் அதிகமாகிக் கொண்டிருக்கிறது. எனக்கு ஒரு ஸ்திரீயைத் தெரியும்—தன் மகன் தண்ணீரை மட்டும் சாப்பிட்ட காரணத்தினால் தான் அவன் அகால மரணமடைந்தான் என்று உண்மையாகவே நம்புகிற ஒரு ஸ்திரீயை எனக்குத் தெரியும்.

நானே தான் என் ரொட்டியைச் சுட்டுக் கொண்டேன். முதலில் வெளியே திறந்த வெளியில், பலவிதமான மாவுகளையும் பண்டங்களையும் மாற்றி மாற்றிப் போட்டு. என் ரொட்டிகளைச் சுட்டுக் கொண்டேன் நான். என் கையாலேயே நான் பழுக்க வைத்த தானியப் பழங்கள் அவை என்று நான் பெருமையாக நினைப்பதுண்டு. மாரி காலத்தில். இந்த மாதிரி ரொட்டிகளை ஒவ்வொன்றாகச் சுடுவது விளையாட்டாக இருந்தது. ரொட்டி சுடுவது என்பது பழங்காலத்திய, இன்றியமையாத ஒரு கலை. அதைப் பூரணமாக, ஆரம்ப முதல் நான் கற்றுக் கொண்டேன். ரொட்டி மாவைப் புளிக்கச் செய்யாமல் செய்கிற ரொட்டி கூட எனக்குப் பிடித்தமானதாகத்தான்

இருந்தது. ரொட்டி செய்வதற்கு அவசியமானது என்று கருதப்படுகிற லெவன், ஸோடா உப்பு முதலியன கூட இல்லாமல், ரொட்டியை ருசி யுள்ளதாகச் செய்யலாம் என்று அனுபவ பூர்வமாக நான் கண்டு கொண்டேன். எந்தச் சந்தர்ப்பத்துக்கும் சூழ் நிலைக்கும் தன்னைச் சரி செய்து கொள்ளக் கூடிய சக்தி வாய்ந்தவன் மனிதன். உயிருக்கு ஊன்று கோல் என்று கருதப்படுகிற இந்த ரொட்டியும் கூடச் சில சமயம் எனக்குச் செய்ய முடியாமல் போனதுண்டு. பையில் காசில்லாத காரணத்தினால், ஒரு சமயம் ஒரு மாதத்திற்கும் அதிகமாக என்னால் ரொட்டி கூடச் சாப்பிட முடியாமல் போய்விட்டது.

தானியங்கள் ஏராளமாக விளைகிற இந்தப் பிரதேசத்திலே நியூ இங்கிலாந்துக்காரன் எவனும் தனக்குத் தேவையான உணவுப் பண்டங்களையும் ரொட்டியையும் தானே உற்பத்தி செய்து கொள்ள முடியும். தூரத்தில் உள்ள, கப்பல் வரவை எதிர்பார்த்து விலை உயர்ந்து இறங்குகிற எதையும் அவன் உணவுக்கு நம்பி வாழ வேண்டியது இல்லை. கான்கார்டு நகரில் மனிதர்கள் எளிய வாழ்க்கையிலிருந்தும் சுதந்தரத்திலிருந்தும் எவ்வளவு தூரம் நகர்ந்து விட்டார்கள் என்பதைக் குறிக்க ஒரே ஒரு உதாரணம் போதுமானது. புதிய இனிய தானியம் கடைகளில் கிடைப்பதே கிடையாது; தானே பயிர் செய்து சேகரிக்கிற தானியத்தை குடியானவன் ஆடுமாடுகளுக்குப் போட்டு விட்டு, தன் உணவுக்கென்று இதைவிட அதிக சத்துள்ளது என்று சொல்ல முடியாத மாவைக் கடைகளில் வாங்கிக் கொள்ளுகிறான். அதற்கு விலையும் ஒன்றுக்கிரண்டாகக் கொடுக்கிறான். எனக்குத் தேவையான தானியங்களை நானே பயிர்செய்து, அறுவடை செய்து, மாவு தயாரித்து, ரொட்டி சுட்டுக்கொள்ள முடியும் என்று நான் கண்டுகொண்டேன், ஆராய்ச்சிகளின்

விளைவாக பறங்கி, பீட் முதலியவைகளைக் கொண்டு சர்க்கரைப் பாகு தயாரிப்பது எப்படி என்று நான் கண்டு கொண்டேன். ஒரு சில மேபிள் செடிகளை நட்டு விட்டேனானால் சர்க்கரை இன்னும் சுலபமாகக் கிடைத்து விடும். இவை வளருமட்டும் உபயோகிக்கச் சர்க்கரைச் செடிகள் பலவும் இருந்தன. பார்ஸ்னிப், வால்நட், பேரிகள் இவையும் தித்திப்பானவை. கடைசியாக உப்பு வேண்டுமானால் அதுவும் சுலபமாகவே கிடைத்தது. அதைச் சாக்கிட்டு கடற்கரைக்கு ஒருதரம் போய்வருவது உல்லாஸமாக இருந்தது. சில சமயம் உப்பே இல்லாமலும் இருந்துவிடலாம்; அப்படி இருந்தால் தண்ணீர் சாப்பிடுவதும் குறையும். இந்தியர்கள் உப்பைத் தேடிப் போவதில்லை என்று தெரிந்துகொண்டேன்.

என் உணவைப்பற்றிய வரையில் பண்டமாற்று, வியாபாரம் இரண்டையும் தவிர்ப்பது சுலபமாக இருந்தது. வீடும் இருந்தது. துணியும் எரி பொருளும்தான் அடுத்தபடியான முக்கிய தேவைகள். இப்போது நான் அணிந்திருக்கும் கால் சட்டைகள் ஒரு குடியானவனின் குடும்பத்தில் கையால் நெய்யப்பட்டவை. மனிதன் குடியானவனாகிறான்; குடியானவன் வேலையாளாகிறான்; அதுவரையில் அவன் சில நற்குணங்கள் உள்ளவனாக இருக்கிறான் என்பதுபற்றி நாம் கடவுளுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். குடியானவன் வேலையாளாகி வயலுக்கும் ஆடு மாடுகளுக்கும் அடிமையாகிவிடும் வரையில் அவன் வீட்டில் நெசவும் மற்ற அவசியமான வேலைகளும் உரியபடி நடந்துவருகின்றன. புது இடத்தில், எரிபொருள் என்பது என்னவோ சுமைதான்—என்ன செய்வது? நானாக ஒரு இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டு, தாற்காலிகமாக அதை எனது ஆக்கிக் கொள்ளக் கூடாது என்று நிர்ப்பந்தம் ஏற்பட்டால்.

இடத்துக்காக உள்ள கிரயத்தைக் கொடுத்துவிட்டால் போகிறது. அது எப்படியிருந்தாலும் என் ஆக்கிரமிப்பினுல் இந்தப் பூமி வளம்பெற்றது என்றுதான் நான் சொல்லுவேன், இதன் கிரய மதிப்பு அதிகமாகிவிட்டது.

எதிலும் நம்பிக்கை வைக்காத ஒரு வர்க்கத்தினர் இருக்கிறுர்கள். அவர்கள் சில சமயம் என்னை விதவித மான கேள்விகள் கேட்கிறுர்கள். காய்கறி தானியம் இயன்றமட்டும் தின்றுகொண்டே, சாகபக்ஷிணியாக என்னுல் உயிர்வாழ முடியுமா என்று கேட்கிறுர்கள். நம்பிக்கைதான் எதற்கும் ஆதாரம் என்கிற அறிவில்தான் நான் அடிப்படையாகவே சொல்லிவிடுவது வழக்கம்—என்னுல் ஆணிகளைத் தின்றுகொண்டு கூட உயிர்வாழ முடியும் என்று. இதைப் புரிந்துகொள்ள முடியாதவர்கள், நான் சொல்லுவதில் பெரும்பகுதியைப் புரிந்துகொள்ள முடியாது என்பது நிச்சயம். இந்த மாதிரியான முயற்சிகள் எங்காவது யாராவது செய்தார்கள் என்று கேட்டால் எனக்குத் திருப்தியாக இருக்கிறது. ஒரு வாலிபன் ஒரு பதினைந்து நாட்கள் பச்சை தானியத்தை மட்டும் பல்லால் கடித்துத் தின்று விட்டு இருக்க முடியுமா என்று செய்து பார்த்தான் என்று கேள்விப்பட்டு சந்தோஷப்பட்டேன் நான். இதையே தான் அணில் வர்க்கம் முயன்று சாதித்துவிட்டது. மனித குலத்துக்கே இந்த மாதிரியான ஆராய்ச்சிகள் நன்மை பயக்கின்றன. ஒரு சில கிழடுகள் இந்த மாதிரி ஆராய்ச்சிகள் செய்யக் சக்தியற்றவர்களாக இருக்கலாம். அல்லது மாவு மில்லில் மூன்றில் ஒரு பங்குக்குச் சொந்தக்காரர்கள் இது பற்றிக் கவலைப்படலாம்; அவ்வளவு தான். மற்றப்படி இதனுலெல்லாம் மனித குலத்துக்கே நன்மை தான் விளைய முடியும்.

எனக்குத் தேவையான சாமான்களில் பலவற்றை நானே தான் செய்து கொண்டேன், ஒரு படுக்கை, ஒரு

மேஜை, ஒரு சாய்வு மேஜை, மூன்று நாற்காலிகள், மூன் றங்குல விட்டமுள்ள முகம் பார்க்கும் கண்ணுடி, கொரடு, ஒரு கெட்டில், ஒருதவா, ஒரு வாணலி, ஒரு சொம்பு, இரண்டு கத்திகள், ஒரு போர்க், மூன்று தட்டுகள், ஒரு கோப்பை, ஒருஸ்பூன், எண்ணெய்க்கு ஒரு ஜாடி, சர்க்க ரைப் பாகுக்கு ஒரு ஜாடி, ஒரு ஜப்பான் இனுமல் அடித்த விளக்கு—எல்லாம் இருந்தன என் வீட்டிலே. உட்காரு வதற்கு ஆசனம் இல்லாமல், பறங்கிக் காய் மேல் உட் கார வேண்டும் என்கிற அவசியம் ஏற்படும்படியான ஏழை ஒருவனுமில்லை. அப்படி யிருந்தால் சாமர்த்திய மில்லாமை என்று தான் சொல்ல வேண்டும். வேண்டு மென்று கேட்கிற மாத்திரத்திலே கிடைக்கக் கூடிய, எனக்குப் பிடித்தமான நாற்காலிகள் கிராமத்திலே ஏராள மாக இருக்கின்றன. பெரிய 'பர்ணிச்சர்' கம்பெனிக் காரன் தயவில்லாமல் நான் உட்காரவும் நிற்கவும் உறங் கவும் முடியும் என்பது பற்றி நான் கடவுளுக்கு நன்றி செலுத்துகிறேன். காலிப்பெட்டிகளும், மேஜை நாற்காலி களுமாக வண்டியில் ஏற்றி ஒரு இடத்திலிருந்து வேறு இடத்துக்கு வெய்யிலும் மனிதர்களின் கண்களும் பட, அனுப்புகிறவன் வெட்கப்படாமல் எப்படி இருக்க முடியும்? பர்ணிசரைப் பார்த்து அதன் சொந்தக்காரன் ஏழையா பணக்காரனு என்று அனுமானிக்க என்னல் முடிவதில்லை, (ஏராளமான சாமான்களைச் சேகரித்து வைத்திருப்பவன் பரம ஏழை என்று தான் எனக்குத் தோன்றுகிறது: பன்னிரண்டு வீடுகளுக்குப் போதுமான மரசாமான்கள் எதற்காக ஒருவனிடமே இருக்க வேண்டும்? அந்தப் பன்னிரண்டு வீடுகளின் ஏழ்மையும் இங்கு, இத்தனைக்கும் மத்தியில், திரண்டு உருப்பெற்றிருப் பது போல எனக்குத் தோன்றுகிறது.) வீடு மாற்றுகிற வர்கள் தங்கள் உடைமைகளிலிருந்து விடுதலை பெறு வதற்காக மாற்றுகிறார்களே தவிர வேறு என்ன? பழகி

விட்ட இந்த உலகத்திலிருந்து வேறு ஒரு உலகத் துக்குப் போவதற்காகத்தான் நகருகிறார்கள் என்று சொல்லவேண்டும், புதுரக ஃபர்னிசர் உள்ள இடத் துக்குப் போகிறார்கள்; பழசை எரித்துவிட வேண்டியது தான்—அதைப் பார்க்கவே அவ்வளவு எரிச்சலாகி விடு கிறது. இடுப்பிலே கட்டிக்கொண்டு இவ்வளவையும் சுமக்க மாட்டாத சுமையாகத்தானே ஒரு மனிதன் சுமந்து கொண்டு அலைகிறான்? இதைவிட்டுவிட்டு அவ னால் எங்கும் எவ்வளவு சிறிய தூரமும் அசைந்துவிட முடியாது. பொறியில் அகப்பட்டுக் கொண்ட அதிர்ஷ் டச்கார நரி, வாலைப் பொறியிலே விட்டுவிட்டுத் தப்பித் துக் கொண்டது. தன் மூன்றுவது காலை வெட்டி உடைத்துக் கொண்டு புனுகு எலி பொறியிலிருந்து தப்பி ஓடும். மனிதன் ஒருவன்தான், பொறியில் மாட்டிக் கொண்டு, பொறியையும் தூக்கிக் கொண்டு அலைபவன்! இழுத்த இழுப்புக்கு வந்து, பழைய நிலையை மாருமல் காப் பாற்றிக் கொள்ளும் தன்மையை இழந்து விட்டான் மனி தன் என்பதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது? முன் னும் போகமுடியாமல் பின்னும் போகமுடியாமல் ஒரு தவிப்பான இரண்டுங் கெட்டான் நிலைமையில் நின்று அவதிப்படுபவர்கள் எத்தனை பேர். நீ ஒரு ஞானியாக இருந்தால் உனக்குத் தெரியும்—ஒரு மனிதனைப் பார்க்கும் போது அவன் சொந்த உடமைகள் எல்லாம் அவனோடு பற்றிக்கொண்டு வந்து கொண்டிருக்கின்றன ஒரு அருஞ், சுமையாக,என்பதை அறிவாய் நீ. தன்னுடையதல்லஎன்று அவன் சொல்லிக்கொண்டிருப்பவை கூட அவன் சுமை யில் ஏறியிருக்கின்றன என்பதும் தெளிவாகத் தெரியும். சமையலறை பர்னர்களைக் கூட உபயோகமோ மதிப்போ அதிகமில்லாததைக் கூட ஒவ்வொருவனும் கட்டிச் சுமந்து கொண்டுதான் வருகிறான். இவ்வளவு கனத்தைச் சுமந்து வருபவன் எவ்வளவு வேகமாக முன்னேறிவிட

முடியும்? வழியிலே ஒரு வாசல் குறுக்கிடுகிறது என்று வைத்துக் கொள்வோம், குறுகலான வாசல் அது. மனிதன் மட்டுமானால் அதைச் சுலபமாகவே தாண்டி விடலாம். அவன் பின்னால் வருகிற பாரவண்டி அந்த வாசலில் சிக்கிக் கொண்டு விட்டது. மனிதன் அங்கு நின்று தவிக்க வேண்டியது தான், மேலேசொல்லமுடியாமல், மற்றபடி சமர்த்தன்தான்; சுதந்திரமான மனிதன் போலத்தான் இருக்கிறான்; அப்படிப்பட்டவன் இந்த மாதிரி சந்தர்ப்பத்தில் "என் ஃபர்ணிசரை என்ன செய்வது? அதை இன்ஷ்யூர் பண்ணுவதா வேண்டாமா?" என்று சொல்லித் தவிக்கும்போது எனக்குப் பரிதாபமாகத்தான் இருக்கிறது. இந்த அழகான வண்ணத்திப்பூச்சி அநியாயமாகச் சிலந்தி வலையில் சிக்கிக் கொண்டு தவிக்கிறது. இந்த மாதிரி தட்டுமுட்டு சாமான்கள் இல்லாதவர்கள் போல இருப்பவர்களும் கூடச் சிலவற்றை நண்பன் ஒருவனின் கொட்டிலில் பத்திரப்படுத்தி வைத்திருக்கிறார்கள் என்று விசாரித்துப் பார்த்தால் தெரியவரும். இன்று இங்கிலாந்தைப் பற்றி நான் என்ன நினைக்கிறேன் தெரியுமோ? ஒரு கிழட்டுக் கனவான் பல்லாண்டுகளாகச் சேர்ந்த தட்டுமுட்டு சாமான்கள் மூட்டையைச் சுமந்துகொண்டு நடை தள்ளாட நடமாடிக் கொண்டிருக்கிறான். எத்தனையோ காலமாகச் சேர்ந்துகொண்டிருக்கிற மூட்டை அது. அதை எரித்துவிடலாம் தான்—ஆனால் அதற்கு அந்த மனுஷ்யனுக்குப் பலம் மனோபலம், போதாது. பெரிய பெட்டி, சின்னப் பெட்டி, ஒரு மூட்டை என்று கணக்குப் பண்ணிக்கொண்டு சுமக்கிறான் எல்லாவற்றையுமே உதறி எறிந்துவிடலாமே? திடகாத்திர ஆரோக்கியமுள்ள மனிதனாலேயே தன் படுக்கையைத் தன் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு நடப்பது சிரமமான காரியம்—நோயாளி என்ன செய்வான்? உன் படுக்கையை தூர உதறிவிட்டு ஹாய்யாக நடந்துபோ என்றுதான் நான்

அவனுக்குப் புத்திமதி சொல்வேன். ஊர்விட்டு வருபவன் முதுகில் கூனல் முண்டைப்போல ஒரு பெரிய மூட்டையைப் பார்க்கும்போதெல்லாம் நான் வருத்தப்படுவேன். இவன் உடமைகள் என்று சொல்லக் கூடியவை இவ்வளவுதானு என்று நான் வருத்தப்பட மாட்டேன்—இவ்வளவையும் கட்டிச் சுமக்கிருனே என்றுதான் வருத்தப்படுவேன். என் மூட்டையை, என் சொத்துக்களை, நான் தான் தலையில் சுமந்தாக வேண்டும் என்று ஒரு நிர்ப்பந்தம் ஏற்பட்டால், அது சின்ன சொத்து மூட்டையாக இருக்கும்படி நான் பார்த்துக் கொள்வேன்—அந்த மூட்டை கனம் என் முக்கிய அவயவங்கள் என்பதையும் ஊனமாக்கி விடாமல் நான் பார்த்துக் கொள்வேன், யோசித்துப் பார்த்தால் எதையுமே சுமக்காமல் கைவீசிக் கொண்டு நடப்பதுதான் புத்திசாலித்தனமோ என்னமோ!

என் ஜன்னல்களுக்குத் திரைகள் தேவையில்லை, சூரியனையும் சந்திரனையும் தவிர என் வீட்டிற்குள் எட்டிப் பார்ப்பதற்கு யாருமில்லை. அவர்கள் பார்ப்பதில் எனக்கு இஷ்டம் தான். சந்திரன் உள்ளே வருவதனுல் பால் திரிந்து விடாது; என் இரைச்சி எதுவும் வீணுகிவிடாது. சூரியன் எட்டிப் பார்ப்பதனுல் என் பர்னிசர் வர்ணம் வெளுத்து விடாது; என் தரை விரிப்பும் வீணுகிவிடாது. சில சமயம் உள்ளே வருகிற சூரியன் தாள முடியாத வெப்பத்தைத் தந்தால் நான் இயற்கையாகவேயுள்ள ஒரு பச்சைப் படுதாவுக்குப் பின் மறைந்து கொள்ளலாம். இது நல்ல பொருளாதாரம்; சூரியனுக்குப் பயந்து நான் திரைச் சீலைகளுக்குக் காசு செலவழிக்க வேண்டும் என்கிற அவசியமே கிடையாது. ஒரு சீமாட்டி ஒருசமயம் எனக்கு ஒருகால் பாய் தர முன்வந்தான் அதை நான் வாங்கிக் கொள்ளவில்லை. அதை விரிக்க என் வீட்டிற்குள்ளே இடமில்லை; தவிரவும் அதைத் தினம் இரண்டுதரம் வீட்டிற்

குள்ளேயோ வெளியேயோ உதறிப் போட எனக்குப் பொழுதும் இல்லை, பாயில் காலைத் தேய்ப்பதைவிட, புல் தரையில் தேய்த்துவிட்டு வீட்டிற்குள் போவது சௌகரியமாக இருக்கிறது எனக்கு. தீமையின் துவக்கத்தைத் தவிர்ப்பதே நல்லது.

ஒரு உதவிப் பாதிரியின் சாமான்கள் ஏலம் போகும் போது நான் பார்த்தேன். பொருள் அதிகம் ஈட்டியவர் அவர். "மனிதர்கள் செய்கிற கெட்ட காரியங்கள் அவர்கள் இறந்த பின்னும் நிலைத்து நிற்கின்றன" என்ற மணி வாக்குப்படி இருந்தன, அவர் விட்டுப் போன சாமான்களும். அவர் சாமான்களில் பெரும்பகுதியும், அவர் அப்பா காலத்திலேயே சேரத் தொடங்கிய அனாவசியமான, உபயோகமே யற்ற தட்டு முட்டுச் சாமான்கள் தான். அவற்றிலே ஒரு உலர்ந்த நாடாப்புழுவும் கூட இருந்தது. நியாயப்படி இவற்றை யெல்லாம் வைத்துக் கொளுத்தி யிருக்கவேண்டும்; சொக்கப்பனை செய்திருந்தால் நல்லதாக இருக்கும். அதற்குப் பதில் அவற்றை யெல்லம் ஏலம் போட்டு உலகில் பரப்பி விட முயன்று கொண்டிருந்தார்கள். அண்டை அயலார் ஆசையுடன் பார்க்க வந்து அவை எல்லாவற்றையும், ஒன்று விடாமல், வாங்கிச் சுமந்து கொண்டு போனார்கள். சுமந்து போய் தங்கள் வீடுகளிலே புழுதியேறப் பத்திரப்படுத்திவைத்துக் கொண்டார்கள். அவர்கள் இறந்த பின் அவை மீண்டும் எழுந்து நடமாடும்—வேறு ஒரு இடத்துக்குப் போகும். இப்படியாக அழியாத சாமான்களாகி விட்டன அவை. மனிதன் சாகும் பொழுதும் புழுதியைக் கிளப்பி விடுகிறான்.

சில காட்டுமிராண்டி தேசங்களின் பழக்கங்களை நாமும் லாபத்துடன் பின்பற்றினாலும் நல்லதுதான் என்று எனக்குத் தோன்றுகிறது. வருஷத்துக்கொருதரம் அவர்

கள் தங்கள் பழம் பொருள்களை, பழைய தோலை, உரித்து விட்டுப் புதுவாழ்வு தொடங்குகிறார்கள் என்று தெரிகிறது. உண்மையில் அவர்கள் செய்வது என்னவானாலும், அவர்களுக்குச் சரியான வழி ஒன்று எப்படியோ புலனாகிவிட்டது என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. நாமும் முக்கலாஸ் இந்தியர்களைப்போல ஒரு வருஷாந்திரச் சொக்கப் பனை கொளுத்தி புதுமை பெற முயன்றால் என்ன தவறு? பார்ட்ராம் தருகிற இந்த வருஷாந்திர சொக்கப் பனை விழா பற்றிய விவரங்களைக் கேளுங்கள்: "முதலில் புதுத்துணிகள், புதுப் பானை சட்டிகள், அவசியமான சாமான்கள், பர்ணிசர் எல்லாம் வாங்கிக்கொண்டு விடுகிறார்கள். பழைய கிழிந்த துணிகளையும், தட்டுமுட்டு சாமான்களையும் ஒன்று சேர்க்கிறார்கள். வீடுகளை எல்லாம் கூட்டிச் சுத்தம் செய்கிறார்கள், வீடுகள் மட்டுமல்ல; தெருக்கள், சதுக்கங்கள், ஊர் பூராவையுமே சுத்தம் செய்கிறார்கள். இப்படிச் சுத்தம் செய்து சேர்த்த சாமான்களையெல்லாம், போன வருஷத்து தானியங்கள் உணவுப் பொருள்கள் எல்லாவற்றையும் கூடச்சேர்த்து, சொக்கப்பனையாகத் தீ மூட்டி விடுகிறார்கள். பிறகு மருந்து சாப்பிடுகிறார்கள். மூன்று நாள் பட்டினி கிடக்கிறார்கள். பட்டினி கிடக்கும்போது எவ்விதமான புலனின்பத்தையும் அவர்கள் நாடுவதில்லை. மூன்று நாட்களுக்குப் பிறகு ஊரில் மூட்டிய தீ அணைக்கப்படுகிறது, சிறைப்பட்டவர்களை விடுதலை செய்கிறார்கள்; தவறு செய்தவர்களை மன்னித்து மீண்டும் சமுகத்தில் ஏற்றுக்கொண்டு விடுகிறார்கள்.

"நாலாவது நாள் அன்று தலைமைப் புரோகிதன் புது நெருப்பு உண்டாக்குகிறான்—மரத்தைக் கடைந்து, ஒவ்வொரு வீட்டுக்கும் புது நெருப்புத் தரப்படுகிறது இந்த நெருப்பிலிருந்து."

பிறகு புதுதானியம், பழங்கள் இவற்றை உலர வைக்கிறார்கள். மூன்று நாட்கள் தொடர்ந்தாப்போல பாட்டும் கூத்துமாகக் காலந் தள்ளுகிறார்கள். பின்னர் நாலு நாட்கள், பக்கத்து டவுன்களில் உள்ளவர்கள் விருந்து சாப்பிட வருகிறார்கள். விருந்து சாப்பிடுகிறார்கள் நண்பர்களுடன். அண்டை அயலூர்க்காரர்களும் இப்படியே சுத்திகரிக்கப்பட்டவர்கள்தான்.

மெக்ஸிகன் தேசத்து மக்களும் கூட இப்படி ஐம்பத்திரண்டு வருஷங்களுக்கு ஒரு தரம் தங்களைச் சுத்தம் செய்துகொள்கிறார்கள். உலகமே முடிவுறப்போகிறது என்கிற நம்பிக்கையில் அவர்கள் இப்படிச் செய்வதாகச் சொல்லப்படுகிறது.

இதைவிட தர்ம பூர்வமான மதஸ்நானம், பலி என்று சொல்லும்படியானது எதையும்பற்றி நான் கேள்விப்பட்டதில்லை. "உள்ளூற அகத்தில் ஏற்படுகிற ஆத்மீக அருளின் வெளிப்படையான சின்னம்" என்று இதைச் சொல்லாமல் வேறு எதைச் சொல்ல முடியும். இந்தக் காட்டுமிராண்டிகள் தங்கள் பைபிள்களில் இதையெல்லாம் எழுதிவைத்துக் கொள்ளவில்லையே தவிர இப்படிச் செய்ய அவர்களைக் கடவுள்தான், பரமாத்மாவின் அருள்தான், தூண்டியிருக்க வேண்டும் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகம் இல்லை.

இப்படியாக ஐந்து வருஷங்களுக்கும் அதிகமாகவே நான் என் கையாலேயே உழைத்துச் சாப்பிட்டு வந்தேன். ஒரு வருஷத்தில் ஆறு வாரங்கள் உழைத்தால் போதும்—வருஷம் பூராவுக்கும் எனக்குத் தேவையானது கிடைத்துவிடுகிறது; போதுமானது சம்பாதித்துவிடமுடிகிறது. என் மாரிக்காலங்கள் பூராவும், தவிர கோடை நாட்களில் பெரும்பகுதியும்; படிப்பதற்கு எனக்குத் தெளிவாகவும் தொல்லைகளில்லாமலும் கிடைத்துவிடுகிறது. நான் சில

காலம் பள்ளிக்கூட உபாத்தியாயராக இருந்தும் பார்த்திருக்கிறேன்; வரவுக்கும் செலவுக்கும் சரியாக இருந்தது —சில சமயம் வரவு குறைவாகவே இருந்தது என்றுதான் சொல்லவேண்டும். அந்த உத்தியோகத்துக்குத் தக்க மாதிரி உடை உடுப்பது பழகுவது என்றெவ்லாம் செய்ய வேண்டியதாக இருந்தது. அந்த உத்தியோகம் என் மனப்போக்கைக் கூடப் பாதிக்கத் தொடங்கிவிட்டது. மொத்தத்தில் காலமும் அளவுமீறி விரயமாகிக்கொண்டிருந்தது என்றுதான் சொல்லவேண்டும், நான் என் சகோதர மனிதனுக்குப் பாடம் சொல்லித்தரவேண்டும் என்பதற்காகச் சொல்லித் தரவில்லை; எனக்குக் கிடைத்த சம்பளத்துக்காகத்தான் சொல்லித்தந்தேன் என்பதனுல் என் முயற்சி தோல்வியுற்றது என்றே சொல்ல வேண்டும், வியாபாரம் செய்யவும் நான் முயற்சி செய்து பார்த்தேன். அதைச் சரிவரத் தொடங்கவே எனக்குப் பத்து வருஷம் பிடிக்கும்போல இருந்தது. அதற்குள் சாத்தானை அடையும் பாதையிலே நான் வெகுவாக முன்னேறியிருப்பேன் என்றும் பயம்வந்து விட்டது. வெற்றி கண்டுவிடக் கூடாதே இதிலே என்று பயமாக இருந்தது எனக்கு. பிழைப்பதற்கு வழி என்ன என்று ஆரம்பத்தில் சிந்தித்துப்பார்த்த நாட்களில் நான் அதிகமாக நண்பர்களின் பேச்சைக் கேட்கிற நிலையில் இருந்தேன். இப்படிப் பேச்சுக் கேட்டு அடைந்த சில துக்ககரமான அனுபவங்களும் என் மனசில் அழுத்தமாகப் பதிந்திருந்தன; நவீனமான யுக்திகள் எதுவும் தோன்றுத ஒரு சமயம் ஹக்கிள் பெர்ரிப் பழங்கள் பறிக்கும் வேலையில் ஈடுபடலாம் என்று நான் எண்ணினேன். அதை நிச்சயமாக என்னுல் செய்யமுடியும்; அதில் கிடைக்கக்கூடிய சொல்ப லாபமும் எனக்குப் போதுமானதாக இருக்கும். உண்மையில் வேறு எந்த சாமர்த்தியம் எனக்குண்டோ

இல்லையோ, எனக்குத் தேவைகள் சொல்பம். போது மென்ற மனமும் தாராளமாக உண்டு. அந்த வேலைக்கு முதல் தேவையில்லை; இயற்கையாகவே பழங்கள் பறிப்பதில் எனக்கொரு ஈடுபாடும் உண்டு என்று அசட்டுத்தனமாக அப்போது எண்ணினேன் நான். வியாபாரத் துறை, தொழில் துறை என்று என் நண்பர்கள் போட்டி போட்டுக் கொண்டு போய்க்கொண்டிருந்த நாட்களில், இந்தப் பழம் பறிக்கும் உத்தியோகம்தான் அவர்கள் உத்தியோகத்தைப் போன்றது என்று நான் எண்ணினேன். பழம் பறிப்பதுடன் காட்டுப் பச்சிலைகள் மூலிகைகள் முதலியவற்றையும் கொணர்ந்து தரலாம்; வாடாத பசுந்தளிர்களைக் கொணர்ந்து கிராமத்து மக்களுக்கு அன்பாகக் கொடுக்கலாம். வண்டிகளிலே போட்டுக் கொண்டுபோய் நகரத்தில்கூட என் தழைகளையும், மூலிகைகளையும், விற்கலாம் என்று எண்ணினேன். ஆனால் இப்போது தெரிகிறது. (வியாபாரம் என்பது ஒரு சாபக்கேடு; அது தொடுவதை யெல்லாம் அசுத்தமாக்கி விடுகிறது. கடவுளின் வார்த்தைகளையேதான் ஆகட்டும்! நீ வியாபாரப் பொருளாகக் கொண்டால், அதுவும் கூட அசுத்தமாகத்தான் போய்விடும் என்பதில் எனக்கு இப்போது சந்தேகமே யில்லை.)

சில விஷயங்கள் என் மனதுக் குகந்தவையாக இருந்தன. பல விஷயங்களில் என் மனம் செல்லவேயில்லை. முக்கியமாக என் சுதந்திரத்தைப் பறிகொடுத்து விடக் கூடாது என்கிற யோசனை என் மனசில் தலைதூக்கி நின்றது. கடினவேலை செய்வதிலும், அலுக்காமல் உழைப்பதிலும் நான் சலிக்கமாட்டேன். பல விஷயங்களில் என்னால் வெற்றி பெறவும் முடியும். விலை அதிகமான விரிப்புகளைச் சம்பாதிப்பதிலோ, நேர்த்தியான மர சாமான்கள் வாங்குவதிலோ, நேர்த்தியான சமைய

லிலோ, கோதிக் அல்லது கிரேக்க பாணியில் கட்டிய வீடு தேடிக் கொள்வதிலோ என் மனம் செல்ல மறுத்தது. இந்தப் பொருள்களைச் சேகரிப்பதில் மனமுள்ளவர்களும், ஈடுபாடுள்ளவர்களும், அவசியமான பல காரியங்களில் இவை குறுக்கிடாது என்று எண்ணுபவர்கள் அவற்றைத் தேடி அலைவதில் எனக்கொன்றும் ஆக்ஷேபமே யில்லை. சிலர் சுபாவத்திலேயே உழைப்பாளிகளாக இருக்கிறார்கள், சுறுசுறுப்பாக இருக்கிறார்கள். வேலை செய்வதை அவர்கள் விரும்புகிறார்கள். உழைக்கிற காரியமே அவர்களுக்குப் பிடித்திருக்கிறதோ ? அல்லது உழைக்கிற நேரத்தில் வேறு ஏதாவது விஷமமான விஷயத்திலிருந்து தப்பிவிட முடிகிறது என்று நினைத்து அவர்கள் உழைக்கிறார்களா ? இவர்களைப் பற்றி நான் இப்போது எதுவும் சொல்லவில்லை. ஓய்வு அதிகமுள்ளவர்களுக்கு மட்டும் நான் சொல்லுகிறேன் ; இப்பொழுது உழைப்பதைப் போல இரண்டு பங்கு உழையுங்கள் ; ஓய்வு நேரத்தை என்ன செய்வது என்று அறியாமல் அவதிப் படாதீர்கள்—உழைத்து உங்கள் விலையை நீங்களே சம்பாதித்துக் கொள்ளுங்கள் ; உழைத்துத் தானே சம்பாதித்த காசைக் கொடுத்து உங்கள் சுதந்திரத்தை வாங்கிக்கொள்ளுங்கள். தினக் கூலிக்கு வேலை செய்வதுதான் மிகவும் சுதந்திரம் தருகிற வேலை என்று என்னைப்பற்றிய வரையில் நான் கண்டுகொண்டேன். அதுவும் வருஷத்தில் முப்பது நாற்பது நாட்கள் வேலை செய்தால் வருஷத்துக்குத் தேவையானதைச் சம்பாதித்து விடலாம். கூலி வேலை செய்பவனின் வேலை சூரியன் அஸ்தமிப்பதுடன் முடிந்து விடுகிறது. அதற்குப் பிறகு உள்ள நேரத்தை அவன் தனக் கிஷ்டமான விஷயங்களில் செலவிடலாம். அந்தக் காரியங்கள் அவன் பகலில் செய்கிற வேலைக்குச் சம்பந்தப்பட்டதாக இருக்கவேண்டிய அவசியம் இல்லை.

இந்த ஓய்வு அவனை வேலைக்கு வைத்துக் கொள்கிறவனுக்கும் கிடைக்காது; வருஷம் பூராவும் ஆரம்பத்திலிருந்து முடிவுவரை அவனுக்கு ஒரே வேகம்தான் இருக்க முடியும்.

சுருங்கச் சொன்னால், இந்தப் பூமியில் வாழ்வது, சம்பாதித்து வாழ்க்கை நடத்துவது என்பது, கடினமான காரியம் அல்ல. உண்மையில் அது வெறும் பொழுது போக்கான காரியமே என்பதை நான் நம்பிக்கையாலும் அனுபவத்தாலும் அறிந்திருக்கிறேன். எளிய வாழ்வுடன், புத்திசாலித்தனம் அறிவு இவற்றையும் கலந்துகொண்டு வாழ்க்கை நடத்துவது சுலபமான காரியமே. எளிய மக்களின் வாழ்க்கை லக்ஷியங்கள் நாகரிகமுதிர்ந்த ஜனங்களின் விளையாட்டுகளாகி விடுகின்றன என்பது நாம் கண்கூடாகக் காண்கிற விஷயம்தான். நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்துத்தான் சம்பாதிக்க முடியும் என்பதில்லை; சுலபமாகவே சம்பாதிக்கலாம் தேவைகளை. எதுவும் செய்யு முன்னேயே வியர்வைவிடத் தொடங்கி விடுகிறவர்கள் இருக்கலாம்தான்; ஆனால் எனக்கு அவ்வளவு சுலபத்தில் வியர்வை ஓட ஆரம்பித்துவிடாது.

எனக்குத் தெரிந்த ஒரு வாலிபன்—பிதுரார்ஜிதமாகச் சில காணிநிலத்துக்குச்சொந்தக்காரனுனன். என்னைப்போல வாழத் தனக்கு வசதியில்லாது போய்விட்டதே என்று சொல்லி அவன் வருந்தினான். என்னைப்போல வேறு யாரும் வாழ விரும்பவேண்டும் என்று நான் சொல்லவில்லை. இந்த வழி எனக்கு மட்டும் சாசுவதமா என்ன? வேறு ஒருவர் என் வாழ்க்கை வழியைக் கற்றுக் கொள்ளு முன் நான் வாழ வேறுவழி கண்டு பிடித்திருக்கக் கூடும். மக்கள் எல்லோரும் ஒருவர்போல் ஒருவர் இருக்கக் கூடாது. எல்லோரும் ஒவ்வொரு விதமானவர்களாக, வித்தியாசப் பட்டவர்களாக இருக்க வேண்டும் என்பது

தான் என் ஆசை. அவனவன் ஜாக்கிறதையாகச் சிந்தித்து அவனவன் வழியைப் பின்பற்றி வாழவேண்டும் என்பது தான் என் கோரிக்கை. அவன் அப்பாவினுடையதோ, அம்மாவினுடையதோ, அண்டை அசலானுடையதோ— எதுவானாலும் அவன் வழியல்ல அது என்பது மட்டும் நிச்சயம். தானாகவே அவன் வகுத்துக் கொள்வதுதான் அவன் வழி ஆக முடியும். கட்டிடம் கட்டலாம்; பயிற் செய்யலாம்; திரைகடலோடலாம் அந்த வாலிபன்; அவன் செய்ய விரும்புவதைச் செய்வது தடை செய்யப்படக் கூடாது. சுதந்திரமாக ஒருவன் தனி வாழ்க்கை வழியைப் பின் பற்றுவதில் யாரும் குறுக்கிடக் கூடாது. கணக்குப் பாடத்தில் வருகிற ஒரு புள்ளி அளவில்தான் நாம் மேதையுள்ளவர்களாக இருக்க முடியும்; அந்தப் புள்ளி பிசகிவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது அவசியம். மாலுமியும், தப்பி ஓடுகிற அடிமையும் துருவ நக்ஷத்திரத்தை விட்டுக் கண்ணை எடுக்காமல் மேலே சொல்வது போல தன் அறிவுப் புள்ளியை விட்டு ஒருவனும் கண்ணை எடுக்கவே கூடாது. ஆனால் நமது வாழ்க்கையைச் சரியானபடி நடத்த அது போதுமானதுதான். கணக்கிடக் கூடிய குறுகிய காலத்தில் நாம் எதிர்பார்க்கிற துறைமுகத்தில் போய்ச் சேரக்கூட முடியாமல் போய்விட்டாலும் பாதகமில்லை. நேரான வழியில் போய்க் கொண்டிருந்தால் சரிதானே ?

இந்த விஷயத்தில் ஒருவனுக்கு உண்மையென்றால் அது நிச்சயமாக, சந்தேகத்துக்கு இடமில்லாமல் ஆயிரம் பேருக்கும் உண்மைதான், சின்ன வீட்டைவிடப் பெரிய வீடு கட்ட அதே அளவில் செலவாகும் என்று கணக்கிடுவது சரியல்ல. ஒரே கூரைக்கடியில் பல அறைகள் இருக்கலாம் பெரிய வீட்டில்; கீழ்த்தள அறைகளும் பல இருக்கும்; ஒரே சுவர் ஒரு பெரிய கூடத்தைப் பல அறை

களாகத் தடுக்கலாம். ஆனால் எனக்கென்று ஏற்பட்ட தனி யான சிறு வீடுதான் எனக்கு மிகவும் பிடித்ததாக இருந் தது. முழுவதையும் நானே கட்டிவிடுவது என்பது பிற ரையும் சேர்த்து ஒத்துழைக்கச் செய்து வீடு கட்டுவதை விட மலிவாக முடியும் என்று தான் நான் நினைக்கிறேன். பொதுச் சுவர் சில சமயம் மலிவாக இருப்பதற்காக மிக வும் மெல்லியதாக இருக்கவேண்டி வந்துவிடும். கூட வசிப்பவன் நல்லவனாக இருக்கமாட்டான். தனிக் குடிசையிலே இந்தத் தொந்திரவுகளெல்லாம் கிடையவே கிடையாது. கூட இருப்பவன் தன் பகுதியை சரியாகச் செப்பனிட்டு வைத்துக்கொள்ள மறுத்தால் வீடு பூரா வுமே வீணாகி விட்டாலும் வீணாகிவிடும். ஒத்துழைப்பு என்று சாத்தியமாவது ஒரு தலைப் பக்ஷமானதாகவும் மேலெழுந்தவாரியான விஷயங்களைப் பற்றியும்தான் சாதாரணமாக இருக்க முடியும். உண்மையாக உள்ள ஒத்துழைப்பு என்பது காதில் விழாத ஒரு கீதம் போன் றது; அதாவது இல்லை என்றே வைத்துக் கொள்ள லாம். நம்பிக்கையுள்ள மனிதனானால், எங்கும் நம்பிக்கைக் குறைவில்லாமல் வாழ்க்கை நடத்த முடியும்; யாருட னும் ஒத்துழைக்க முடியும். நம்பிக்கையுள்ளவன் எந்தக் கோஷ்டியில் சேர்ந்து கொண்டானால் தான் என்ன? அவன் சாதாரணமாக மற்றவர்களைப் போலவேதான் வாழமுடியும். உயர்ந்த அர்த்தத்திலும் தாழ்ந்த ஒரு அர்த் தத்திலும் ஒருவருடன் ஒருவர் ஒத்துழைப்பது என்றால் இருவருமே வாழ்க்கைச் சாதனங்களைச் சம்பாதிப்பதில் ஒருமுகமாக ஈடுபட்டவர்களாக இருக்க வேண்டும். கொஞ்ச நாளைக்குமுன் உலகம் சுற்றிவர இரண்டு நண்பர் கள் கிளம்பினார்கள். ஒருவன் நிறையப் பணம் கொண்டு வந்தான். மற்றவன் போகிற வழியிலெல்லாம், கப்பலிலும் துறைமுகத்திலும் உழைத்துத் தன் தேவைக்கானதைச்

சம்பாதிக்க வேண்டும். இப்படிப்பட்ட இருவர் நீண்ட காலத்திற்கு நண்பர்களாக இருக்க முடியாது; ஒத்துழைக்கவும் முடியாது. ஏனென்றால், அவர்களில் ஒருவன் உழைக்கவே மாட்டான். அவர்கள் பிரயாணத்தில் முதல் சுவாரசியமான கட்டத்திலேயே அவர்கள் பிரிந்து விடுவார்கள். ஒருவன் போகிற வழி மற்றவன் வழியாக இருக்காது. இதெல்லாவற்றிற்கும் மேலாகச் சொல்ல வேண்டியது என்னவென்றால், தனியாகக் கிளம்புகிறவன் என்று வேண்டுமானாலும் கிளம்பலாம்; இன்றே கிளம்பத் தயாராக இருக்கலாம். வேறு ஒருவனுடன் கிளம்புகிறவன், அவன் சௌகரியத்தையும் கவனித்தாக வேண்டும்; மற்றவன் தயாராகும் வரையில் முதல் ஆசாமியும் காத்துக் கிடக்க வேண்டியது தான்; அவர்கள் கிளம்புவதற்கே வெகுநாள் ஆனாலும் ஆகிவிடும்.

இதெல்லாம் மிகவும் சுயநலமான சிந்தனைகள் என்று என் ஊர்க்காரர்களில் சிலர் சொல்வதைக் கேட்டிருக்கிறேன். உண்மைதான்; நான் இது வரையில் தர்ம காரியங்களில் ஈடுபட்டதில்லை என்பதை ஒப்புக் கொள்கிறேன். கடமை என்கிற உணர்ச்சியினால் தூண்டப்பட்டு நான் சில சமயம் சில தியாகங்கள் செய்திருக்கிறேன். மற்றவையுடன் இந்த இன்பத்தையும் கூடச் சில சமயம் தியாகம் செய்திருக்கிறேன். தங்களாலான வகைகளிலெல்லாம் என்னுடன் விவாதித்து என் மனத்தை மாற்றி நகரில் ஒரு ஏழைக் குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்பை என்னை ஏற்றுக் கொள்ளச் செய்யச் சிலர் முயன்றதுண்டு. எனக்கு வேறு ஒன்றும் வேலையில்லா விட்டால் இந்தக் காரியத்தை ஏற்றுக் கொள்ள நான் முன் வரலாம், ஏனென்றால் சும்மா இருப்பவனைச் சைத்தான் உபயோகித்துக் கொள்வான் என்பதை நான் திடமாக நம்புகிறேன். சில சமயங்களில் சிலருக்கு உதவி

செய்ய விரும்பி நான் அவர்களை அணுகிக் கேட்டதும் உண்டு. என்னைப் போன்ற வாழ்க்கை வாழ அவர்கள் தயாரா, எனக்குள்ளது போன்ற சௌகரியங்கள் செய்து தர நான் முயலலாமா என்று கேட்டபோது, அவர்கள் நாங்கள் இப்போதிருப்பது போல ஏழைகளாகவே இருந்து விடுகிறோம் என்று எனக்குத் தயக்கமின்றி பதில் அளித்து விட்டார்கள். அதில் அவர்கள் தயக்கம் எதுவும் காட்டியதாக எனக்குத் தெரியவில்லை. என் நகரத்து ஆண்களும் பெண்களும் தங்கள் காலத்தை இப்படிப் பிறர் வாழ்வதற் கென்றே செலவிடுவதை நான் பார்த்திருக் கிறேன்; இப்படிச் செய்கிறவர்கள் இவ்வளவு பேர் வழி கள் இருக்கும் போது, நான் ஒருவன் என் காரியங்களைப் பார்த்துக் கொண்டு இரக்கமற்ற வாழ்வு வாழ்வதில் ஒன்றும் தப்பில்லை என்றுதான் எனக்குத் தோன்று கிறது. நான் ஒருவன் தரும சிந்தனை யற்றவனாக இருப்ப தால் உலகம் கெட்டுவிடாது. மற்றதெல்லா வற்றிற்கும் போல தருமம் செய்வதற்கும் ஒரு மேதா விலாசம் தேவையாகத்தான் இருக்கிறது. பிறருக்கு நல்லது செய் வது என்பதையே தொழிலாகக் கொண்டவர்கள் இன்று நம்மிடையே பலர் இருக்கிறார்கள்; அவசியத்துக்கும் அதிகமாகவே இருக்கிறார்கள் என்று தான் எனக்குத் தோன்றுகிறது, தவிரவும் தருமம் செய்கிற காரியத்தைச் செய்து பார்க்க முயன்று, அது என் சுபாவத்துக்கு ஒத்து வராது என்று விட்டு விட்டேன் நான். அது பற்றி எனக் குத் திருப்திதான். சுயப்பிரக்ஞையுடன் வேண்டுமென்றே நான் செய்ய முனைந்துள்ள காரியங்களைக் கைநழுவ விட்டுத் தருமம் செய்கிற காரியத்தில் இறங்கி விட மாட்டேன் நான். சமுகம் அதை என்னிடம் எதிர்பார்க் கிறது என்பதற்காக நான் அதை நிச்சயமாகச் செய்ய மாட்டேன். அப்படி நான் செய்தால் தான் பிரபஞ்சமே

அழியாமல் இருக்கும் என்கிற நிலைமை ஏற்பட்டாலும் கூட நான் செய்யமாட்டேன். இப்போது பிரபஞ்சத்தை சர்வநாசத்திலிருந்து காப்பாற்றுவது, இது போன்ற காரியங்களில் அல்லாமல் வேறு பல தரப்பட்ட காரியங்களில் சில மனிதர்களாவது கவனம் செலுத்தி வருவதனால் தான் என்று நான் நம்புகிறேன். ஆனால் வேறு ஒருவன் செய்கிற எந்தக் காரியத்துக்கும் நான் குறுக்கே நிற்க மாட்டேன்; அவன் மேதை அப்படியானால் அதைச் செய்யட்டுமே; நான் தடுக்க வில்லை. எனக்குப் பிடித்தமானதாக இல்லாத இந்த வேலையைச் செய்பவன், முழு மனதுடனும் ஆத்மாவுடனும், இதயத்துடன் செய்தானானால் அவனுக்கு ஊக்க மூட்டுவேன் நான். அது தவறு என்று உலகம் முழுவதும் சொன்னாலும் கூட, தளராத உறுதியுடன் நீ நம்புகிற காரியத்தைச் செய் என்றே நான் சொல்வேன். உலகம் எதைத்தான் பழிக்காமல் இருக்கிறது?

என்னுடைய விஷயம் தனிப்பட்ட விசித்திரமான ஒரு விஷயம் என்று நம்ப நான் தயாராக இல்லை. என்னைப் போலவே என் வாசகர்களில் பலரும் என் காரியங்களுக்கு ஆதாரம் தேடிச் சொல்வார்கள் என்றே நான் நம்புகிறேன். நான் செய்கிற காரியம் நல்லது என்று என் அண்டை அயல் ஒத்துக் கொள்வது அவசியமல்ல; ஆனால் அதைச் செய்வதை என்னால் திறமையுடன் செய்ய முடியும். என்னை வேலைக்கு அமர்த்துகிறவன் இதைக் கண்டு கொள்ளலாம். என்ன வேலை செய்கிறேன் என்பது என்னை அமர்த்திக் கொள்பவனைப் பொறுத்தது. சாதாரணமான அர்த்தத்தில் நல்லது எதுவாவது நான் செய்தால் அது வேண்டுமென்று செய்த தல்ல; இடையில், முக்யமான வேலைக்கு நடுவில் தானாக செய்யப்பட்டது தான்; நல்லது செய்ய வேண்டும் என்று எண்ணிச் செய்ததல்ல அது. சாதாரணமாக மனிதர்கள் சொல்வது என்ன என்றால்,

நீ எப்படி இருந்தாலும் சரி, எங்கு இருந்தாலும் சரி, உன் நல் மதிப்பை உயர்த்திக் கொள்ள முயலாமல், பிறருக்கு நல்லது செய்வது என்கிற காரியத்தைத் தொடங்கி விடு; முன் கூட்டியே இரக்கத்தை வருவித்துக் கொண்டு, நல்லது செய் என்கிறார்கள். நான் சொல்வதென்றால் என்ன சொல்வேன் தெரியுமா? நீயே நல்லவனாக இருக்கப் பாடுபடு, அது தான் முக்கியம் என்பேன். சூரியன் இந்த அளவுக்கு மேல் வெளிச்சமோ உஷ்ணமோ தருவதில்லை என்று தீர்மானித்துக் கொண்டு தொடங்கினால் உலகம் என்ன ஆகும்? இதற்கு மேல் பிறருக்குத் தேவையில்லை என்று தீர்மானிக்க நான் யார்? சூரியனின் கடமையை பீடன் நிறைவேற்றக் கிளம்பியபோது வானத்து முன் வரிசையிலே பல வீடுகள் எரிந்து போனதாகக் கதை கூறுகிறது இல்லையா? உலகத்திலே சஹாரா பாலைவனம் தோன்றியதும் அப்பொழுது தானே!

நல்லது என்பது திரியும்போது எழுகிற நாற்றத்துக்கு ஈடான நாற்றம் உலகிலே வேறு கிடையாது என்றுதான் சொல்லவேண்டும். மனுஷ்ய நாற்றம் மட்டும் அல்ல அது; நாற்றத்திலே அமானுஷ்யமானது அது. ராக்ஷஸனின் உடல் அழுகுவதுபோன்ற துர்நாற்றம் அது. எனக்கு நல்லது செய்கிற உத்தேசத்துடன் என் வீடு நோக்கி ஒருவன் திடசங்கல்பத்துடன் வந்துகொண்டிருக்கிறான் என்று கேள்விப்பட்டால், நான் என் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளுகிற உத்தேசத்துடன் ஓடிப்போய் விடுவேன். தாகமும் வரட்சியும் ஏற்படுத்தி மனிதனை அழித்துவிட வந்துகொண்டிருக்கும் ஸிமூம் காற்றைத் தப்ப ஆப்பிரிக்கா தேசத்து மனிதன் ஓடுவதுபோல நான் ஓடிவிடுவேன். காது கண் மூக்கு எல்லாம் மண்ணால் நிரம்பிவிடும் என்று பயப்படுவதுபோல அவன் செய்கிற நல்லது என்னைத் திக்குமுக்காட அடித்துவிடப்

போகிறதே என்று நான் நடுங்குவதில் தப்பு ஒன்றுமில்லை. என் ரத்தத்தையே திரித்துவிடலாமே அவன் நல்லது என்று எனக்குச் செய்வது! வேண்டாம். என்னைச் சுபாவமாக வந்தடையக் கூடிய கெடுதிகள் மட்டும் போதும்; இந்தக் கெடுதியும் வரவேண்டாம்! இயற்கையான வழிகளிலே வருகிற எதற்கும் நான் அஞ்சமாட்டேன். (நான் பட்டினி கிடக்கும்போது சோறு போடுபவனும், குளிரால் நான் விரைத்திருக்கும்போது உஷ்ணப் படுத்தி உதவுகிறவனும். சாக்கடையில் நான் விழுந்தேனுல் என்னை எடுத்து வெளியே விட்டவனும் அந்தக் காரியங்களால் நல்லவர்களாகி விடுகிருர்கள் என்பது தவருன ஒரு வாதம். நியூ பவுண்டுலாண்டு நாய்கூட இவ்வளவும் செய்யும்.)(தருமம் செய்வது என்பது சகோதர மனிதர்களை அன்பு செய்வது என்று ஆழத்தில் அர்த்தமாகாது. மேலெழுந்தவாரியாக வேண்டுமானுல் அப்படிச் சொல்லிக் கொள்ளலாம்.) தகுதியான இடம் பார்த்து தருமம் செய்வது என்பது தருமம் செய்வதில் முதல் தத்துவமாக இருக்கவேண்டும். தருமவான்களின் கூட்டத்திலே இதுபற்றி யாரும் இதுவரை பேசியிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. எனக்கும் என் போன்றவர்களுக்கும் நல்லது செய்வது என்று எந்தத் தருமவான்கள் கூட்டத்திலும் யாரும் பேச்செடுத்ததாக எனக்குத் தெரியவில்லை.

ஜெஸுயிட்கள் இந்தியர்களைச் சிறையில் வைத்து எரித்தபோது, அவர்கள் புதுப்புது தண்டனைகளைப்பற்றி ஜெஸுயிட்களுக்குச் சொல்லித் தந்தார்களாம். தங்கள் முயற்சியின் தோல்வியை ஜெஸுயிட்கள் உணர்ந்தார்கள். உடல் உபாதையைச் சஹிக்கத் தெம்பு படைத்த மனிதர்களாகிய அவர்களுக்கு, இந்த கிறிஸ்தவப் பாதிரிமார்கள் தருகிற ஆத்மீக ஆறுதல்களும் அவ்வளவாகத் தேவையில்

லாதது போலத்தான் இருந்தது. தன்னைப்பற்றிய வரையில் பிறர் எப்படிச்செய்கிறார்கள் என்று கவலைப்படாதவர்கள் பிறர் விஷயத்தில் தாங்கள் செய்வதுபற்றி மட்டும் எதற்காகக் கவலைப்படப் போகிறார்கள்? "செய்யப்பட விரும்புகிறபடி நீயும் செய்" என்கிற உபதேசம் இவர்கள் விஷயத்தில் எப்படிப் பலிக்கும்? விரோதிகளையும் அவர்கள் எல்லைக்குத் தக்கபடி அவர்கள் நேசிக்கவே செய்தார்கள். அவர்கள் செய்ததை அனுபவித்தவர்களும் மன்னிக்கிற அளவுக்குத் தயாராகவே தான் இருந்தார்கள்.

ஏழைகளுக்கு அவர்களுக்கு அதிகத் தேவையான உதவிகளை நீ செய்து தருவதில் ஆக்ஷேபம் ஒன்றுமில்லை. ஆனால் உங்கள் காரியத்தால்தான் அவர்கள் தொடர்ந்து ஏழைகளாகவும் முன்னேற மாட்டாதவர்களாகவும் இருக்கிறார்கள் என்பது உண்மையே! ஏழைக்கு உதவி செய்வதென்றால், பணமாகக் கொடுக்காதீர்கள்; பண்டத்தை வாங்கிக் கொடுங்கள். சிலசமயம் நாம் சில அதிசயமான தவறுகள் செய்து விடுகிறோம். ஏழை எளியவன் அழுக்கடைந்தவனாகவோ மனப் பண்பு இல்லாதவனாகவோ தான் இருக்கிறான்; பசி குளிரும் இருக்கலாம் ஓரளவு. அவன் துரதிரஷ்டம் அது என்பது மட்டும் அல்ல— அவன் வாழ்க்கை ரஸனையும் அவ்வளவுதான், அவனுக்கு நீ பணம் தந்தால் அதைக் கொண்டு அவன் இன்னும் கொஞ்சம் கந்தல்கள் வாங்குவான்! பாதையில் வேலை செய்கிற ஜரிஷ்காரர்கள் ஐயோ பாவம் இப்படி இந்தக் குளிரில் பனிக்கட்டிகளை ஒதுக்கி அப்புறப்படுத்தும் வேலையில் ஈடுபட்டிருக்கிறார்களே என்று நான் பரிதாபப்பட்ட காலம் உண்டு. அவர்கள் உடுத்தியுள்ள கந்தைகளைக் கண்டாலே எனக்குக் கஷ்டமாக இருக்கும். அதே சமயம் சரியான நாகரிகமான ஆடைகளை உடுத்திக் கொண்டு நானும் குளிரால் நடுங்கிக் கொண்டுதான் இருப்பேன். இப்

படியிருக்கையில் தவறிப்போய் பனிக்கட்டியில் விழுந்து விட்ட ஒருவன் சொட்டச் சொட்ட ஒருநாள் என் குடிசைக்குள் வந்தான். ஒன்றன்பின் ஒன்றாக அவன் மூன்று கால் சட்டைகளை அகற்றினான். இரண்டிரண்டு ஸ்டாகிங்குகளை அகற்றினான். எல்லாம் கந்தல்கள்தான்—எனினும் குளிரைத் தாங்குவதற்கு அவை போதுமானவையே. வெளி ஆடைகள் பகட்டானவை அவனுக்குத் தேவையில்லை; போதுமான உள் ஆடைகள் அணிந்திருந்தான் அவன். இந்த ஜலஸ்நானம்தான் அவனுக்கு மிகவும் அவசியமான காரியம் இப்போது என்று எண்ணினேன் நான். அவனைப் பார்த்துக் கொண்டேயிருக்கையில் எனக்கு என்னிடமே பரிதாபம் ஏற்பட்டது. பழந் துணிக்கடை ஒன்றை அவனுக்குத் தருமமாக அளிப்பதைவிட, எனக்கே ஒரு கம்பளி உள் சட்டை தைத்துக் கொள்வது நியாயமான விஷயம் என்று எனக்குத் தோன்றியது. தீமை என்கிற மரத்தின் வேர் களைந்தெறிய முற்படுகிற ஒவ்வொருவனுக்கும் பதில் சொல்லுகிற மாதிரி! அதன் கிளைகளை வெட்டி எறிகிற காரியத்திலே ஈடுபட்டவர்கள் ஆயிரம் பேர் இருக்கிறார்கள். கிளைகளைக் கழித்து என்ன லாபம்? தீமை இன்னும் அதிகமாகத் தழைக்கிறது. ஏழைகளுக்கென்று தன் காலத்தையும் பணத்தையும் விரயம் செய்து கொண்டிருப்பவர்களில் பெரும்பாலோர் அதே சமயம் ஏழ்மையை உலகிலே அதிகரிக்கச் செய்கிற பாதைகளிலேதான் நடந்து கொண்டிருக்கிறார்கள். எவ்வளவு பேருக்கு உதவி செய்கிறானோ அவன் அதைப்போல இரண்டு மடங்கு பேர்வழிகளுக்கு கெடுதி செய்து விடுகிறான். அடிமை வியாபாரி மிகவும் பயபக்தியுடன் ஒவ்வொரு பத்தாவது அடிமையை விற்றுவரும் பணத்தையும் ஞாயிற்றுகிழமைகளில் மட்டும் அடிமைகளுக்கு சுதந்திரம் கிடைப்பதற்குச் செலவிடலாம். அதனால் ஏற்

படுகிற லாபம் என்ன? ஏழைகளுக்குத் தன் சமையலறையில் வேலை தருகிற பணக்காரன் என்னத்தைச் சாதித்து விடுகிறான்? பிறனுக்கு உணவு சமைத்துப் போடுவதிலே யார் சந்தோஷப்பட்டுக் கொள்ளமுடியும், தன் வயிறு பசிக்கும்போது? தானே சமையலறையில் வேலை செய்வதுதான் பணக்காரன் தன் பரிதாபத்தை ஏழைக்குக் காட்டக் கூடிய சிறந்த தருமம், நல்லெண்ணம். உன் வருவாயில் பத்தில் ஒரு பங்கைத் தருமத்திற்காகச் செலவிடுவதாகச் சொல்லுகிறாய் நீ. பத்தில் ஒன்பது பங்கை அப்படித் தருமம் செய்வதுதான் நியாயமோ என்னவோ, யார் சொல்ல முடியும்? சமூகத்திற்கு உங்களால் கிடைப்பது பத்தில் ஒன்றுதானே—அது நியாயமா? இது எதனால்? நீதிபதிகள் சரியானபடி நீதி வழங்காத காரணத்தினாலா அல்லது சம்பாதிப்பவன் அதற்குமேல் அதிகமான தரும சிந்தனை படைக்காதவனாக இருப்பதனால் விளைகிறதா?

தருமம் செய்வது என்கிற ஒரு நற்குணத்தை மட்டும் தான் மனிதகுலம் போதிய அளவுக்குப் பாராட்டுகிறது; இல்லை, ரொம்ப, அளவுக்கு மிஞ்சியே மதிப்பிடுகிறது. இப்படிப் பாராட்டுவதற்கு ஒரே காரணம் என்று நமக்குள்ள சாதாரண சுய நலத்தைத்தான் சொல்லவேண்டும். கான் கார்டில் ஒருநாள் அதிகாலையில் ஒரு திடசாலியான ஏழை நகரவாசி ஒருவனைப் புகழ்ந்து கொண்டிருந்தான்—ஏழைகளுக்கு உதவி செய்கிறவன் என்று. அதாவது அவன் தனக்கு உதவி செய்தான் என்றுதான் சொல்லுகிறான் அவன். உலகத்தின் இரக்கமுள்ள அம்மான்களும் அம்மாமிகளும் உள்ள புகழை யெல்லாம் பகிர்ந்து கொண்டு விடுகிறார்கள்; உண்மையாக உள்ள, ஆத்மீக வளர்ச்சிக்கு ஆதாரமான பெற்றோர்களை அவ்வளவு மதிப்பதில்லை யாரும். ஒரு பிரசங்கி இங்கிலாந்தின் பெருமைகளை அடுக்குவதை ஒருநாள் நான் கேட்டேன். அவன்

அறிவாளி; இங்கிலாந்தின் இலக்கிய. விஞ்ஞான, அரசியல் மேதைகளை யெல்லாம்—ஷேக்ஸ்பியர், பேகன், க்ராம் வெல், மில்டன், நியூடன், இன்னும் பலர்—பற்றிப் பேசினன். பிறகு பேசியவனும் மதகுருவாதலால் மதவிஷயமாகப் பெரியவர்கள் என்று ஒரு வரிசைப் பெயர்கள் சொன்னன்; அது அவன் தொழில். ஆனல் என்ன பெயர்களைச் சொன்னன் தெரியுமா? பென், ஹவார்டு, மிஸிஸிஸ்ப்ரை என்று சொன்னன். பெரியவர்களுக்கும் பெரியவர்கள் என்று இவர்கள் இடம் பெறுவதற்கு ஒரே காரணம்தான் உண்டு. அவர்கள் பணத்தை ஏராளமாக அள்ளித் தருமம் செய்தவர்கள். இவர்களை இந்தக் காரணத்துக்காக இங்கிலாந்தின் சிறந்த மனிதர்கள், மிக உயர்ந்த மனிதர்கள் என்று சொல்ல முடியுமா?

தருமச் செயல்களுக்கு உள்ள பெருமையையும் புகழையும் நான் சிறிதும் குறைக்க விரும்பவில்லை. மனித குலத்துக்கு தங்கள் வாழ்க்கை மூலமும் சாதனைகள் மூலமும் வரப்பிரசாதங்களாக உள்ளவர்களுக்கு உரிய புகழைத் தர வேண்டு மென்றே கோருகிறேன். மனிதன் நேர்மையாக இருக்கிறன், இரக்கமுள்ளவனக இருக்கிறன். தருமம் செய்பவனக இருக்கிறன் என்று சொல்வது மட்டும் போதாது. இது மட்டும் போதும் பெருமைக்கோ புகழுக்கோ என்று எனக்குத் தோன்றவில்லை. மரத்தில் இவை அடி மரத்தையும் இலைகளையும் போன்றவை. இவை மட்டும் முழு மரம் ஆகிவிடாது! வியாதியஸ்தர்களுக்குத் தயார் செய்து தரும் பச்சைக்கஷாயம் மிகவும் தாழ்வான உபயோகம் தான் படுகிறது—இந்தப் பச்சைகள் உடனேயே வாழவிடும். இதை உபயோகிப்பவர்களும் அவ்வளவாக அறிவாளிகள் அல்ல, நான் மனிதன் என்றல் அவனிடம் எதிர்பார்ப்பது அவன் மலரையும் கனியையும். அவனிடமிருக்கும் சிறந்த வாசனையும் இனிமையும் என்னை

வந்தடைய வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன். அந்தக் கனிவு எங்கள் உறவை அழகு படுத்த வேண்டும் என்று நான் எண்ணுகிறேன். அவனுடைய நல்லதனம், அறைகுறையாக,தாற்காலிகச் செயலாக இருக்கக்கூடாது. நிரந்தர அனுகூலம் அளிக்கக்கூடியதாக இருக்கவேண்டும். அதனுல் அவனுக்கு சிரமமே கூடாது. அவன் அறியாமலேகூடப் பிறருக்குக் கிடைக்க வேண்டும். எத்தனையோ பாபங்களை அழித்து விடுகிற தருமச் செய்கை இது; தருமவான் என்று நல்லது செய்ய முன் வருபவன் தன் துயரங்களையே பகைப் புலமாகச் சிருஷ்டித் தளித்து விடுகிருன்—அதை அனுதாபம் என்று காரணங் கூறித் தானே பாராட்டிக் கொள்கிருன். நாம் தருவதாஞல் நம் தைரியத்தைத் தர வேண்டும்—ஏக்கத்தையும் நம்பிக்கையற்ற வரட்சியையும் தரக்கூடாது. நமது திடத்தையும் சுகபாவத்தையும் தரவேண்டுமே தவிர, நமது வியாதியை அளிக்கக்கூடாது. ஒட்டுவாரொட்டியாக வரட்சியோ வியாதியோ பரவி விடாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். அழுகுரல் தெற்கேயுள்ள எந்தச் சம வெளியினின்றும் எழுகிறது? நம்மிடம் இருக்கிற ஒளியைப் பகிர்ந்தளிப்பதற்குத் தேவையான அஞ்ஞானி எந்த அக்ஷரேகையில் வசிக்கிருன்? நிதானமற்ற, மிருகத்தனமான அந்த மனிதன் யார்—அவனைத் தேடி அவனைக் காப்பாற்ற நாம் விரும்ப வேண்டுமே! இங்கு எப்படி நடக்கிறது என்ருல், கேளுங்கள், சொல்கிறேன். ஒருவனுக்கு வலி தோன்றி விடுகிறது; நியாயமாக அவன் செய்யவேண்டிய காரியங்கள் சரிவர நடைபெற வில்லை; அவன் குடல்கூட சரியாகச் செயல் படவில்லை; ஏனென்ருல் குடலில் தானே இரக்கம், அனுதாபம் எல்லாம் குடி யிருக்கிறது? இப்படிப்பட்ட வயிற்று வலிக்காரன் தான் உலகைச் சீர்திருத்தும் உத்தேசத்துடன் கிளம்பி விடுகிருன் இப்

போது. உலகில் உள்ள அணுவின் சொரூபம் அவன்; தனக்கு வயிற்றை வலிப்பதால், உலகில் எல்லோருக்கும் வயிற்றைத்தான் வலிக்கிறது. எல்லோருமே பழுக்காத ஆப்பிள்களைத் தின்றுவிட்டார்கள் என்று அவன் எண்ணுகிறான். அவன் கண்களுக்கு உருண்டையான இந்த உலகமே ஒரு உருண்டையான பழுக்காத ஆப்பிள் காயாகக் காட்சியளிக்கிறது. இந்த உலகத்தில் ஆப்பிளைத் தின்று வருங் காலத்துக் குழந்தைகள் வயிற்று வலியால் கஷ்டப் படப்போகிறார்களே என்று மனம் உருகுகிறான் அவன். உடனேயே அவன் தான தரும தாராளம் எஸ்கிமோவையும், படகோனியனையும், ஏராளமான இந்தியர்களையும் சீனாக்காரர்களையும் தேடிப் புறப்பட்டுவிடுகிறது. உலகத்தை ஆட்டுவிக்கும் சக்திகள் இவனையும் தங்கள் உபயோகத்துக்கு ஆட்டிவைக்கின்றன. சில வருஷத்திய தான தருமங்களிலேயே அவன் வயிற்று வலி மறைந்து விடுகிறது. பூகோளத்தின் ஒரு கன்னமோ, இரண்டு கன்னங்களுமோ வெட்கத்தால் சிவக்கத் தொடங்குகின்றன. அந்தச் சிவப்பைப் பார்த்து ஆப்பிள் கனியத் தொடங்கிவிட்டது என்று எண்ணத் தொடங்கிவிடுகிறான் நமது தரும சிந்தனையாளன். வாழ்க்கையின் தரமே தன்னால் பலருக்கும் உயர்ந்து விட்டதாக அவன் நினைத்துக் கொள்கிறான். வாழ்க்கை இனிக்கத் தொடங்கி விடுகிறது; அதற்குத் திடமும் தெம்பும் கூடிவிட்டது அவனைப் பற்றிய வரையில். தான் செய்ததை விடப் பெருந் தீங்கு, தான் அனுபவித்ததைவிட அதிகப்படியான வலி உலகில் இருக்க முடியும் என்று அவனால் அறியவே முடிவதில்லை. அவனை விட மட்டமான மனிதன் உலகில் இருக்க முடியும் என்றே எனக்குத் தோன்றவில்லை.

சீர்திருத்தக்காரன் வருத்தப்படுவதெல்லாம் தன் சகோதரர்கள் கஷ்டப்படுகிறார்களே என்பதற்காக அல்ல

என்று நான் நினைக்கிறேன். கடவுளின் மகனுகவே தான் இருக்கட்டும், அவன் படுவதெல்லாம் தனக்கு நேர்ந்திருக்கும் தொல்லைகளையும் வலிகளையும் பற்றித் தான். அந்த வலி, தொல்லை மர்ம ரகசியமானதாகத் தான் இருக்கும், அவன் வலி தீர்ந்து விடட்டும், அவன் மீண்டும் வஸந்த காலப் பருவத்தை அனுபவிக்கத் தொடங்கி விடட்டும், இளம்பரிதி அவன் நாட்களைத் தொடங்கி வைக்கட்டும். அதற்குப் பிறகு அவன் தான தருமம், சீர்திருத்தம், எல்லாவற்றையும் விட்டு நகர்ந்துவிடுவான். விடை கூடப் பெற்றுக் கொள்ளாமல் தன் சகாக்களை விட்டு ஒதுங்கிக் கொண்டு விடுவான். (புகையிலை உபயோகிக்கக் கூடாது என்று நான் யாருக்கும் பிரசங்கங்கள் புரியாதிருப்பதற்குக் காரணம், நான் புகையிலை உபயோகித்ததே யில்லை என்பது தான்.) இந்தக் குற்றத்துக்கு புகையிலை உபயோகித்து இப்போது திருந்தியவர்கள் ஆளாகமாட்டார்கள், கடித்து மென்றது எத்தனையோ பற்றி நான் பிரசங்கங்கள் புரிய முடியும் என்று தான் சொல்ல வேண்டும், தான தருமங்கள் என்கிற வியவகாரத்தில் நீ எப்போதாவது மாட்டிக் கொள்வது என்று நேர்ந்துவிட்டால் ஜாக்கிறதையாக இரு—உன் வலது கை செய்வதை இடது கை அறிய வேண்டும். அறியும்படி முக்கியமான விஷயம் எதையும் வலது கை செய்துவிடாது என்பது நிச்சயம். தண்ணிரில் விழுந்து தவிப்பவனை கை தூக்கிக் கரை சேர்த்து விட்டு, உன் பூட்ஸ் லேஸ்களை முடிந்து கொள், எத்தனை நாளுக்குப் பிறகு ஆனுலும் சரி, கொஞ்சம் உழைத்துப்பார்—இலவசமாக யாருக்காவது உழைத்துப் பார்.

நமது பழக்க வழக்கங்கள், மகாத்மாக்களுடன் பழகிப் பழகி, அவர்கள் வழிகளைப் பின் பற்றிப் பின் பற்றி மிகவும் கேவலமாகிவிட்டன, அழுகத் தொடங்கி விட்டன என்று தான் சொல்ல வேண்டும். நமது மதப்

பாடல்கள் நூல்களில் கடவுளை வாய் ஓயாமல் சபிப்பதும், அவனைச்சஹித்துக்கொள்வதும் சற்று அதிகமாகவே இருக்கின்றன. தீர்க்கதரிசிகளும் மகாத்மாக்களும் கூட மனிதனுடைய பயத்தில் ஆறுதலளிக்க முயன்றிருக்கிறார்களே தவிர அவனுடைய நம்பிக்கைகளை ஆதரித்துப் போற்றவில்லை. இந்த நூல்களில் எதிலும் வாழ்க்கை எனும் நன்மைக்காக யாரும் கடவுளுக்கு நன்றி செலுத்தியிருப்பதாகத் தெரிய வில்லை. எளிமையான அடக்க முடியாத திருப்தி இந்த வாழ்க்கையைப் பற்றி எந்தப் பாட்டிலும் இசைக்கப் பெற்றிருப்பதாக எனக்குத் தெரியவில்லை, கடவுளை ஞாபகம் வைத்துக் கொள்ளும்படியாக யாரும் புகழ்ந்திருப்பதாகத் தெரியவில்லை. தேக ஆரோக்கியமும், வெற்றியும் எனக்கு அளவில்லாத திருப்தியைத் தருகிறது— லேசான வெற்றியும் தினசரி ஆரோக்கியமும் கூடத்தான். உடல் நல மின்மையும் தோல்வியும் என்னைத் துயரில் ஆழ்த்துகின்றன; எனக்குக் கெடுதி விளைவிக்கின்றன. அனுதாபத்தால் மட்டும் மாறிவிடுகிற நிலைமை இதுவல்ல: எனக்கு சுபாவத்திலேயே வியாதியிடமும் தோல்வி யிடமும் அனுதாபம் இருந்தாலும் கூட, அது எனக்குக் கெடுதலையே விளைவிக்கிறது. காந்த சக்தியாலோ, இயற்கை சக்தியாலோ, மூலிகைச் சக்தியாலோ இந்திய சக்தியாலோ நாம் மனித குலத்தைச் சொஸ்தப்படுத்துவதென்றால், முதலில் நாமே இயற்கையோடு இசைந்து எளிய வாழ்வும், ஆரோக்கியமான வாழ்வும் உள்ளவர்களாக ஆக வேண்டும். நம் முகத்தை இருட்டச் செய்கிற கவலைகளை நாம் போக்கி விட வேண்டும். நம் ரத்த ஓட்டத்திலே இயற்கையான ஒரு வேகம், சிறு உத்ஸாக வேகம் புகும்படிச் செய்து கொள்ளவேண்டும். ஏழைகளை மேய்ப்பவனைகப் பின் தங்கிவிட நீ முயலாதே; உலகத்தின் சிறந்தவர்களில் ஒருவனாக, தகுதியுள்ளவர்களில் ஒருவனாக ஆக முயற்சி செய்ய வேண்டும்.

ஷிராஸில் வசித்த ஷேக்ஸாதியின் குலிஸ்தான் அல்லது பூந்தோட்டம் என்கிற நூலிலே நான் பின்வருமாறு படித்தேன். ("அவர்கள் ஒரு ஞானியை அணுகிக் கேட்டார்கள். கடவுள் எத்தனையோ நேர்த்தியான மரங்களைச் சிருஷ்டித்திருக்கிறார். உயரமானவை, காய்ப்பவை, நிழல் தருபவை என்று விதவிதமான அற்புதமான மரங்கள் இருக்கின்றன. இவற்றில் சிப்ரஸ் மரம் ஒன்றைத்தான் ஆஸாத், சுதந்திரமானது என்று கூறுகிறார்கள், அது ஏன்? அது காய்ப்பதில்லை; பழந்தருவதில்லை—இருந்தும் அதைப் போற்றுவதற்குக் காரணம் என்ன? "என்று கேட்டார்கள். ஞானி பதில் சொன்னான்" ஒவ்வொரு மரமும் செய்யவேண்டிய அலுவல், காய்க்க வேண்டிய காய் என்று ஒன்று இருக்கிறது. அதனதன் பருவத்தில் அதது முறைப்படி தளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பூக்க வேண்டும். மற்ற பருவங்களில் அது காய்ந்து உயிரற்றிருக்கும். இந்த இரண்டு நிலைகளுக்கும் சிப்ரஸ் மரம் உள்பட்டதில்லை. அதனால்தான் அதை சுதந்திரமானது என்று சொல்கிறார்கள்; எப்போதும் அது தழைத்துக் குலுங்குகிறது. இந்த மரத்தைப் போன்றவர்களே ஆஸாத்கள் என்று சொல்லப்படுகிற மத ஆசாரியர்கள். அவர்கள் எதற்கும் கட்டுப்படாதவர்கள்—சுதந்திர புருஷர்கள். நிலையில்லாததில் மனதைச் செல்லவிடாதவனே சுதந்திர புருஷன். காலீஃபாக்களின் நடமாட்டங்கள் எல்லாம் ஓய்ந்தபின்கூட டைக்ரிஸ் நதி ஓடிக்கொண்டுதான் இருக்கும். கையில் ஏராளமாக இருந்தால், பேரீச்சமரம் போல தாராளமாகக் கொடு. கொடுக்க ஒன்றும் இல்லாவிட்டால், அல்லது கொடுத்தும் லாபமிராது என்றால், சுதந்திரமாக இரு. சிப்ரஸ் மரம் போலக் காய்க்காத மரமாக இரு.")

# நான் எங்கே,
# எதற்காக வசித்தேன்?

நம் வாழ்க்கையில் ஒரு பருவத்தில் நாம் எந்த இடத்தைப் பார்க்கும்போதும், இங்கே வீடு கட்டிக் கொண்டு வசிக்கலாமே என்று எண்ணிப் பார்ப்போம். நான் தங்கியிருந்த இடத்திற்குப் பன்னிரண்டு மைல்கள் தூரத்திலுள்ள பல இடங்களையும் இந்தக் கண்கொண்டு நான் பார்த்திருக்கிறேன். என் கற்பனையில் அங்குள்ள பண்ணைகளையெல்லாம் ஒவ்வொன்றாக நான் விலைபேசி வாங்கிப் பார்த்திருக்கிறேன்—ஏனென்றால் அங்குள்ள எல்லாப் பண்ணைகளுமே விலைக்கு வரக் கூடியவைதான். அவற்றின் விலைகள் எல்லாம் எனக்குத் தெரியும். ஒவ்வொரு குடியானவனுடனும் அவன் வயல்களில் நடந்து பார்த்திருக்கிறேன், அவன் வீட்டில் புகுந்து பார்த்திருக்கிறேன். பண்ணைக் காரியங்களைப்பற்றி அவனுடன் பேசியிருக்கிறேன், அவன் விலைக்கு வாங்கியிருக்கிறேன்—அவனிடமே விலை பாக்கிக்கு அதை ஈடு வைத்திருக்கிறேன். எல்லாம் கற்பனையில்தான். பத்திரம் எழுதுவது தவிர மற்றதெல்லாவற்றையும் செய்திருக்கிறேன் நான், எனக்குப் பேச்சென்றால் பிரியம் அதிகம்தான். அவனுடன் பேசி, அவனையே அதைத் தொடர்ந்து நடத்த ஏற்பாடு செய்து நடத்த வேண்டியதையெல்லாம் நடத்தியிருக்கிறேன். அந்தப் பண்ணையில் வேலை செய்கிற காரியத்தை நான் உத்ஸாகமாகச் செய்து பார்த்திருக்கிறேன். அலுத்துப் போனவுடன் பண்ணையை அவனிடம் ஒப்புவித்துவிட்டு வேறு பண்ணைக்கு நகர்ந்திருக்கிறேன். இந்த அனுபவமெல்லாமாகச் சேர்ந்து என்னைக் கமிஷன் வியாபாரி என்று சொல்லுகிற அளவுக்கு ஆக்கிவிட்டது என்று சொல்வது

மிகையே யாகாது. நான் உட்கார்ந்த இடத்திலெல்லாம் வீடு கட்டிக்கொண்டு வசிக்கத் தொடங்கிவிடலாம். உலகத்துக் காட்சிகள் பலவும் என்னை மையமாகக் கொண்டு தான் வளர்ந்து விரிந்தன, வீடு என்றால் என்ன? தங்கும் இடம் என்றுதானே அர்த்தம்? இருக்கும் இடம் என்று வேண்டுமானால் சொல்லலாம். நாட்டுப் புறத்து வீடு என்றால் இன்னும் சிரேஷ்டம்தான். இதைவிடச் சிறந்த இடம் என் வீட்டுக்குக் கிடைக்காது என்று நான் பல இடங்களைப் பார்த்து நிச்சயித்து விட்டேன். கிராமத்துக்கு அருகில் இல்லை நான் பார்த்த இடங்கள் என்று சிலர் சொல்லலாம். என் நோக்கின்படி பார்த்தால் கிராமம்தான் என் வீட்டிலிருந்து அதிக தூரத்தில் இருந்தது. நான் எனக்குள்ளே சொல்லிக்கொண்டேன்—இங்கே நான் வசிக்கலாம் என்று. ஒருமணி நேரம், ஒருமாரி, ஒருகோடை என்று பல வருஷங்கள் நான் ஒவ்வொரு இடத்திலும் என் கற்பனையிலே வசிக்கத்தான் வசித்தேன்; வருஷங்கள் சென்றன; மாரியிலே போராடி வாழ்ந்தேன் நான்; வஸந்தத்தை வரவேற்று அனுபவித்தேன். ஒரு மாலைப்பொழுதுக்குள் வெகு விஸ்தீரணமான ஒரு பழத்தோட்டம் போட்டு முடித்து விடுவேன்; காடுகளைத் திருத்துவேன்; புல்வெளிகளாக்குவேன்; வீட்டுவாசலிலே எந்த ஓக்மரமும் பைன் மரமும் நின்று காவல் புரியவேண்டும் என்று தீர்மானிப்பேன்; எங்கு நின்றால் வெட்டி வீழ்த்திய மரங்களெல்லாம் செம்மையாகத் தெரியும் என்று அகக் கண்ணால் பார்ப்பேன்; கடைசியாக இந்தப் பண்ணை நிலம் பூராவும் தரிசாகக் கிடக்க விட்டுவிட்டு நகர்ந்து விடுவேன். தொடர்ந்து நடக்காத எத்தனையோ காரியங்களால் தான் மனிதன் பணக்காரனாக மதிப்பிடப் பட வேண்டியதாக இருக்கிறது! எத்தனைக் கெத்தனை அதிகமாக விலகி நிற்கிறானோ அவ்வளவுக் கவ்வளவு பணக்காரனாகவே மதிக்கப் படுகிறான் மனிதன்.

கற்பனையில் நான் எத்தனையோ பண்ணைகளை ஏற்க மறுத்திருக்கிறேன்; அந்த மறுதளிப்புத்தான் எனக்கு வேண்டியதெல்லாம்; உண்மையில் அவற்றைப் பெற்று நான் கையைச் சுட்டுக் கொள்ளவில்லை. ஹால்லோவெல் இடத்தை நான் வாங்கியபோது நான் ஒரு பண்ணைக்கு அநேகமாகச் சொந்தக்காரனாகி விட்டேன் என்றுதான் சொல்லவேண்டும்; அங்கு போகச் சாமான்களைச் சேகரிக்கத் தொடங்கிவிட்டேன். விதைகள் சேகரித்தேன்; ஒரு தள்ளுவண்டி செய்யச் சாமான்கள் தயார் செய்தேன். பத்திரம் கைமாறுமுன், சொந்தக்காரனின் மனைவி—இந்த மாதிரி மனைவிமார் இருக்கத்தானே இருக்கிறார்கள்—மனசை மாற்றிக்கொண்டு விட்டாள். அதை விற்பதில்லை என்று சொல்லிவிட்டாள். அதை வாங்காதிருப்பதற்காக எனக்குப் பத்து டாலர்கள் தந்து விடுதலைபெற அவன் தயாராக இருந்தான். அந்தச் சமயம் உண்மையில் என்னிடம் பத்து சதங்கள்தான் இருந்தன. என் கணக்குப் புள்ளிகள்படி, நான் பத்து சதங்கள் உள்ளவனா, பண்ணையின் சொந்தக்காரனா, பத்து டாலர் பணமுள்ளவனா, என்பதை என்னால் தெளிவாக நிர்த்தாரணம் பண்ணிக்கொள்ளவே முடியவில்லை. இந்த மூன்றுமே என்னிடம் இருப்பது போலத்தான் தோன்றிற்று எனக்கு. அது எப்படியானாலும் அந்தப் பண்ணையை அவனுக்கே திருப்பியளித்து விட்டேன். அவன் தந்த பத்து டாலரையும் நான் வாங்கிக் கொள்ளவில்லை. நான் கொடுத்த விலைக்கே அதை அவனுக்குத் திருப்பி விற்றுவிட்டேன். அவன் பணக்காரனல்ல என்பதனால் அவனுக்கு அவன் பத்து டாலர்களை இனமாக அளித்துவிட்டேன். இதற்குப் பிறகும் என்னிடம் பத்து சதங்கள் இருந்தன; விதைகள் இருந்தன; தள்ளுவண்டி செய்வதற்கு வேண்டிய சாமான்களும் இருந்தன. என் ஏழ்மையைச் சற்றும் பாதிக்காமலே நான்

பணக்காரனாகிவிட்டு என் பழைய ஸ்திதிக்கே மீண்டும் திரும்பிவிட்டேன், ஆனால் அந்தப் பண்ணைக் காட்சிகளை என் மனசில் ஸ்வீகரித்துக் கொண்டு விட்டேன்; அந்தப் பண்ணையில் விளைந்ததைத் தள்ளுவண்டி யில்லாமலே நான் என்னுடன் கொணர்ந்து விட்டேன். "நான் பார்ப்பதற் கெல்லாம் நானே ராஜா. என் உரிமைகளை மறுக்க யாருண்டு?" என்பதே என் கட்சி.

பண்ணையில் கிடைப்பதில் சிறந்ததைப் பெற்றுக் கொண்டு பண்ணை ஒன்றிலிருந்து கவி கிளம்புவதை நான் பார்த்திருக்கிறேன். ஒரு சில காட்டு ஆப்பிள்கள் தானே நாம் கொடுத்தோம் என்று குடியானவன் எண்ணலாம். ஆனால் கவி அந்தப் பண்ணையிலிருந்து கிடைக்கக் கூடிய தில் சிறந்ததை எல்லாம் எடுத்துக் கொண்டுதான் போய் விட்டான். அந்தப் பண்ணையே கவிக்குச் சொந்தமாகி விட்டது என்பது அவனுக்குத் தெரியாது. கவியோ வெனில் வார்த்தைகள் எனும் வேலிகட்டி, கண்ணுக்குத் தெரியாத பயிர்கள் சாகுபடி செய்து, அறுவடை செய்து, உள்ளதையெல்லாம் கறந்து அனுபவித்துக் கவிதை யாக்கிவிட்டு அவன் வழி போய்விட்டான். மிஞ்சியது எல்லாம் சத்தில்லாத வயல் என்பது குடியானவனுக்குத் தெரியாது. கவி அந்தச் சத்தையெல்லாம் உறிஞ்சிக் கொண்டுபோய்விட்டான் என்பதை அவன் பலநாள்வரை யில் அறியவே மாட்டான்.

ஹாலோவெல் பண்ணையைப் பற்றிய வரையில் எனக்குப் பிடித்திருந்த விஷயங்கள் இவைதான்—அது ஒரு பக்கமாக ஒதுங்கித் தனியாக இருந்தது, கிராமத்தி லிருந்து இரண்டு மைல்கள் தூரத்தில் இருந்தது அது. அண்டை அசலில் வீடு என்று வேண்டுமானால் அரை மைலாவது போகவேண்டும். ராஜபாட்டையிலிருந்து ஒரு பெரிய வயல் தள்ளி அப்பால் இருந்தது பண்ணை.

பண்ணையின் ஒரு பக்கத்து எல்லையாக ஒரு ஆறு ஓடிக் கொண்டிருந்தது. மூடு பனியால் காட்டு மரங்கள் உறைந்து வீணுகிவிடாமல் அந்த ஆறு தடுக்கிறது என்று ஹால்வெல் சொன்னுன்; அது அப்படி ஒன்றும் பெரிய சௌகரியமாக எனக்குத் தோன்றவில்லை. சாம்பல் நிற வர்ணச் சுவர்களும், வீடு இடிந்து பாழாகிக் கொண்டிருக் கிற தோற்றமும், கொட்டிலின் செப்பனிடப்படாத பழமையும் எனக்குப் பிடித்தே யிருந்தன. பண்ணையைச் சுற்றியிருந்த வேலிகள் கூடப் பல இடங்களில் பழுதாகத் தான் இருந்தன; ஆனுல் அண்டை வயல்காரன் என் காரியங்களில் குறுக்கிடாமல் பார்த்துக்கொள்ளப் போது மானது அந்த வேலி. அந்தப் பண்ணை என் கையில் வந்தவுடன் எவ்வளவு மாறிவிடும் என்று என்னுல் எண் ணிப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. லீசன் சூழ்ந்த ஆப்பிள் மரங்களை முயல்கள் கடித்துக் குதறியிருந்தன. அண்டை அயல் பண்ணைகள் எப்படி நிர்வாகம் செய்யப் பட்டு வந்தன என்பதை இது ஒன்றே எனக்குச் சந்தே கத்துக் கிடமில்லாமல் அறிவுறுத்தியது. இதெல்லாவற் யும்விட முக்கியமானதாகச் சொல்லவேண்டியது ஒன்று உண்டு; ஆற்றோரமாக வரும்போது முதலில் அந்தவீடும் வயலும் என் கண்ணில்பட்டது என் அகக் கண்ணை விட்டு இன்னும் அகலவில்லை. அடர்த்தியாக வளர்ந்த சிவப்பு மேபிள் மரங்களுக்கப்பால் வீடு தெரிந்தும் தெரியா மலும் அழகாக இருந்தது. வீட்டு நாய் உரக்கக் குரைத் துக் கொண்டிருந்தது. அவசரமாக அதை வாங்கிவிட வேண்டும் என்று நான் எண்ணினேன். பண்ணையை நிர்வகித்தவன், கருங்கல்களை வெட்டி அகற்றி, பல மரங்களை வீழ்த்தி, மற்றபடி அவனுக்கிஷ்டமான திருத் தங்களை யெல்லாம் செய்யுமுன் அதை நான் வாங்கிவிட வேண்டுமென்று எண்ணினேன். இந்த சௌகரி

யங்களை எல்லாம் அடைந்து அனுபவிப்பதற்காக நான் என் தோள்மேல், அட்லாஸ் ராக்ஷஸனைப்போல, உலகத்தின் பாரத்தையே சுமக்கத் தயாராக இருந்தேன்—காசு கொடுத்து வாங்கி அதை என் சொந்தப் பண்ணையாக்கிக் கொள்ளத் தயாராக இருந்தேன், பணத்தைக் கொடுத்து வாங்கிவிட்டால், அதை அனுபவிப்பதில் என்னை யாரும் அவசரப்படுத்த முடியாது; தொந்திரவும் செய்யமுடியாது என்பது என் நினைப்பு. எனக்குத் தேவையான விளை பொருள்களை அது ஏராளமாகக் கொடுக்கும் என்பதில் எனக்குச் சந்தேகம் சிறிதுமில்லை. அதில் தேவையான அளவுக்குமேல் வேலை செய்யாதிருந்தால் அது நல்ல லாபம் தரும். ஆனால் கடைசியில் நான் முன் சொன்னபடிதான் நடந்தது.

பெரிய அளவில் நான் ஒரு பண்ணை வைத்து நடத்துவது என்பதுபற்றிச் சொல்லக் கூடியதெல்லாம் இதுதான்—என்னிடம் தேவையான விதைகள் இருந்தன. தோட்டம் போடுவதில் எனக்குப் பிரியம் அதிகம், விதைகளைப் பற்றியவரையில் அவற்றிற்கு வயது அதிகமாவதால் அதிகப் பலன்கிடைக்கும் என்று சிலர் சொல்கிறார்கள். நல்லதையும் கெட்டதையும் பார்ப்பதற்குக் காலத்தைப் போன்ற வல்லமையுள்ள ஆசாமி வேறு யார்? கடைசியில் நான் என் விதைகளை விதைக்கும்போது, என் விளைவில் நான் அதிகமாக ஏமாறமாட்டேன் என்றே நம்புகிறேன். ('கடைசியாக நான் என் சக மனிதர்களுக்குச் சொல்வதென்னவென்றால்—நாம் எல்லோருமே எவ்வளவு தூரம் முடியுமோ அவ்வளவு தூரம் சுதந்திரமாக, சுமைகள் எதுவும் சுமக்காமல், எதற்கும் பிடி கொடுத்து விடாமல், வாழ முயலவேண்டும் என்பதுதான். )பண்ணையில் மாட்டிக் கொண்டால் என்ன? சிறையில் மாட்டிக்

கொண்டால் என்ன? இரண்டிற்கும் அவ்வளவாக வித்தியாசமில்லை தானே!

கிழவன் கேடோவின் "டி ரே ரஸ்டிகா" தான் இந்த விஷயங்களில் என் வழிகாட்டி. அதைப் படித்துத்தான் நான் பல விஷயங்களைத் தெரிந்துகொண்டிருக்கிறேன்:" "ஒரு பண்ணையை வாங்குவது என்று உத்தேசிக்கும் போது மிகவும் முன் யோசனையுடன் செய். பேராசையுடன் வாங்காதே. அதைத் திரும்பத் திரும்பப் பார்—அதைச் சுற்றிவருவதில் சோம்பல் படாதே. ஒருதரம் சுற்றிப் பார்த்தால் போதும் என்று எண்ணாதே. நல்ல பண்ணையாக இருந்தால் பார்க்கப் பார்க்க அது உனக்குத் திருப்தி அளிப்பதாக இருக்கும்." நான் பேராசைப்பட்டு எதையும் வாங்கமாட்டேன். உயிருள்ளவரையில் நான் வாங்க விரும்புகிற பண்ணையைச் சுற்றிவந்து பார்ப்பேன். முதலில் அதில் புதை பட்டால் கூடத் தேவலை என்று எண்ணுகிறேன் நான். இப்படிப் பழகினால்தான் அது கடைசியில் எனக்குத் திருப்தி தருவதாக இருக்கும் என்றும் எண்ணுகிறேன்.

இந்த மாதிரியான பண்ணை வாழ்விலே இதுதான் என்னுடைய அடுத்த முயற்சி. இதைப்பற்றி விரிவாக எழுதுவதாகத்தான் எனக்கு உத்தேசம். சௌகரியத்துக்காக இந்த இரண்டு வருஷத்து அனுபவங்களையும் ஒரு வருஷத்திற்குள் திணித்துச் சொல்வதாக எனக்கு உத்தேசம். நான்தான் ஏற்கெனவே சொல்லிவிட்டேனே! ஏமாற்றம், தோல்வி, துக்கம் என்று ஒரு காவியம் சமைக்கப் போவதில்லை நான், காலையில் கூவுகிற கோழிபோல உரக்க இதுபற்றிப் பெருமை பீற்றிக்கொள்ளப் போகிறேன். பக்கத்திலுள்ளவர்கள் உறக்கத்திலிருந்து எழ வேண்டும் என்பதற்காக நான் உரக்கச் சப்தம் போடப் போகிறேன்.

காட்டில் பகலில் போலவே இரவிலும் முழுநேரத்தையும் செலவழிப்பது என்று நான் தொடங்கியது 1845-ல் சுதந்திர தினத்தன்றுதான் (ஜுலை 4). என் வீடு மாரிக்காலத்திற்கு அப்பொழுது தயார் செய்யப் படவில்லை. மழை பெய்தால் மேலே விழாமல் ஒதுங்கிக் கொள்ளலாம் அதில். அதைத் தவிர சுவரில் மேல் பூச்சுக் கூடப் பூசவில்லை; புகை போக்கியும் இல்லை. வெய்யிலில் காய்ந்து மழையில் நனைந்து பதப்பட்ட மரங்களாலான சுவர்களில் இண்டு இடுக்குகள் பெரிதாகவே இருந்தன. அவற்றின்மூலம் இரவுகளில் குளிர்ந்த காற்று உள்ளே வீசிற்று, நிமிர்ந்து நின்ற சீவப்பட்ட வெண்மையான புது மரத்தூண்களும், புதுசாக இழைக்கப்பட்ட கதவும், ஜன்னல்படிகளும் கதவுகளும் பார்ப்பதற்கு நன்ருக இருந்தன. இடம் சுத்தமாகவும் காற்ருேட்டமாகவும் இருந்தது, அதுவும் அதிகாலையில். காலைப்பனியில் ஊறியிருந்த மரங்களில் சொட்டுச் சொட்டாக ஈரம் நின்றது அழகாக இருந்தது. நண்பகலுக்குள் அவற்றிலிருந்து ஒரு இனிப்பான கோந்து வெளிப்படும் என்று எனக்குத் தோன்றும். இந்த இளம் பசுமையும் காட்டு உயிர்த் தன்மையும் நாள்பூராவும் அங்கு காணக் கிடந்ததாகத் தான் எனக்குத் தோன்றியது; அது என் கற்பனையாகவே இருக்கலாம். மலைமேலிருந்த ஒரு வீட்டுக்கு எப்பொழுதோ ஒருதரம் நான் போயிருந்தேன்; அந்த இன்பமான வீட்டை எனக்கு ஞாபகப்படுத்தியது என் வீடும். ஊர் சுற்றிவரும் ஒரு தேவனுக்கும், ஆடைகள் தரையில் புரள நடக்கும் ஒரு தேவிக்கும் உரிய வாசஸ்தலமாக இருக்கத் தகுதியுள்ள வீடு அந்த மலை வீடு. என் வீட்டிலே வீசிய காற்று மலைக் காற்று—மலைச் சாரலில் புரண்டு வரும் காற்று. பூமியின் இசைகளிலே, மிகவும் உயர்ந்ததை, மேலானதை மட்டும் அது சுமந்து வந்தது என்று

நான் எண்ணினேன். காலைக் காற்று என்பது எப்பொழுதும் வீசுகிறது; சிருஷ்டியெனும் காவியம் இடைவிடாது நடந்துகொண்டிருக்கிறது; ஆனால் அதைக் காது கொடுத்துக் கேட்பவர்கள் மிகச் சிலரே. ஒலிம்பஸ் மலை என்பது இந்தப் பூமிக்கு வெளியேயுள்ள எல்லா இடமும் தான்.

ஒரு படகைத் தவிர எனக்கு இதுவரை சொந்தம் என்று சொல்லக் கூடியதாக இருந்த வீடு, ஒரு கூடாரம் தான். கோடையில் எங்காவது திரிந்தலைந்து வரும் போது, சில சமயம் அந்தக் கூடாரத்தைப் போட்டுக் கொண்டு அதில் நான் தங்குவதுண்டு. அந்தக் கூடாரம் இன்னமும் என் மச்சிலே சுருட்டி மடக்கிப் போடப்பட்டுக் கிடக்கிறது. ஆனால் என் படகு கைக்குப் பின்கையாக மாறி இப்போது காலம் எனும் ஆற்றின் வெள்ளத்திலே மிதந்து போய் விட்டது. இந்த முதல் நிரந்தரமான—அதாவது அநேகமாக நிரந்தரமான வீட்டுடன்—நான் உலகில் என் ஸ்தானத்தை ஸ்திரமுள்ளதாகச் செய்து கொள்ள முயன்று வெற்றியும் பெற்றுவிட்டேன். காற்றுத்தேவையானால் நான் வீட்டை விட்டு வெளியே போக வேண்டியதேயில்லை, உள்ளேயும் இயற்கையின் காற்றுத்தான் அடித்தது; அதன் புதுமை உணக்கை மாறிவிட வில்லை. வீட்டுக்குள் இருந்தேன் என்று சொல்வதைவிட, கதவுக்கப்பால் இருந்தேன் மழை பெய்யும் போது என்று சொல்வது தான் பொருந்தும். ஹரிவம்சத்தில் சொல்லி யிருக்கிறது: "பறவைகள் இல்லாத இருப்பிடம் மசாலா இல்லாத மாமிசத்தைப் போல" என்று. என் வீட்டில் பறவைகள் ஏராளமாக இருந்தன. பறவைகள் தான் என் அண்டை அசல் எல்லாம். பறவைகளைக் கூட்டில் அடைக்கவில்லை நான், அவற்றுக்கு அருகில் இருப்பதற்காக நான் என்னையே இந்தக் கூண்டில் அடைத்துக்

கொண்டு விட்டேன். அவற்றின் குரல்களைப் பல மனிதர்கள் கேட்டே இருக்க மாட்டார்கள்—மர த்ரஷ், வீரிப் பறவை, சிவப்பு டானேஜர், வயல் ஸ்பாரோ போன்ற எத்தனை எத்தனையோ ரகப் பறவைகள் என் வீட்டுப் பக்கம் வந்து போயின; எனக்காகக் குரல் தந்தன.

நான் உட்கார்ந்திருந்தது ஒரு சின்னக் குளத்தின் கரை. கான்கார்டு கிராமத்திலிருந்து தெற்கே ஒன்றரை மைல்களுக் கப்பால், சற்று உயரத்தில், மலைச் சரிவில் இருக்கிறது இந்த ஏரி. ஒரு பெரிய காட்டின் மத்தியிலே இருக்கிறது. இது. இதற்குத் தெற்கே இரண்டு மைல்களுக்கப்பால் இருப்பது தான் சரித்திரப் பிரசித்தமான கான்கார்டு யுத்தகளம். எதிர்க் கரை தான் என் அடிவானம்; மலைச்சரிவிலே மரங்கள் வளர்ந்திருப்பது மட்டுமே எனக்குத் தெரிகிறது. நான் அங்கு தங்கிய முதல் வாரத்தில் நான் அந்தக் குளத்தைப்பார்த்துப் பார்த்துப் பெருமைப் பட்டுக் கொண்டேன். சூரியன் உதித்து மெமெலெழும்பி வரும்போது, இரவின் ஆடையான பனியை அவிழ்த் தெறிந்துவிட்டு அது நிற்பதை நான் கண்டேன். கொஞ்சம் கொஞ்சமாக, மிருதுவான அலைகளும், கண்ணாடி போன்ற பள பளப்பான நீர் நிலையும் கண்ணை வந்து நிரப்பின. மூடுபனி இரவில் வந்த திருடன் போல் நாலா பக்கமும் மெதுவாகக் காட்டுக்குள் புகுந்து மறைந்து கொண்டிருந்தது. மரங்களில் தொங்கிய பனித் துளிகள், மலையில் தொங்கியவை போலவே, பகலில் அதிக நேரம் மறையாமல் இருந்தன.

அதிகவேக மில்லாமல், ஆகஸ்டு மாதத்தில் வந்த ஒரு மழைப் புயலில் இந்தச் சிறிய ஏரிதான் என் உற்றுணையாக இருந்தது. காற்றும் நீரும் அசையாமல் நிலைத்து நின்றன. வானம் இருண்டு கறுத்திருந்தது. சுற்றிலும் மர த்ரஷ் பறவைகள் பாடிக் கொண்டிருந்தன; இக்

கரையிலிருந்து அக்கரைக்கு எட்டும்படியாக அவை குரல் கொடுத்தன. இந்த மாதிரி நேரத்தில் தான் இப்படிப்பட்ட ஏரியின் பரப்பு நிச்சலனமாக இருக்கும். வானத்திலுள்ள மேகங்கள் தழைந்து அருகில் இருப்பது போல இருப்பதாலும், இருட்டாக இருப்பதாலும், ஜலப்பரப்பில் வெளிச்சமும் பிரதிபலிப்பும் அதிகமாக இருக்கிறது. அருகிலுள்ள ஒரு குன்றின் உச்சியிலிருந்து மலைக்குப் பின் நீல மலையாகத் தெரிகிறது. அருகிலுள்ள மலைகள் பச்சையாகவும், பின்னால் உள்ளவை நீலமாகவும் தெரிவது அழகாக இருக்கிறது. ஒன்றன் பின் ஒன்ருக மலைகளின் உச்சிகள் நிமிர்ந்து நிற்கின்றன. நிமிர்ந்து நின்று எட்டிப் பார்த்தேனுல் அதற்காப்பாலும் குன்றுகள் தெரிகின்றன. கிராமத்திலுள்ள வீடுகளில் சிலவும் லேசாகத் தெரிவது போல இருக்கிறது, மற்ற பக்கங்களில் மரங்களைத் தாண்டி எதுவும் என் கண்ணில்படவில்லை. பக்கத்தில் நீர் நிலை இருப்பதில் சௌகரியங்கள் இருக்கின்றன. பூமிக்கு மிதக்கும் சக்தி யளித்து லேசாக்குவது தண்ணீர் தான். வெண்ணெயைச் சுத்தமாக வைத்துக் கொள்கிறது ஜலம் என்பது போல இதுவும் முக்கியமான ஒரு விஷயமே. தண்ணீரில் பூமி மிதக்கிறது, நாம் உலர்ந்த நீர்படாத ஒரு இடத்தில் வசிக்கிருேம் என்பது அறிந்து கொள்ள வேண்டிய ஒரு உண்மையாகும்.

என் வீட்டு வாசலிலிருந்து இதையும் விடக் குறுகலான காட்சி தான் தென்படுகிறது என்ருலும் ஏதோ குறுகலான இடத்தில் அடைபட்டுக் கிடப்பது போன்ற எண்ணம் எனக்கு ஏற்படவில்லை; எதுவும் நெருக்கடி இருப்பது போலவும் தோன்றவில்லை. இங்கு என் கற்பனை ஓடுவதற்கு ஏராளமான வெளி இருக்கிறது. புதர்கள் அடர்ந்த, ஓக்மரங்கள் அசைந்தாடிய திட்டு எதிர்க்கரையில் கிளம்பி வெகு தூரம் சென்றது; மேலைப் பிரெய்ரிப்

பிரதேசங்களையும் டார்டரி பாலை வனங்களையும் தொடு கிற தூரம் சென்றது அந்தத் திட்டு. மனித குலத்தின் குடும்பங்கள் எல்லாம் குடியேறி வசிக்க அங்கு போது மான இடம் இருந்தது.

இடம் காலம் இரண்டுமே மாறிவிட்டது. நான் உல கில் எனக்குப் பிடித்த பகுதிகளில் மனித சரித்திரத்தில் என் மனதைக் கவர்ந்த காலங்களில் வசித்தேன். இர வில் வான சாஸ்திரிகள் தூர திருஷ்டிக் கண்ணாடி கொண்டு பார்க்கிற உலகம் போல என் உலகமும் வெகு தூரத்துக்கப்பால் இருந்தது. வானத்தில் எங்கேயோ எட்டாத் தொலைவில், என்றும் புதுமையான, யாராலும் வீணுக்கப்படாத ஒரு இடத்திலே இருந்தது என் வீடு. வெகு தொலைவில் உள்ள நக்ஷத்திரங்களில் போய்க் குடி யேறுவது சாத்திய மென்றால், நான் அப்படிப்பட்ட ஒரு நக்ஷத்திரத்திலே போய்க் குடியேறிவிட்டேன் என்று தான் சொல்ல வேண்டும். சாதாரண மக்களின் தினசரி வாழ் வுக்கும் என் வாழ்வுக்கும் அவ்வளவு தூரம் இருந்தது என்று தான் சொல்ல வேண்டும்.

ஒவ்வொரு நாளும் காலைப் பொழுதில் நான் அதி சீக்கிறமே எழுந்துவிடுவேன். அரோரா என்கிற கன்னியை தொழுவதில் நான் கிரேக்கர்களுக்குச் சற்றும் பின்னிட்ட வன் அல்ல. காலைப் பொழுது என்னைச் சந்தோஷமாக அழைத்தது. தன்னைப் போலவே என்னையும் என் வாழ்வை எளிமை நிறைந்ததாகச் செய்யச் சொல்லி அழைத்தது, இயற்கையைப் போன்ற இனிமையும், களங்க மின்மையும் உள்ளதாக என் வாழ்க்கை அமைய வேண்டும் என்று ஒவ்வொரு அதிகாலைப் பொழுதும் எனக்கு அறிவுறுத்தியது. காலையில் எழுந்தவுடன் குளத் திலே குளித்து விடுவேன்; அன்றாடம் தவறாத ஒரு அனுஷ்டானம் அது. தினசரி நான் செய்ததில் மிகவும்

சிறந்த காரியம் அதுதான், சில் சாங் என்கிற அரசன் குளிக்கிற தண்ணீர்த் தொட்டியிலே பின் வரும் வார்த்தைகள் பொறிக்கப்பட்டிருந்தனவாம்; "ஒவ்வொரு நாளும் பரிபூரணமாக உன்னைப் புதுப்பித்துக்கொள். மீண்டும், மீண்டும், எப்போதும் புதுப்பித்துக் கொண்டிரு." இது எனக்குப் புரிகிறது. காலை நேரம் என்பது நமக்கு மீண்டும் வீரர்களின் காலத்தைச் சிருஷ்டித்துத் தருகிறது, அதிகாலையிலே, நான் படுத்திருக்கும் பொழுது ஒரு கொசு மெதுவாகக் குரல் கொடுத்துக் கொண்டு, என் கண்ணில் படாமல், ஒரு இடம் விடாமல், கதவும் ஜன்னல்களும் திறந்துள்ள என் அறையில் பிரயாணம் செய்கிறது; கொசுவின் இந்த லேசான ஒலி என் காதில் போர்க்களத்தின் புகழ்பாடும் யுத்தக் கொம்பின் முழக்கத்தை போல என்னைப் பாதிக்கிறது. ஹோமரின் சரம கவி அது. இலியாத், ஒடிஸி என்கிற காவியங்களை அந்தக் கொசு, கோபமும் தாபமும் தொனிக்க, பிரயாணங்கள் முடிவில்லாமல் நடைபெறப் பாடுகிறது என் காதில். பிரபஞ்சத்தையே பூராவும் பாதிக்கக் கூடிய ஒரு தன்மை அதில் இருக்கத்தான் இருக்கிறது.

நாளில் மிகவும் சிறப்பான ஞாபகத்திலிருத்த வேண்டிய பருவம் காலைப் பொழுது தான்; இரவிலும் பகலிலும் மற்ற நேரங்களிலெல்லாம் உறங்கிக் கிடக்கிற நம் உளப்பகுதி ஒன்று அந்நேரத்தில் நன்கு விழித்துக் கொண்டு பிரக்ஞையுடன் இருக்கிறது; இந்தப் பிரக்ஞை குறைந்த பக்ஷம் ஒரு மணி நேரமாவது நீடிக்கிறது. நாமாக, நம் மேதையின் வேகத்தால் எழுந்திருக்காத நாளில் நம்மால் எதுவும் சாதிக்க முடியாது தான் போய் விடும். வேலைக்காரன் வந்து எழுப்புவது நல்லதல்ல. உள்ளிருந்து பொங்கி எழும் ஒரு உயிர் உணர்ச்சி தின்மீ காலையில் நம்மை விழிப்புக் கொள்ளச் செய்ய வேண்டும்.

திவ்யமான ஒரு இசை நமக்குத் தாலாட்டுப்பாடி எழுப்ப வேண்டும்; இதற்குப் பதில் தொழிற்சாலையின் மணிகளின் சப்தம் கேட்டு எழுந்திருப்பதும் நல்லதல்ல, காற்றிலே ஒரு புது மணம் நிறைந்திருக்க வேண்டும். தூங்கும் போது இருந்ததைவிட இப்போது சற்று உயர்வான வாழ்வுக்கு நாம் துயில் நீங்கி எழ வேண்டும். அப்படியானல் தான் இரவின் இருட்டு நல் வாழ்வில் முடிந்தது என்று சொல்ல முடியும். ஒளியைப் போலவே, இருட்டும் நல்லது தான்.

புலனின்பங்கள் ஓரளவுக்கு தூக்கத்தில் 'அடங்கிய இரவு நேரத்துக்குப்பின், மனிதனின் ஆத்மா அல்லது அதன் அங்கங்கள், ஒவ்வொரு காலையிலும் அதிக உரமும் ஊட்டமும் பெறுகின்றன; அவன் மேதை தன்னல் எவ்வளவு நேர்த்தியான வாழ்வு வாழ அவனைத் தூண்டமுடியுமோ அவ்வளவு தூண்டிவிடுகிறது. காலைக் காற்றிலே, காலை நேரத்திலேதான் ஞாபகத்தில் இருத்திக்கொள்ள வேண்டிய நிகழ்ச்சிகள் எல்லாமே நிகழ்கின்றன என்று நான் சொல்வேன். "காலைப் பொழுதுடனே மனிதனின் மதி நுட்பங்கள் எல்லாம் விழித்துக் கொள்ளுகின்றன" என்று வேதங்கள் கூறுகின்றன. கவிதையும் கலையும், மனிதர்களின் காரியங்களில் அழகானவையும் உயர்ந்தவையும் காலை நேரத்திலேதான் தொடங்குகின்றன. மெம்னனைப் போல, எல்லாக் கவிகளும் வீரர்களும் அதிகாலை நேரத்தின் குழந்தைகள் தான்; சூரியோதய காலத்திலே தான் அவர்கள் செயலாற்றுகின்றனர். பாடுகின்றனர். சூரியனுக்குப் போட்டியாகத் துள்ளி ஓடும் வேக சிந்தனைகள் படைத்தவனுக்கு, நாளில் எல்லாப் பொழுதுமே அதிகாலைப் பொழுதைப் போன்றதேதான்; நாள் பூராவும் நிரந்தரமான உஷத் காலம்தான். கடிகாரங்கள் என்ன சொன்னல் என்ன; மற்ற மனிதர்களின் மனப்பான்மை

களும் காரியங்களும் என்ன சொன்னால் என்ன? நான் விழித்திருக்கையில், என் உள்ளத்தில் ஒளி தோன்றும் நேரமே, காலை நேரம். புதுநாள் பிறந்தது என்கிற உணர்வு தான் முக்கியம். குணச் சீர்திருத்தம் என்பது தூக்கத்தை ஒழிப்பதற்குச் செய்யப்படுகிற முயற்சிதான். பகல் பொழுதைப் பற்றி சரியானபடி கணக்குச் சொல்லமாட்டாது தடுமாடுகிறவர்கள் தூங்குகிறவர்கள் தான்; வேறு என்ன? அவர்களுக்குக் கணக்குப் பண்ணவும் தெரியவில்லை; சரியானபடி வாழவும் தெரியவில்லை. தூக்கக் கலக்கத்தில் ஆடிவிழாதவர்களாக இருந்தால் ஒரு நாளில் அவர்கள் ஏதாவது சாதித்திருக்க மாட்டார்களா? உடலுழைப்புக்குத் தயாராக லக்ஷக்கணக்கானவர்கள் விழித்துக் கொள்கிறார்கள். ஆனால் பத்து லக்ஷத்தில் ஒருவன்தான் பலன்தரும் அறிவு முயற்சிகளுக்குத் தயாராக விழித்துக் கொள்கிறான். பத்து கோடியில் ஒருவன்தான் கவித்வம் அல்லது தெய்வத்வம் நிரம்பிய வாழ்க்கைக்கு விழித்துக் கொள்கிறான்.

மீண்டும் விழித்தெழுந்து, விழிப்புள்ளவர்களாகவே இருக்க நாம் கற்றுக் கொள்ளவேண்டும். இதற்கு புறச் சாதனங்களையோ, யந்திர சாதனங்களையோ நம்பிப் பயனில்லை. எல்லையற்ற எதிர்பார்த்தலுடன் நாம் உஷக் காலத்தை நம்முள் வரவேற்கத் தயாராக வேண்டும். ஆழ்ந்த தூக்கத்திலும்கூட இந்த உஷக் காலத்தின் தன்மை நம்மைவிட்டுப் பூரணமாக விலகிவிடுவதில்லை. சுயப் பிரக்ஞையுடன் முயற்சி செய்து மனிதன் தன் நிலையை உயர்த்திக் கொள்ள முடியும் என்பதை விடத் தைரியம் தருகிற விஷயம் வேறு எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை, ஒரு குறிப்பிட்ட சித்திரம் வரைவதோ, ஒரு சிற்பம் அமைப்பதோ, சில விஷயங்களை அழகுபெற ஜோடிப்பதோ பெருமைப்பட வேண்டிய

விஷயம் தான். நம் நோக்கம் செல்லுகிற பாதையெல்லாம் சிலைபோலச் செதுக்கி, சித்திரம்போல வர்ணம்தீட்டி, அழகு பெறச் செய்வது அவசியம். இதை மனிதன் தன் குணாதிசயங்களினால் சாதிக்க முடியும். இன்றையப் பொழுதின் தன்மையை உயர்த்துவது எப்படி என்று அறிவது தான் கலைகளிலெல்லாம் பெரிய கலை. தன்னுடைய மிகவும் நேர்த்தியான, உயர்ந்த, விசாரணை அதிகமுள்ள நேரத்துக்கு ஈடானதாகத் தன் வாழ்க்கையின் ஒவ்வொரு நேரத்தையும், அதன் சில்லறை அம்சங்களிலும் கூடச் செய்யமுடியும் என்பதுதான் மனிதன்பெருமை—அதைச் செய்ய வேண்டியதுதான் அவன் கடமை. தன் மிகச் சிறந்த நேரத்தின் சிந்தனைகளுக்கு ஒத்ததாகத் தன் வாழ்க்கையை அமைத்துக்கொள்ள முயல வேண்டியது ஒவ்வொரு மனிதனுக்கும் முதல் கடமையாகும். சில்லறை விஷயங்களில் மனதைப் பறிகொடுக்காமல், காதில் விழுவதை எல்லாம் அவசியமல்ல என்று ஒதுக்கிவிட்டு சிந்தித்தோமானால் இதை எப்படிச் செய்யலாம் என்று தெய்வத்தின் குரல் நமக்குத் தெளிவாகவே சொல்லிவிடும்.

காட்டில் நான் வசிக்கப் போனது இதனால்தான். முற்றிய முடிவான ஒரு சிந்தனையுடன் வாழவிரும்பினேன் நான். வாழ்க்கையின் அதிமுக்கியமான உண்மைகளைத் தவிர வேறு எதையும் நேருக்குநேர் நோக்க நான் விரும்பவில்லை. வாழ்க்கையிலிருந்து கற்றுக்கொள்ள வேண்டியதைச் சரியாகக் கற்றுக் கொள்ள முடியுமா என்று காண நான் விரும்பினேன். சாகும்பொழுது, நான் வாழவேயில்லையே என்கிற நினைப்புடன் சாக நான் விரும்பவில்லை. வாழ்க்கை யல்லாததை வாழ நான் மறுத்தேன். வாழ்க்கை என்பது மலிவானது அல்ல; உதறிவிடக் கூடியது அல்ல. மிகவும் விலையுயர்ந்த விஷயம் அது. அவசியமானாலொழிய, எதையும் தியாகம் செய்துவிட்டு ஏழ்மையான

வாழ்வு வாழ நான் விரும்பவில்லை. இது போதுமென்ற மனத்துடன் வாழ நான் விரும்பவேயில்லை. ஆழ வாழ்ந்து, வாழ்க்கையிலிருந்து அதன் சத்தையெல்லாம் உறிஞ்சி அனுபவிக்க நான் ஆசைப்பட்டேன். வாழ்க்கை யல்லாத போலிகளை யெல்லாம் தோல்வியடையச் செய்யக்கூடிய தெம்பும் (ஸ்பார்ட்ட) தீரமும் எனக்கு வெண்டும் என்று ஆசைப்பட்டேன் நான், 'வாழ்க்கை மேன்மையானது, தெய்வீகமானது என்று கண்டதால், அதன் மேன்மை யையும் தெய்வீகத்தையும் அனுபவித்து விடுவது என்று நான் தீர்மானித்தேன். அடுத்த முயற்சியில், பயணத்தில், அதைப்பற்றிய உண்மை விவரங்களை வெளியிடுவது என்று நான் தீர்மானித்து விட்டேன். வாழ்க்கை என்பது சைத்தானின் திருவிளையாடலா, கடவுளுடையதா என்பது பற்றிப் பெரும்பாலோருக்குச் சந்தேகமாகத்தான் இருக்கி றது. பலர் ஒரு அவசர முடிவுக்கும் வந்திருக்கிறார்கள். மனிதனின் முக்கிய லக்ஷியம் "கடவுளைப் பெருமைப் படுத்தி அவனை நிரந்தரமாக அனுபவிப்பதுதான்" என்று சிலர் ஒரு முடிவுக்கும் வந்திருக்கிறார்கள். இது கொஞ்சம் அவசர அடியான முடிவுதான் என்று எனக்குத் தோன்று கிறது.

இருந்தும் எறும்புகள்போல நாம் சின்னத்தனமாக, அற்பத்தனமாகத்தான் வாழுகிறோம். பல வருஷங்களுக்கு முன்னரே நாம் மனிதர்களாகி விட்டோம் என்று சரித்தி ரம் சொல்லுகிறது என்றாலும், நாம் இன்னமும் சின்னவர் களாக நாரைகளுடன் யுத்தம் தொடுத்துக் கொண்டிருக்கி றோம், தவறுமேல் தவறு, அடிமேல் அடி, என்றுதான் இருக்கிறது எல்லாமே. நமது சிறந்த குணதிசயம் அனுவசி யமான தவிர்க்கக் கூடிய ஒரு தீமையை ஏழ்மையை நம் பியே தழைக்க வேண்டியதாக இருக்கிறது. சில்லரை விஷ யங்களிலே நம் வாழ்க்கை விரயம் ஆகிக்கொண்டிருக்கி

றது. நாணயஸ்தன் ஒருவனுக்கு பத்து விரல்களால் எண்ணப்படுவதற்கு மேல் அதிகமாக எண்ணிக்கை தேவையில்லை; அவசியமானுல் கணக்குக்குக் கால் விரல்கள் பத்தையும் சேர்த்துக் கொள்ளலாம். மற்ற கணக்குகளை விட்டு விட்டால் என்ன? எளிமை, எளிமை, எளிமை! இரண்டு மூன்று என்று இருக்கட்டுமே உன் கணக்குகளும் காரியங்களும். நூறு ஆயிரம் என்று இருப்பானேன்! லக்ஷாபலக்ஷம் என்று சொல்வதற்குப் பதில் டஜன் கணக்கில் சொன்னுல் என்ன நஷ்டம் வந்து விடும்? கணக்குகளை விரல் நுனியில் வைத்திருப்பது சாத்தியமே. நாகரிகமான வாழ்க்கை எனும் கொந்தளிக்கும் கடலிலே, மேகங்கள், புயல்கள், இடி, மின்னல் போன்ற ஆயிரக்கணக்கான ஆபத்துக்கள் காத்திருக்கின்றன. துறைமுகம்சேர விரும்புகிற மனிதன் கணக்கில் வல்லவனுக இருக்கவேண்டியதாக இருக்கிறது. கணக்கில் நிபுணனுக இல்லாதவன் ஜயிக்க முடியாது. அவன் கப்பல் கடலிலே முழுகிவிடும் என்றுதான் தோன்றுகிறது. இதை எளிதாக்க முடியாதா? எளிதாக்கலாம், எளிதாக்கு. ஒரு நாளில் மூன்றுதரம் சாப்பிடுவதற்குப் பதில் அவசியமானுல் ஒரே வேளை சாப்பிடு. நூற்றுக்கணக்கான உணவுகளுக்குப் பதில், ஐந்துக்குமேல் சாப்பிடாதே. இதே அளவில் மற்ற எல்லாவற்றையும் குறை.

தேசமும் அதில் வாழும் பத்துலக்ஷம் குடும்பங்களும் உய்ய வேண்டும் என்ருல் மூன்று விஷயங்கள் உடனடியான தேவை என்று நான் சொல்வேன்; ஒரு அசைந்து கொடுக்காத பொருளாதாரக் கொள்கை; ஒரு பிடிவாதமான, (ஸ்பார்டன்) எளிமையான வாழ்க்கை வழி; லக்ஷியத்தில் ஒரு மேன்மையும் உயர்வும்—இந்த மூன்றும் இருந்தால்தான் எந்த சமூகமும் உருப்படும். தீவிர கதியில் வாழ முயலுவது தவறு. தேசம் என்ருல் அது பெரிதாக

வியாபாரம் செய்ய வேண்டும்; ஐஸ் ஏற்றுமதி செய்ய வேண்டும்; தந்தி மூலம் பேச வேண்டும்; மணிக்கு முப்பது மைல் வேகத்தில் பிரயாணம் செய்ய வேண்டும் என்று மனிதர்கள் எதிர்பார்க்கிறார்கள்; இது தான் அவசியம் என்று எண்ணுகிறார்கள். நாம் மனிதர்களாக வாழ வேண்டுமா, குரங்குகளாக வசிக்க வேண்டுமா என்பது பற்றி அவர்களில் பலருக்கும் ஒரு திடமான அபிப்பிராயமும் கிடையாது. வாழ்க்கையை உயர்த்துவது பற்றிக் கவலைப் பட்டுக் கொண்டு அதில் கவனம் செலுத்தத் தொடங்கி விட்டால், யார் ரெயில் தண்டவாளங்களைக் கவனிக்க முடியும்? இரவு பகல் ஓய்வில்லாமல் மனிதன் வேலை செய்தால் தானே ரெயில் ஓடும்? ரெயில் பாதைகள் இல் லாவிட்டால் குறித்த ஒரு காலத்துக்குள் மனிதனால் ஸ்வர்க் கத்துக்குப் போய்ச் சேர முடியுமா? வீட்டிலேயே தங்கி விடுவது, நம் காரியத்தைத் தவிர வேறு எதையும் பார்ப் பதில்லை என்று நாம் தீர்மானித்து விட்டால் ரெயில் வண்டிகளில் யார் போவார்கள்? நாம் ரெயிலில் போக வில்லை; இன்று ரெயில் பாதை தான் நம் மேல் ஓடுகிறது. பாதைக்கடியில் கட்டைகள் போட்டிருக்கிறார்கள்; அதெல்லாம் மரம் என்று நினைக்கிறீர்கள்? இல்லை ஐயா, இல்லை. அவ்வளவும் மனிதர்கள்! ஒவ்வொரு கட்டையும் ஒரு மனிதன்—அது ஐரிஷ்காரனே, யாங்கியோ, யார் கண்டது?

இவ்வளவு அவசர கதியிலும் விரயமாகவும் நாம் வாழ்க்கை நடத்துவானேன்? பசிக்கு முன்னரே பட்டினி கிடப்பது என்று நாம் தீர்மானித்து விடுகிறோமே, அது ஏன்? இன்று ஒரு தையல் நாளைக்கு ஒன்பது தையல் களுக்கு அவசியமில்லாது செய்துவிடும் என்று சொல் கிறார்கள். நாளைக்கு ஒன்பது தையல்களுக்கு அவசிய மில்லாதிருப்பதற்காக இன்று ஆயிரம் தையல்கள் போட்

டுக் கொண்டிருக்கிறார்கள் மனிதர்கள். வேலை என்பதைப் பற்றியோ, சொல்லவேண்டியதில்லை. பயன் தரக்கூடிய வேலை என்று எதுவும் நம்மிடம் கிடையாது. தலையையோ கைகளையோ கால்களையோ சும்மாவைத்திருக்கத் தெரியாத குற்றம், வேலை செய்வதாக, வியாதிக்காரன் மாதிரி, எதை எதையோ செய்கிறோம். தீப் பற்றிக் கொண்டது என்று ஆலயமணியை அடித்தோமானால் ஊர் பூராவும், ஆண் பெண் அடங்கலும், கூடிவிடும்; தீயை அணைக்க அல்ல; தீப்பற்றி எரிவதை வேடிக்கை பார்க்க! சாப் பிட்டுவிட்டுப்படுத்து அரை மணி தூங்கியவன் விழித் தெழும்போது "புதுசாக என்ன சேதி?" என்று கேட் டுக் கொண்டுதான் எழுந்திருக்கிறான். உலகம் பூரா வும் அவனைக் காப்பாற்றுவதற்காகக் காத்திருப்பதுபோல அவன் எண்ணிக் கொள்கிறான். சிலர் தூங்கும் போது தாங்கள் கண்ட கனவுகளை எல்லாம் சொல்லிப் பொழுது போக்குகிறார்கள். காலை உணவு எவ்வளவு தேவையோ அவ்வளவு தேவையாகிவிட்டன காலைச் செய்திகளும். காபி சாப்பிட்டுக் கொண்டே வாசிடோ ஆற்றின் கரை யிலே ஒருவன் கண்ணை யாரோ பிடுங்கிவிட்டார்கள் என்று வாசித்து அறிந்து கொள்கிறான். கண் என்று தனக்கிருப்பதும் ஒரு புண்தான்; அது கண்ணாகத் தன் னைப் பற்றிய வரையில் ஒரு விதத்திலும் பலன் தரவில்லை என்பதைப் பற்றி அவன் நினைத்துப் பார்ப்பதே யில்லை.

என்னைப் பற்றிய வரையில், இந்தத் தபாலாபீஸ்கூட இல்லாமல் என்றால் சுலபமாகக் காலந்தள்ள முடியும். அதன் மூலம் அப்படி யொன்றும் முக்கியமான விஷயங் கள் அனுப்பப்படுகின்றன என்று நான் எண்ணவில்லை. என் வாழ் நாளில் எனக்கு இரண்டொரு கடிதங்களுக்கு அதிகமாக எதுவும் தபாலாபீஸ் மூலம் வந்ததில்லை. விளை யாட்டாகச் சொல்கிற ஒரு வாக்கியத்தை வினையாகவே

செய்து விட்டது இந்த பென்னித் தபால். உன் சிந்தனை களைச் சொல்லு—ஒரு பென்னிக் காசு தருகிறேன் என்கிற விளையாட்டு வாக்கியம் பென்னித் தபாலால் உண்மையாகி விட்டது, செய்தித் தாளில் ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டிய செய்தி எதுவும் வெளிவந்ததாக எனக்கு ஞாப கம் இல்லை. யாரோ திருட்டுக் கொடுத்தான்; யாரோ கொல்லப்பட்டான்: யாரோ ஒரு விபத்தில் உயிரிழந் தான்: ஒரு வீடு எரிந்தது; ஒரு கப்பல் மூழ்கியது; ரெயில் ஒரு பசுமாட்டின் மேல் ஏறிவிட்டது; ஒரு பைத் தியக்கார நாய் அடிபட் டிறந்தது; இதைத் தவிர வேறு என்ன செய்தி இருக்கிறது, உதாரணமாக ஒன்றைப் பார்த்தால் போதாதோ? நாமே தேவையான அளவுக்கு நமக்கு வேண்டிய செய்திகளை உற்பத்தி செய்து கொண்டு விடலாமே! வேதாந்திக்கு செய்தி என்று சொல்லப்படுவ தெல்லாம் வம்புப் பேச்சு என்கிற உருவத்தில் தான் காட்சியளிக்கிறது, அதைத் தயார் செய்து கொடுக்கும் பத்திரிகாசிரியர்கள் கிழட்டு ஸ்திரீகள் தான். ஸ்பெயினி லிருந்தும் இங்கிலாந்திலிருந்தும் தான் அப்படி என்ன செய்திகள் வந்துவிடப் போகின்றன? இங்கிலாந்தி லிருந்து, சொல்லப்போனால், கடைசியாக வந்த அர்த்த முள்ள செய்தி 1649-ல் வந்தது தான்; அதற்குப் பிறகு ஒன்றும் பிரமாதமாக வந்துவிட வில்லை. உலகில் எங்கு தான் எது தான் புதுசு என்று சொல்லும்படியாக நடந்து விடுகிறது? பிரெஞ்சுப் புரட்சியையும் சேர்த்தே தான் நான் சொல்கிறேன்—புதுசாக என்ன நடந்து விடு கிறது?

புதிய செய்தி என்ன என்று கேட்டுக் காலத்தை வீணுக்குவதைவிட அழியாத விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள முயலுவது எவ்வளவு முக்கியமான விஷயம்? க்யு ஹி யூ என்பவர் கியாங் ஸூவுக்கு

அவர் செய்திகளை யெல்லாம் அறிந்து வர ஒரு தூதனை அனுப்பினுர். கியாங் ஸூ வந்த தூதனைத் தன் பக்கத்தில் உட்காரவைத்துக் கொண்டு, உன் யசமானன் இப்போது என்ன செய்து கொண்டிருக்கிருர், என்று கேட்டார். தூதன் மரியாதையாக வணங்கிப் பதில் சொன்னுன்: "என் யசமானர் தன் குற்றங் குறைகளைக் குறைத்துக் கொள்ள முயன்று கொண்டிருக்கிருர். ஆனுல் அவர் குற்றங் குறைகள் முடிவுருதவையாக இருக்கின்றன" என்ருன் தூதன். சபையில் இருந்த தத்துவ ஞானி தூதன் போனபின் சொன்னுன்: "நல்ல தூதன்—தகுதியான தூதன்" என்று. ஞாயிறு என்று ஒரு ஓய்வு நாள் கொண்டாடுகிருேமே; அது வீணுக்கிய ஒரு வாரத்தின் இறுதி நாள் என்று எனக்குத் தோன்றுகிறதே தவிர, புதிய தைரியமான செயலாற்றும் சக்தியுள்ள புது வாரத்தின் முதல் நாள் என்று எனக்குத் தோன்றவில்லை; அந்த ஞாயிற்றுக்கிழமை யன்று வேறு ஏதேதோ சொல்வதற்குப் பதில் ஒவ்வொரு மத குருவும் கூடியிருப்பவர்கள் காது கிழியப் பின்வருமாறு கத்திஞராஞல் போதும் என்று எனக்குத் தோன்றுகிறது: "தாமதியுங்கள்! நில்லுங்கள்! சிந்தியுங்கள்! அவசரப்படுவதேன்? உண்மையில் இவ்வளவு மெதுவாகப் போவதேன்?" என்று கூடியுள்ளவர்களைக் கேட்டால் போதும்.

பொய்த் தோற்றங்களும், கண்கட்டு வித்தைகளும் உண்மைக்குப் பதிலாக மனிதனின் மனத்தை மயக்குகின்றன. அவற்றை உண்மையென்றே நம்பி வாழ்கிருர்கள் பலரும். உண்மை என்பது அதிசயமானது—கற்பனைக்கும் எட்டாதது. ஏமாருமல், உண்மையைத் தவிர வேறு எதையும் பின்பற்றுவதில்லை என்று மனிதர்கள் தீர்மானித்து விட்டார்களாஞல் வாழ்க்கையே அரபிக் கதைகளில் ஒன்றைப்போல ஆகிவிடும். தவிர்க்கமுடியாத

தையும், இருப்பதற்கு உரிமை யுள்ளதையும் தவிர வேறு எதையும் மதிப்பதில்லை என்று மனிதன் தீர்மானித்து அத் தீர்மானத்தின்படி வாழவும் தொடங்கி விட்டானுல் இசையும் கவிதையும் தெருவெல்லாம் முழங்கும். அவசரப்படாமலும், அறிவுள்ளவர்களாகவும் நாம் இருக்கும் போது மேன்மையான தகுதியான விஷயங்கள்தான் நிரந்தரமானவை, நீடிப்பவை, தனியாக இயங்கக் கூடியவை என்பதை உணருகிறேம். அல்ப பயங்களும் அல்ப சுகங்களும் உண்மையின் நிழல்களே தவிர வேறு அல்ல என்று உணருகிறேம். இந்தச் சிந்தனை உத்ஸாகம் தருவது; மனிதனை மேன்மையுறச் செய்யக் கூடியது. கண்களை மூடிக் கொண்டு உறங்குகிற பாவனையில் ஏமாளிகளாக இருக்கச் சம்மதிக்கிறுர்கள் மனிதர்கள்; உண்மை யல்லாததை உண்மையானவையாக ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறுர்கள். தினசரி பழக்க வழக்கங்களையும் அலுவல் முறைகளையும் பொய்களையே ஆதாரமாகக் கொண்டு அமைத்துக் கொள்ள அவர்கள் தயாராக இருக்கிறுர்கள். அஸ்திவாரம் ஏமாற்றத்தில் விழுந்திருக்கும்போது, எப்படி நிலைத்து நிற்கமுடியும் எழுப்புகிற கட்டிடம்? வாழ்க்கை நியதிகளின் தர்ம நியாயங்கள் குழந்தைகள் விளையாடும் போது அவர்களுக்குத் தெரிகிற அளவுக்குக் கூடப் பெரியவர்களுக்குத் தெரிவதில்லை. அனுபவம் தங்களுக்கு அறிவைக் கொடுத்து விட்டதாக அறிவில்லாதவர்கள் எண்ணுகிறுர்கள். அனுபவம் என்றுல் இவர்கள் அகராதியில் தோல்விகள் என்றுதான் அர்த்தம். நான் படித்த ஒரு ஹிந்துக் கதை எனக்கு இங்கு ஞாபகம் வருகிறது; "ஒரு ராஜாவின் பிள்ளை இருந்தான். அவனை இளவயதிலேயே நாடு கடத்தி விட்டார்கள். ஒரு காட்டில் ஒரு வேடனுல் வளர்க்கப்பட்டு அவன் பெரியவனுனன், தாழ்மையான குலத்தவர்களான அந்த வேடர்களில் தானும் ஒருவன்

என்றுதான் அவன் நினைத்திருந்தான். ஒருநாள் அந்த ராஜ குமாரனின் தகப்பனுரின் மந்திரிகளில் ஒருவன் நடந்த விஷயத்தை அவனுக்குச் சொன்னுன். அன்றுமுதல் ராஜ குமாரன் வேடன் அல்ல—மீண்டும் ராஜகுமாரனுகி விட்டான்" என்று கதை முடிகிறது, அதைத் தொடர்ந்து தத்துவாசிரியர் போதிக்கிருர்: "அதேபோல மனிதனின் ஆத்மா சந்தர்ப்பச் சூழ்நிலையின் விசேஷத்தால்தான் இன்னுனென்று உண்மை நிலையை அறியாமல் இருக்கிறது. குருநாதன்மூலம் உண்மையை அறிந்ததும், தான் பிரஹ்மாதான் என்கிற அறிவைப் பெறுகிறது அந்த ஆத்மா." ந்யூ இங்கிலாந்துப் பிரதேசத்தில் வசிக்கும் நாம் இப்படி அர்த்தமற்ற மட்டமான வாழ்வு வாழ்வதற்குக் காரணம், நம் பார்வை மேலெழுந்தவாரியான விஷயங்களைத் தாண்டிப் போவதில்லை என்பதுதான். கூர்மையான நோக்கு இல்லாதவர்களாகி விட்டோம் நாம் எல்லோரும். இருப்பதுபோல உள்ளது எல்லாம் உண்மையிலேயே இருப்பதுதான் என்று நாம் முடிவு செய்துவிடுகிறோம். ஒரு பேச்சுக்கூடம், ஒரு கச்சேரி, ஒரு சிறை, ஒரு வீடு, இவைகளில்ஏதாவதொன்றைப்பற்றி உண்மையானநோக்குடன் உள்ளதைச் சொல்லிவிட்டால், அதெல்லாமே உதிர்ந்து பொடியாகிவிடும் நீ சொல்வதிலேயே. உண்மை என்பது தூரதேசத்திலுள்ளது. வானத்து கிருஹங்களுக்கெல்லாம் அப்பாலுள்ளது என்று மனிதர்கள் எண்ணுகிருர்கள்; ஆதாமுக்கு முந்தியது, கடைசி மனிதனுக்குப் பிந்தியது என்று எண்ணிவிடுகிருர்கள். நித்யம் என்பதில் உண்மையானதும் அமானுஷ்யமானதும் உண்மையில் இருக்கத்தான் இருக்கிறது. ஆனுல் இந்தக் காலம் தேசம் வர்த்தமானம் எல்லாமே இங்கு இப்போது உள்ளவைதான். கடவுள் பூர்த்திபெறுவது என்பது ஒவ்வொரு இந்த நிமிஷத்திலும் தானே! காலம் சென்றதற்காக கடவுளின்

பெருமை கூடப் போகிறதா என்ன? மேன்மையானது, மஹிமை பொருந்தியது எல்லாவற்றையுமே நாம் இடைவிடாமல் முயற்சி செய்து இன்றைய உண்மைகளைக் கண்டுகொண்டு, நம்மைச் சூழ்ந்துள்ள உண்மைகளில் மூழ்கிக் குளிப்பதனுல்தான் கண்டுகொள்ள முடியும். நம் சிந்தனைக்கும் கற்பனைக்கும் எப்பொழுதும், பணிவுடன், ஈடுகொடுக்கிறது இப் பிரபஞ்சம்—அவற்றை மீறிவிடுவதில்லை. நாம் வேகமாகப் போகிறோமோ, மெதுவாக நகருகிறோமோ, நம் வழி நமக்காகத் தயாராக இருக்கிறது. சிந்திப்பதில் வாழ்க்கையைச் செலவிடுவோம்.

இயற்கையே போல நாம் வேண்டுமென்றே ஒருநாள் சிந்தனையுடன் கூடிய நிதானமான வாழ்க்கை நடத்துவோம். ஏதோ ஓடு விழுந்தது, கொசு பாடிற்று என்பதற்காக நாம் நம் சிந்தனை உயர்விலிருந்து நழுவிவிட வேண்டிய அவசியமில்லை, காலையில் எழுந்து, பட்டினி கிடப்பதையோ சாப்பிடுவதையோ அவசரப்படாமல் நிதானமாகச் செய்வோம். கவலைக்கிடமே கொடாமல் இருப்போம். யார் வந்தாலென்ன, யார் போனுலென்ன; மணிகள் அடிக்கட்டும், குழந்தைகள் கூக்குரலிடட்டும். நாம் நிதானம் தவருதிருப்போம். இந்த நாள் வீணுகாமல் பார்த்துக் கொள்கிற திடசங்கல்பத்துடன் இருப்போம். மணி அடிக்கிறதா? அடிக்கட்டும். என்ஜின் ஊதுகிறதா? ஊதட்டும். எதற்காக எங்கே நாம் ஓடவேண்டும்? அபிப்பிராயம் என்கிற சேரு, வழக்கம் என்கிற அசுசி, மரபு என்கிற ஏமாற்று, தோற்றம் என்கிற பொய், என்பதையெல்லாம் மறந்துவிட்டு நின்ற நிலை தவருதிருப்போம். காலை உதைந்து கொண்டு அசைய மறுப்பதில் எதுவும் தவறில்லை, பாரிஸ், லண்டன், ந்யூயார்க், போஸ்டன், கான்கார்டு எல்லாவற்றிற்கும் பொதுவாக உள்ளது இந்தச் சேரும் சகதியும்: மதஸ்தாபனங்களும் அரசியல் ஸ்தாபனங்

களும் உண்மையை மனிதனிடமிருந்து மறைத்து வைக்கவே முயலுகின்றன. கவியென்றும், தத்துவ தரிசனம் என்றும், மதம் என்று வந்துள்ள தளைகளை அறுத்தெறிந்துவிட்டு, அடிப்படையான நமக்குத் தெரிகிற ஒரு உண்மையைக் கெட்டியாகப் பற்றிக்கொள்வோம்; அங்கிருந்து தொடங்கி அஸ்திவாரம் போடலாம். அந்த அஸ்திவாரத்தின்மேல் ஒரு சுவர் எழுப்பலாம்; ஒரு தேசத்தையே நிர்மாணிக்கலாம்; உண்மையை அளப்பதற்கு ஒரு கருவியைக் கண்டுபிடித்து அதை நிலைநிறுத்தலாம்; எவ்வளவு ஆழத்துக்கு மனிதர் வாழ்க்கையிலே பொய் என்கிற புழுதி, ஏமாற்று என்கிற சேறு படிந்திருக்கிறது என்பதை அளக்க முயலலாம். உயிர் வாழ்வதானாலும் சாவதானாலும், உண்மையைக் கண்டுகொண்டு விட்டால் போதுமானது.

காலம் என்பது ஒரு ஆறு. அதிலே மீன் பிடிக்கப் போகிறவன் நான். நான் ஆற்று நீரைக் குடிக்கிறேன். குனிந்து அள்ளி நீரைப் பருகும்போது ஆற்றுக் கடியில் உள்ள வெண்மணல் என் கண்ணில் படுகிறது. ஆறு ஆழமில்லாதது என்று காண்கிறேன். அதன் மேலோட்டம் பாய்ந்தோடிவிடுகிறது. ஆனால் நித்யம் என்பது எல்லையற்றதாக என்றும் இருக்கிறது. நான் இன்னும் ஆழ்ந்து நீர் குடிக்க விரும்புகிறேன். வானம் எனும் கடலிலே, நக்ஷத்திரங்கள் எனும் கூழாங்கற்கள் நிறைந்த கடலிலே, மீன் பிடிக்க விரும்புகிறேன். எனக்கு ஒன்று என்கிற எண் தெரியாது—'அ' என்கிற அக்ஷரம் தெரியாது. நான் பிறந்த அன்று எனக்கிருந்த விவேகம் இன்று எனக்கு இல்லையே என்று அளவற்ற துக்கத்தால் ஏக்கத்தால் பீடிக்கப்பட்டவன் நான். நுண் அறிவு என்பது ஒரு வெட்டரிவாள். அது விஷயங்களை வெட்டிக் கொண்டு, பிளந்துகொண்டு, உண்மையை எட்டிப்பிடிக்க முயலு

கிறது, அவசியமானதற்கு அதிகமாக நான் என் கைகளால் வேலை செய்ய விரும்பவில்லை. என் சுபாவ உணர்ச்சி நான் என் தலையால், சில மிருகங்கள் மூக்கையும் முன்னங்கால் களையும் உபயோகிப்பது போல உபயோகித்து, மண்ணைக் குடைந்து கொண்டு செல்லவேண்டும் என்று சொல்கி றது. இந்தக் குன்றுகளினூடே தலையால் முட்டி ஒரு வழி பண்ணிக்கொண்டு அப்பால் செல்லவேண்டும் என்று என் சுபாவ உணர்ச்சி என்னைத் தூண்டுகிறது. மிகவும் சிறந்த மதிப்புள்ள சுரங்கம் இங்கேதான் எங்கேயோ இருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது. இப்படித்தான் எனக்கு அனுசரணையாக ஜோசியம் கூறுவதுபோல, இயற்கைச் சின்னங்களும் கூறுகின்றன. இங்கே நான் தோண்டிப் பார்க்கிறேன்.

## வாசிப்பு

மனிதர்கள் சற்று நிதானித்து யோசித்து எத்தொழிலைத் தொடர்ந்து செய்வது என்று தீர்மானிக்க முயன்றார்களா னால் எல்லோருமே மாணவர்களாகவும் ஆராய்ச்சியாளர் களாகவும் ஆகத்தான் முயலுவார்கள் என்று எண்ணு கிறேன். இது முழுவதும் உண்மையாக இல்லாவிட் டால், முக்ய அம்சங்களில் உண்மை என்று தான் சொல்லவேண்டும். மாணவர்கள், ஆராய்ச்சியாளர்களின் சுபாவமும், முடிவும் எல்லோருக்குமே சுவாரசியமான விஷயங்கள் தான். நமக்காகவோ நம் சந்ததியாருக்காகவோ பொருள் சேர்ப்பதிலும், ஒரு குடும்பத்தையோ அல்லது ஒரு ராஜ்யத்தையோ ஸ்தாபிப்பதிலும், புகழ் சம்பாதிப் பதிலும், நாம் சாகக் கூடிய மனிதர்களாக விளங்குகிறோம். உண்மையோடு உறவாடுகிற ஒரு விஷயத்தில் மட்டும்

நான் நாம் நித்தியமானவர்களாக, அழிவுக்கு பயப்பட வேண்டிய அவசியம் இல்லாதவர்களாக இருக்கிறோம். மாறுதலோ, தவறுதலாக ஏற்படுகிற எந்த சம்பவமோ நம்மை அழித்துவிடாது, உண்மையை நாடி நாம் செய்கிற காரியங்களில். பண்டைக் காலத்தைச் சேர்ந்த ஒரு தத்துவஞானி, அவன் எகிப்தியனோ, ஹிந்துவோ, உண்மை என்னும் தெய்விகச் சிலையை மறைத்திருக்கும் திரையின் ஒரு மூலையை எடுத்துப் பார்த்தான். திரை அந்த மூலையில் இன்னும் தூக்கியபடியே தான் இருக்கிறது. உண்மையின் உருவத்தை அவன் அன்று கண்ட பெருமிதத்துடனேயே நான் இன்றும் காண்கிறேன். அவன் தைரியமாகத் திரையைத் தூக்கிப்பார்த்தபோது அவனுள் நின்று பார்த்ததும் நான் தான். இன்று என்னுள் நின்று அதே உண்மையை மீண்டும் பார்ப்பவனும் அவனே தான். அந்தத் திரைமேல் புழுதி எதுவும் படியவில்லை; அன்றிருந்த மாதிரியே இன்றும் புதிதாகத்தான் இருக்கிறது அது. உண்மை என்கிற உருவத்தின் ஒரு கோடி தெரிய வந்ததற்கும் இதற்கும் இடையிலே காலம் என்பதே ஸ்தம்பித்து நின்றுவிட்ட மாதிரித்தான். செம்மையாக்கப்படக் கூடிய காலமும், செம்மையாக்கப்பட்ட காலமும் நித்யமானது, ஸ்திரமானது. சென்ற காலம், நிகழ் காலம், வருங்காலம் எல்லாம் இதைப் பற்றிய வரையில் ஒன்று தான். அந்த பேதங்கள் உண்மையைக் கண்ட காலங்களை மாற்ற முடியாது.

ஒரு சர்வகலாசாலைக் கட்டிடத்தையும்விட நான் வாழ்ந்த இடம் சிந்திப்பதற்கு மட்டும் இன்றி, ஆழ்ந்து படிப்பதற்கும் ஏற்ற இடமாக இருந்தது, என்றால் சாதாரண வாசகசாலை எதிலிருந்தும் புஸ்தகங்கள் வாங்கி வர முடியாது. ஆனால் நான் உலகத்தின் மிகப் பழைய நூல்களின் மாய சக்தியின் வலையிலே விழுந்திருந்தேன். உல

கம் பூராவும் சுற்றி வரும் நூல்கள் இவை. இந்த நூல்களின் வாக்கியங்கள் ஆதிகாலத்தில் மரப்பட்டைகளில் எழுதப்பட்டவை. கவி மீர் கமாருதீன் மஸ்த் சொல்லுகிறார்: "நான் ஓரிடத்தில் உட்கார்ந்தபடியே, ஆத்மீகம் அறிவு என்கிற பிரபஞ்சம் பூராவையும் ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு வந்தேன். இது சாத்தியமானது புஸ்தகங்களினால் தான். ஒரு கிண்ணம் மது வருந்தி நான் போதையடைந்திருக்கிறேன்; அது சாத்தியமானது பரம ரகசியமான கொள்கைகள் என்று வழங்கப்படும் சித்தாந்த மதுவை அருந்தியதனால்." என் மேஜைமேல் கோடை நாட்கள் பூராவும் ஹோமரின் இலியத் காவியம் கிடந்தது. அதைப் பிரித்து எப்பவாவது ஒரு தரம் தான் பார்ப்பேன். முதலில் என் கைகளாலேயே செய்ய வேண்டிய வேலைகள் ஏராளமாக இருந்தன; வீட்டைக் கட்டி முடிக்க வேண்டியிருந்தது; பீன்ஸ் விதைக்க வயலைச் சமன்படுத்த வேண்டியிருந்தது. இதற்கு மத்தியில் படிப்பதென்பது சாத்தியமாக இல்லை. பின்னால் படிக்கலாம் என்கிற நம்பிக்கையிலேயே நான் பொழுதைப் போக்கினேன். சில மேலெழுந்தவாரியான பிரயாண நூல்களைப் படித்தேன். வேலைக்கு இடையே, அவற்றைப் படித்தது பற்றி எனக்கே வெட்கமாக இருந்தது. நான் வசித்த இடத்தை ஞாபகப்படுத்திக் கொண்டு அவற்றைப் படிப்பதை நிறுத்திக் கொண்டேன்.

ஹோமரையும், ஏஷ்கிலஸையும் மூல கிரேக்க பாஷையில் மாணவன் படிக்கலாம். அதில் வீண் பொழுது போக்கு அல்லது ஆடம்பரம் என்கிற பயம் சிறிதும் தோன்ற வேண்டிய அவசியமேயில்லை. அந்த நூல்களின் வீரர்களை அவனும் பின் பற்றுகிறான் என்று தான் அர்த்தம் அதற்கு. காலை நேரத்தில் ஒரு பகுதியை அதற்கென்று செலவிட வேண்டும் அவன். வீர காவிய நூல்கள், நம்

முடைய தாய் பாஷையிலேயே மொழி பெயர்க்கப்பட்டிருந்தாலும் கூட, இந்தச் சீர்கேடான நாட்களுக்குச் செத்த பாஷையான ஒரு பாஷையில் தான் இருக்க முடியும், மிகவும் சிரமப்பட்டுத் தான் அர்த்த பாவங்களை நாம் புரிந்து கொள்ளமுடியும். ஒவ்வொரு வரியும் வார்த்தையும் சுலபமான மேலெழுந்தவாரியான ஒரு அர்த்தமும், ஆழத்தில் வேறு ஒரு அர்த்தமும் தரும்; இந்த இரண்டு அர்த்தங்களையும் தேடிக் கண்டு கொள்வது அவசியம். இப்படி ஆழமான அர்த்தத்தைக் காண்பதற்கு நம்முள் உள்ள ஞானம், தயை எல்லாம் பயன்பட்டாகவேண்டும். இன்றைய சின்னமான மலிவுப் பிரசுரங்கள், ஒய்வு ஒழிச்சல் இல்லாத புஸ்தக வெளியீடுகள் எல்லாம், ஏதோ கொஞ்சம் மொழி பெயர்த்திருக்கின்றன என்றாலும் பண்டைக் கால வீர காவிய எழுத்தாளர்களைப் புரிந்து கொள்வதற்கான வழிகளை நமக்குக் கற்றுத் தரவில்லை. அந்த ஆசிரியர்கள் இன்னமும் நம்மிடமிருந்து அதே தூரத்தில் தான் இருக்கிறார்கள். முன் போலவே அவர்கள் தனிமையில் இருப்பவர்களாகத்தான் இருக்கிறார்கள். அவர்களின் நூல்கள் அச்சாகி யிருப்பதும் கூட ஒரு பண்டைய வேடிக்கையான அச்செழுத்துக்களில் தான் என்று சொல்வது மிகையே யாகாது. வாலிபப் பருவத்தின் நாட்களையும் விலை யுயர்ந்த பொழுதுகளையும் செலவிட்டு, பண்டைய பாஷை ஒன்றில் சில வார்த்தைகளையாவது கற்றுக்கொள்வது மிகவும் லாபகரமான விஷயம். இன்றையத் தெருக்களின் அல்பத்தனத்திலிருந்து மனிதனை உயர்த்துவதற்கு உன்னதமான ஒரு பாஷையின் சில வார்த்தைகளே கூடச் சில சமயம் போதுமானதாக இருக்கும். அந்த வார்த்தைகளில் தான் எவ்வளவு தூண்டுதலும் அர்த்தபாவமும், அழியாத வேகமும் இருக்கின்றன? தான் கேள்விப்பட்ட ஒரு சில லத்தீன் வார்த்தைகளை ஞாபகம்

வைத்துக் கொண்டு குடியானவன் திரும்பிச் சொல்வ தென்பது வியர்த்தமான காரியம் அல்ல. மனிதன் பழைய நூல்களைப் படிப்பதை நிறுத்திவிட்டு நவ நவமான உப யோககரமான விஷயங்களைப் படிக்க ஆரம்பிக்க வேண் டும் என்று சிலர் இப்பொழுது சில சமயம் சொல்லுகிறார் கள். ஆனால் என்ன சொன்னாலும் வீரமுள்ள மாணவன் பழைய நூல்களையும் காவியங்களையும் படித்தனுவிப்பதை நிறுத்தவே மாட்டான். எந்த பாஷையில் எழுதப்பட்ட தானால் என்ன? எவ்வளவு பழமையானவை யானால் என்ன? பழைய நூல்கள் என்று சொல்லப்படுபவை, மனிதனின் மிக மேன்மையான சிந்தனைகளின் எழுத்துரு வமே தவிர வேறு என்ன? அழிந்துவிடாத தெய்வீகமான வார்த்தைகள் அவற்றில் அடங்கியுள. இன்றைய கேள்விக்கும் அவற்றில் விடை அடங்கியிருக்கிறது. டெல்பி, டோடோனா என்கிற கோயில் ஜோசியர்கள் கூட இவ்வளவு திருப்திகரமான பதில் தந்ததில்லை எந்தக் கேள் விக்கும். இயற்கை மிகவும் பழமையானது என்பதற்காக அதைப் படிப்பதையோ கவனிப்பதையோ நிறுத்திவிட முடியுமா என்ன? நன்றாக வாசிப்பது என்பது—அதாவது உண்மையான புஸ்தகங்களை, உண்மையான ஒரு உத்ஸா கத்துடன் படிப்பதென்பது—இன்று வழக்கிலுள்ள, மதிக் கப்படுகிற எல்லா அப்பியாசங்களையும் விடக் கடின மான ஒரு அப்பியாசம்; நேர்த்தியான, மேன்மையான, உன்னதமான அப்பியாசம் அது. விளையாட்டுகளி லும் பந்தயங்களிலும் ஜயிக்கிற பலசாலிகள் பயிற்சி பெறுவது போல, படிப்பதற்கும் ஒரு திட்டமான பயிற்சி வேண்டும். வாழ்க்கையில் பெரும் பகுதியை வாசிப் பது என்கிற முழுநோக்குடன், அதற்கென்று செல விட, ஒருவன் தயாராக இருக்கவேண்டும். நூல்களை எழுதுவதற்கு எவ்வளவு நிதானமும் பதட்டமின்மையும்

முயற்சியும் தேவையோ அவ்வளவு நிதானத்துடனும், பதட்டமில்லாமலும், முயற்சியுடனும் அந்த நூல்களைப் படிக்கவேண்டும். எந்தத் தேசத்து பாஷையில் அவை எழுதப்பட்டனவோ அந்தத் தேசத்துப் பாஷையைப் பேச அறிந்திருந்தாலும் கூடப் போதாது. ஏனென்றால் பேசுகிற பாஷைக்கும் எழுத்துப் பாஷைக்கும் இடையே நெடுந்தூரம் இருக்கிறது. காதால் கேட்கிற பாஷைக்கும், மனதால் வாசிக்கிற பாஷைக்கும் இடையே உள்ள தூரத்தை, வித்தியாசத்தை மனத்தில் வைக்க வேண்டியது மிகவும் அவசியம். பேசுகிற பாஷை சாதாரணமாக சுலபத்தில் மாறிவிடக் கூடியது. ஒரு குரல் அது; ஒரு நாக்கு அது; ஒரு குறுகிய பாஷை அது; மிருகங்கள் எழுப்புகிற குரல் போன்றது அது; நாம் அதை சுயப் பிரக்ஞையில்லாமல் தானாகவே நம் தாய்மார்களிடமிருந்து கற்றுக் கொண்டு விடுகிறோம். எழுதுகிற பாஷை என்பது இந்தப் பாஷையின் கனிவு. இதன் பூரண அனுபவ உருவம். முந்தியதைத் தாய் பாஷை என்று சொன்னால் இதைத் தகப்பன் பாஷை என்று சொல்லவேண்டும். தனிப்பட்ட, பொறுக்கி எடுக்கப்பட்ட ஒரு மொழி இது. காதால் மட்டும் கேட்டுவிட்டுக் கைவிட்டுவிடுகிற பாஷையல்ல. இதைப் புரிந்துகொண்டு கையாள நாம் மறு பிறப் பெடுத்துத்தான் ஆகவேண்டும். எத்தனையோ பேர் வழிகள் கிரேக்க பாஷையைப் பேசினார்கள்; நடுக் காலத்திலுங்கூடப் பலர் லத்தீன் பாஷையைப் பேசினார்கள். இவர்கள் எல்லோரும் கிரேக்க, லத்தீனில் எழுதப்பட்ட அற்புதமான நூல்களைப் படிக்க லாயக்கானவர்களாக இருந்தார்கள் என்று சொல்ல முடியாது. அவர்கள் அறிந்த கிரேக்க லத்தீன் பாஷைகளில் எழுதப்படவில்லை அந்த நூல்கள். இலக்கியத்தின் மிகச் சிறந்த பாஷைகளில் எழுதப்பட்டவை அவை. இந்த மனிதர்களைப் பற்றிய

வரையில் அதெல்லாம் அவ்வளவாக உபயோகப்படாத ஒரு குப்பை விஷயம்தான். அவர்கள் ஒரு மலிவான தாற்காலிக இலக்கியம் ஒன்றைக் கட்டிக்கொண்டு அழுதார்கள். அது போதுமானதாக இருந்தது அவர்களுக்கு. ஐரோப்பாவின் பல தேசங்களும் பல சிறு பாஷைகளுக்குத் தாயகமான பின்தான், இந்த பாஷைகளிலும் இலக்கியங்கள் என்று தோன்றத் தொடங்கிய பின்தான், ஆதி அறிவு மீண்டும் மனிதனுக்கு ஏற்பட்டது. எவ்வளவோ தூரத்தில் உள்ள பண்டைய சௌகரியங்களை அறிஞர்களால் ஓரளவு அறிந்துகொள்ள முடிந்தது. ரோமன், கிரேக்க கும்பல்களின் காதுகளில் விழுந்து அவர்கள் உள்ளத்தைத் தொடமுடியாதிருந்த இலக்கியங்கள் பல காலத்துக்குப் பிறகு அறிஞர்களால் வாசிக்கக் கூடியதாக ஆயிற்று. இன்னமும் சில அறிஞர்கள் மட்டுமே அதைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

நல்ல பிரசங்கியின் அற்புதமான வார்த்தைகளையும் வாக்கியங்களையும் நாம் பாராட்டலாம்; கேட்டு அதிசயிக்கலாம். அவை வானத்தை மறைத்துக்கொண்டு மிதக்கும் மேகங்கள் போன்றவைதான். மேன்மையான எழுதப்பட்ட வார்த்தைகளும் வாக்கியங்களும் மேகங்களுக்கு வெகு தூரத்துக்கப்பால் உள்ள நக்ஷத்திரங்களுக்கும் கிரஹங்களுக்கும் ஒப்பானவை. நக்ஷத்திரங்கள் அதோ இருக்கின்றன. வாசிக்கச் சக்தியுள்ளவன் அவற்றை வாசித்து அறிந்து கொள்ளக் கூடியதை எல்லாம் அறிந்து கொள்ளலாம். வானசாஸ்திரிகள் ஓயாமல் இடைவிடாமல் அவற்றைப் பார்த்து வியாக்கியானம் செய்துகொண்டே இருக்கிறார்கள், நமது தினசரி அல்பப் பேச்சுக்களைப் போலவும், அழிந்துவிடக் கூடிய மூச்சுகளைப் போலவும் அல்ல அவை. மேடைமேல் அழகான பேச்சு என்று சொல்வது எழுத்தில் அலங்காரமான அர்த்தமற்ற ஒரு

அணிக்குச் சரியானது; அதைப் படிக்கும்போது அதி லுள்ள ஆழமின்மை தெளிவாகவே தெரியவரும். பிரசங்கி என்பவன் எதிரில் நிற்கிற கும்பலினால் ஊக்கப்பட்டு, ஒரு நிமிஷத்து வேகத்தில் அனுபவத்தில் பேசி முடிக்கிறான். எழுதுகிறவனோ தன் மேலான வாழ்க்கையின் அடி ஆழத் திலிருந்து வரும் அனுபவத்தை வைத்து எழுதுகிறான்; ஒரு நிமிஷத்து வேகம்அல்ல அவனை ஊக்குவித்தது. பிரசங் கியை ஊக்குகிற சந்தர்ப்பமும் சமயமும் எழுதுகிறவனுக் குத் தொந்திரவாகத் தோன்றுமே தவிர உத்ஸாகமளிப்ப தாகத் தோன்றாது என்பது நிச்சயம். தன்காலத்திய மனி தனுக்கு மட்டும் என்று எழுதவில்லை எழுதுபவன்; எந் தக் காலத்தவனும் தன்னைப் படித்து, கவனித்து, தான் சொல்வதைப் புரிந்துகொள்ள வேண்டும் என்கிற எண் ணத்தாலே எழுதப்படுவதுதான் அந்த எழுத்துக்கள். மனித வர்க்கத்தின் அறிவு, இதயம் ஆகிய இரண்டுடனும் பேசுகின்றன, எந்தக் காலத்தவனும் படிக்கிறபடி படித் தால் நல்ல எழுத்தைப் புரிந்துகொள்ள முடியும்.

விலையுயர்ந்த பேழையில் வைத்துத் தான் போகும் போர்க்களங்களுக்கெல்லாம் இலியாத் காவியத்தை எடுத் துச் சென்றான் மஹா அலெக்ஸாண்டார் என்பதில் ஆச்ச ரியப்பட ஒன்றும் இல்லை. மனித சிந்தனையின் மிகச் சிறந்த சின்னம் என்று சொல்லக்கூடியது எழுதப்பட்ட வார்த் தைதான். மற்ற எல்லாவற்றையும்விட அது சிறந்தது என்பதில் சந்தேகம் இல்லை. ஏனென்றால் அது எந்த சம யத்திலும் நம்முடன் நெருங்கி உறவாடலாம்; அதே சம யத்தில் உலகில் எங்கும் பரவி வியாபிக்கலாம். வாழ்க் கைக்கு மிகவும் நெருங்கிய கலை அது. எழுதப்பட்ட ஒரு நூலை எந்தப் பாஷையில் வேண்டுமானாலும் மொழி பெயர்த்து வைத்துக் கொள்ளலாம். வாசிப்பது மட்டு மல்ல; மனிதன் வாழும் ஒவ்வொரு விநாடியும் அந்த

நூலில் உள்ள வார்த்தைகளை ஸ்மரித்துக் கொண்டிருக்க லாம். திரையிலோ, சலவைக் கல்லிலோ மட்டும் உருப் பெற்ற கலை அல்ல அது. வாழ்வு என்பதின் மூச்சிலேயே படிந்துவிட்ட விஷயம். பண்டைக்காலத்து மனிதன் ஒருவனின் சிந்தனையின் சின்னம் இன்றைய மனிதனின் பேச்சாகவும், பேச்சுக்கு ஆதாரமாகவும் மாறிவிடுகிறது. கிரேக்க இலக்கியங்களின் மிகச் சிறந்த நூல்கள் எல்லாம், இந்த இரண்டாயிரம் வருஷங்களில், ஒரு அற்புதமான ஆழமும் வர்ணமும் பெற்று இன்றைய மனிதனின் மனத்தை மயக்குகின்றன. அவர்களுடைய சிலைகளைப் போலவே இந்த இலக்கியங்களும் வருஷம் ஆக ஆக மெருகும் அழகும் ஏறித் திகழ்கின்றன. அவற்றைப் படித்து இன்றைய மனிதனும் அந்த அழகிலும் ஆழத்திலும் அமைதியிலும் பங்கு கொள்ளலாம். இன்றைய மனிதனை யும் காலத்தின் கறை படியாமல் அவை காப்பாற்ற முன் வருகின்றன, உலகத்தின் பத்திரப்படுத்திப் பாதுகாக்க வேண்டிய ஐசுவரியங்களில் ஒன்றாகும் புஸ்தகங்கள். தலை முறைகளுக்கும் தேசங்களுக்கும் ஏற்ற சொத்து அது; ஒருவர்பின் ஒருவராக அதற்கு நாம் வாரிசுகளாகிக் கொண்டு வருகிறோம். ஒவ்வொரு குடிசையிலும் அல மாரியின் தட்டுகளில் மிகச் சிறந்த மேன்மையான புஸ்த கங்கள் உரிமையுடன் இருக்கின்றன. அவற்றின் இடம் சுபாவத்தினால் ஏற்பட்டது; அந்த இடம் அவற்றிற்கு உரி யது. அவை தங்கள் கட்சி என்று சுயநலத்துடன் எதை யும் எடுத்துச் சொல்வதில்லை. வாசகனுக்கு அறிவூட்டுவதி லும், ஆதரவு கொடுப்பதிலும் புஸ்தகங்கள் முனைகின்றன. அந்த மட்டும் போது அறிவுள்ள எந்த வாசகனும் அவற்றை உபயோகிக்க மறுக்கமாட்டான் என்றுதான் சொல்லவேண்டும். எல்லா சமூகங்களிலுமே இந்தப் புஸ் தகங்களின் ஆசிரியர்களைத்தான் முதல் வரிசையில் இடம்

பெற வேண்டிய மேன்மக்கள் என்று சொல்லவேண்டும். அவர்களை எதிர்த்து யாரும் கிளர்ச்சி செய்து வீழ்த்திவிட முடியாது. சுபாவத்திலேயே மேன்மையடைந்து விட்ட மக்கள் அவர்கள். அரசர்களையும் சக்கரவர்த்திகளையும் விட அதிகமாகவே ஆசிரியர்கள் மனிதர்கள் மேல்ஆதிக்கம் செலுத்துகிறார்கள். எழுதப் படிக்க அறியாத, அலக்ஷிய புத்தி படைத்த வியாபாரி உழைத்து தைரியமாகக் காரியங்கள் செய்து பொருளீட்டி விடுகிறான். பிறகு பணம் பதவி இவற்றின் இருப்பிடமாகக் கருதப்படும் மக்களுக்கிடையில் அனுமதிக்கப்படுகிறான். அதற்கப்புறம் அவன் அதுவரை எட்டாத பகுதியான அறிவு மேதாவிலாசம் இவற்றைப் புஸ்தகங்கள் மூலம் தேடியடைய ஆவல்கொள்ளுகிறான். ஒரு புது அனுபவமே அவனுக்கு ஏற்பட்டு விடுகிறது. தன் பண்பு எவ்வளவு அபூர்த்தியானது என்று அறிகிறான், தன் பவிஷுகள் எல்லாம் வெறும் படாடோபம். போதுமானவையல்ல என்று உணருகிறான். அறிவு மேதா விலாசம் என்கிற பகுதிகளில் அவன் சுலபமாக நடமாடுகிறானே இல்லையோ, தன் குழந்தைகளுக்கு ஆரம்பமுதலே அந்தப் பகுதிகளில் நடமாடும் பாக்கியம் கிடைத்துவிடவேண்டும் என்று அதற்கான ஏற்பாடுகள் செய்கிறான். அவன் குடும்பம் என்று ஒன்று ஸ்தாபிதமாவது இப்படித்தானே!

பண்டைய நூல்களை அவை எழுதப்பட்ட பாஷைகளில் படிக்க அறியாத மனிதன் மனித குலத்தின் சரித்திரத்தைப் பூரணமாக அறிந்துகொள்ள ஆற்றலற்றவனாகி விடுகிறான் என்றுதான் சொல்லவேண்டும். ஏனென்றால் அவற்றின் தரமான மொழிபெயர்ப்பு என்று சொல்லும்படியாக இன்றைய மனிதர்களுக்கு இன்றைய பாஷைகளில் ஒன்றும் இல்லை. ஆனால் நமது நாகரிகமே அந்த நூல்களின் கொழுந்து

என்று வேண்டுமானல் சொல்லலாம். ஆங்கிலத்திலே ஹோமரும் இல்லை, ஆஷ்கிலஸூம் இல்லை, வர்ஜில் கூட இல்லை. உஷக் காலத்தைப்போலவே அழகும் அமைதியும் உள்ள நூல்கள் இவை. பின்னல் வந்தவர்கள் எவ்வளவுதான் மேதைகள் என்று சொல்லத் தக்கவர்களானாலும் பழையவர்களுக்கு ஈடான இலக்கியத்தைச் சிருஷ்டித்து விடவில்லை என்றுதான் சொல்லவேண்டும். எவ்வளவுதான் அறிவாளிகளானாலும், பின்னல் வந்தவர்கள் அவ்வளவு தீவிரமாகவோ ஆற்றலுடனே எழுதவில்லை.

அவர்கள் எழுத்தை அறியாதவர்கள்தான், அவர்களை மறந்து விடுவதுபற்றிப் பேச முடியும். அவர்களைப் படித்து அனுபவித்து ஆனந்திப்பதற்கு தெம்பும் அறிவும் ஆற்றலும் நமக்கு வந்துவிட்ட பிறகு அவர்களை மறப்பது பற்றி நாம் பேசலாம்—அதுவரை பேசுவதற்கில்லை. பழம்பெரும் நூல்கள் என்றும், மனித சிந்தனையின் சிகரம் சின்னம் என்றும் நாம் புகழ்கிற எழுத்துக்களும் அவற்றிற்கு உரிமையான ஸ்தானத்தை நம்மிடையே அடையும்போது தான் மனித குலத்துக்கு நல்லகாலம் பிறந்திருக்கிறது என்று சொல்லமுடியும். அந்தக் காலம் மிகவும் சிறந்த ஐசுவரியம் நிறைந்த காலம் என்று சொல்ல வேண்டும். பழைய நூல்கள் என்று சாதாரணமாகப் போற்றப்படுகிற நூல்களுடன், அதிகமாக நம்மிடையே இப்போது பழக்கத்திலில்லாத மற்ற ஜனங்களின் ஆதி கிரந்தங்களும் நம்மிடையே வந்து சேர்ந்துவிடுமானல் எவ்வளவோ சிறப்பாக இருக்கும். வாடிகன் வாசக சாலையில் வேதங்களும், ஜெண்டவஸ்தாவும், பைபிள்களும், ஹோமர்களும், டாண்டெக்களும், ஷேக்ஸ்பியர்களும் வந்து நிறையும்போது மனிதகுலம் உண்மையிலேயே ஐசுவரியம் உள்ளதாக மாறிவிடும். வரப்

போகிற நூற்றுண்டுகளில் இதுபோன்ற நூல்கள் பலவும் தோன்றி இவற்றுடன் சிறுகச் சிறுகச் சேர்ந்துவிடவேண்டும். இந்தச் சிந்தனை ஏணியைக் கொண்டு நாம் வானத்தையே எட்டிவிடலாம்—ஸ்வர்க்க பூமியையே அடைந்துவிடலாம்.

மஹா கவிகளின் காவியங்களை மனிதகுலம் இன்னும் சரிவரப் படிக்கவில்லை; ஏனென்றுல் இந்தக் காவியங்களைப் படித்து அனுபவிப்பவர்களும் மகா கவிகளாகத்தான் இருக்கவேண்டும். மனிதனுக்கு அவ்வளவு வளர்ச்சி இன்னும் ஏற்பட்டுவிடவில்லை. தூரத்திலிருந்து, ஜோசியத்தின் சாதனங்களாக நக்ஷத்திரங்களைப் பார்ப்பது போலத்தான் மனிதர்கள் இவற்றைப் பார்த்துக்கொண்டிருக்கிறுர்கள், வான சாஸ்திரம் படிப்பவர்கள் நக்ஷத்திரங்களைப் பார்ப்பதுபோலக் கூட மனிதர்கள் இவற்றைப் பார்க்க இன்னும் கற்றுக்கொண்டு விடவில்லை. ஏதோ அல்பமான செளகரியங்களையும் லாபங்களையும் உத்தேசித்தே மனிதர்கள் பழகக் கற்றுக்கொண்டிருக்கிறுர்களே தவிர வேறு உன்னதமான மேன்மையான விஷயங்களுக்காக அவர்கள் எழுதப் படிக்கக் கற்றுக்கொள்ளவில்லை. கணக்குப் போடவும், நஷ்டம் அடைந்துவிடாமல் புள்ளி விவரம் பார்க்கவும் மட்டும்தான் மனிதர்கள் கற்றுக் கொண்டிருக்கிறுர்கள், அறிவுக்கும் சிந்தனைக்கும் விருந்து பயிற்சி என்கிற அளவில் அவர்கள் இன்னும் படிக்கத் தொடங்கவேயில்லை, இப்படிப் படிப்பது ஒன்றுதான் படிப்பு என்கிற உத்தமமான பெயருக்கு லாயக்கான காரியம். மற்றதெல்லாம் உண்மையில் சொல்லப்போனுல் படிப்பே அல்ல, பொழுது போக்காகவும், தூக்கம் வருவதற்காகவும், படாடோபத்திற்காகவும் படிப்பதெல்லாம் படிப்பு ஆகாது. நல்ல குணங்களையும், அறிவுத் திறனையும் தூங்கப் பண்ணி

விடுகிற நூல்களையும் நூல்கள் என்று எண்ணிப்படிப்பது படிப்பில் சேர்ந்ததே யல்ல என்றுதான் சொல்லவேண்டும். பூரண விழிப்புடன், அளவு கடந்த உத்ஸாகத்துடன் எட்டி எட்டி மேலே மேலே என்று மேன்மை தரும்படித் தொடர்ந்து கொண்டு படிப்பதே படிப்பாகும்.

எழுத்துக்களைக் கற்றுக் கொண்டுவிட்டவுடனே இலக்கியத்தில் சிறந்தது என்று சொல்லப்படுவதை எல்லாம் நாம் படிக்கத் தொடங்கவேண்டும். திருப்பித் திருப்பி அ-ஆ-அஆ என்று சந்தை வைத்துக் கொண்டிருக்கக் கூடாது, ஆயுள் பூராவும் முதல் வகுப்பிலேயே படித்துக் கொண்டிருப்பது நல்லதல்ல, நாலு அக்ஷரங்களுக்கு அதிகமில்லாத வார்த்தைகளை உருவேற்றிக் கொண்டிருந்தால் முக்கியமான விஷயங்கள் பலவும் நமக்குத் தெரிய வருவதற்கே வழியில்லாது போய்விடும். பெரும்பாலான மனிதர்கள் தாங்களே படித்தோ, அல்லது பிறர் படிக்கக் கேட்டோ ஒரு புஸ்தகத்தைப் பற்றி மட்டும் தெரிந்து கொண்டு, அதன் கருத்துக்களால் தங்கள் மனம் மாறி விட்டால் போதும் என்று எண்ணுகிறார்கள்; பைபிள் ஒன்றும் மட்டும் தெரிந்தால் போதும்—மற்றப்படி வாசிப்பதை பொழுது போக்காக அதிக உரமில்லாததாகப் படித்தால் பாதகமில்லை என்று அவர்கள் எண்ணிவிடுகிறார்கள், சுலபமான நூல்களையே வாசிப்பதில் உழன்று அறிவுத் திறன்களை அதிகமாக உபயோகிக்காதவர்கள் தான் இன்று நம்மிடையே அதிகம். சுற்றுவாசக சாலையில் இங்கே 'கொஞ்ச வாசிப்பு என்று பல பாகங்களில் ஒரு நூல் இருக்கிறது—அது நான் போகாத ஊர் ஒன்றின் பெயர் எனறு நான் நினைக்கின்றேன். எல்லாவற்றையும் தின்று ஜெரித்துவிடும் சக்தி பெற்ற நெருப்புக் கோழிகளையும். நீர்க் காகங்களையும் போல பலர் எத்தனையோ விதமான நூல்

களைப்படித்து ஜெரிக்கவும் செய்து விடுகிருர்கள். அது அஜு வசியம் என்றே நான் நினைக்கிறேன். வயறு நிறைய மாம் சமும் காய் கறிகளையும் தின்றுவிட்ட பிறகும்கூடச் சிலர் நொருக்குத் தீனி தின்பதில் ஆசையுள்ளவர்களாக இருக் கிருர்கள். இந்த அசட்டுத் தீனியைச் சிலர் படைக்கிருர் கள்; சிலர் உண்ணுகிருர்கள். அதைப் பற்றி நாம் பெரி சாகச் சொல்ல ஒன்றுமில்லை. ஜெபுலானும் ஸோப்ராணி யாவும் காதல் செய்த விஷயம் பற்றி வந்துள்ள ஒன்பதிஞு யிரம் கதைகளையும் படித்துவிட்டு, மேலும் அதைப் பற்றிப் படிக்கத் தயாராக இருக்கிறவர்கள் உண்டு; அவர் கள் காதல் போல உலகில் வேறு காதல் கிடையாது என் றும், அவர்களுடைய காதல் பாதையும் கரடு முரடான தாகத்தான் இருந்தது என்பதையும் படித்து மகிழ்கிருர் கள், கோபுரத்தின் உச்சியிலே ஒருவன் ஏறிவிட்டான். அவன் எதற்காக அங்கு போகிருன்? பாதிவழி போயிருக்க வேண்டியதில்லை அவன். ஆனுல் அவனைக் கோபுரத்தின் உச்சியிலே கொண்டு போய் வைத்ததும் மணியை அடித்து ஊரைக் கூட்டி அவன் எப்படி இறங்குகிருன் பாருங்கள் என்று காட்டுகிருர் ஒரு ஆசிரியர். நாவலாசிரி யர்களின் கதா பாத்திரங்களாகத் திரும்பத் திரும்பக் காக்ஷி யளிக்கும் இந்த மனிதர்கள் கோபுரத்தின் உச்சியிலுள்ள ஒற்றைக்கால் கோழியாக மாறி அங்கேயே துருப்பிடித்துக் கொண்டு நிற்பதால் யாருக்கு என்ன நஷ்டம்? அவர்கள் மீண்டும் கீழே இறங்கி வந்து நாணயஸ்தர்களான அப் பாவி மனிதர்களின் கவனத்தைக் கவர முயற்சிப்பதனுல் தான் வினைகள் எல்லாம் விளைகின்றன. அடுத்த தடவை நாவலாசிரியன் மணியை அடிக்கும் போது நான் வீட்டை விட்டு அசையக்கூட மாட்டேன்—வீடு பற்றி எரிந்தா லும் கூட அசையமாட்டேன். இதெல்லாவற்றையும் வாசிப்பவர்கள் கண்கள் பிதுங்க, நிமிர்ந்து உட்கார்ந்து

கொண்டு, காட்டுமிராண்டாத் தனமான பெருமூச்சுகளுடன வாசித்து ரஸிக்கிருர்கள்; உம் கொட்டிக்கொண்டு, மேலே என்ன மேலே என்ன என்று அடங்காத ஆவலுடன், பேஷ் பேஷ் என்று முணு முணுத்துக் கொண்டே எல்லாவற்றையும் படித்துத் தீர்த்துவிடுகிருர்கள். நாலு வயதுப் பையன் முதல் தடவையாக சிண்டிரெல்லா கதையைப் படிக்கிற மாதிரித்தான் இதுவும். உச்சரிப்போ, வார்த்தைகளின் அர்த்தமோ, வாக்கியங்களின் அழகோ, கருத்தின் ஆழமோ வாசிப்பவனைத் தொடுவதில்லை; எட்டித் தொடச் சக்தியற்ற எழுத்து அது. ஆனல் அதினின்றும் கற்றுக்கொண்ட நல்லபாடம் என்று சுட்டிக் காட்டவும், எதுவும் இல்லை. இதனுல் விளைகிற பலன் என்ன என்ருல், கண் கெட்டு விடுகிறது; ரத்த ஓட்டம் தடைப்பட்டுப் போகிறது; பொதுவாக ஒரு அசட்டுக் கனிவு; எல்லாவற்றிற்கும் மேலாக அறிவுத்திறன்கள் எல்லாம் பயன்படாமல் குட்டிச்சுவராகித் தேங்கிவிடுகின்றன. நல்ல ரொட்டியோ, உணவோ தயாராவதைவிட அதிகமாக இந்தப் பொய் உணவு தயாராகி விற்பனையாகிறது இந்த நாட்களில்; விஷம் அல்ல இது, உண்மைதான். ஆனல் உயிர் வாழ நொருகு தீனிமட்டும் போதாது— போதாது!

நல்ல வாசகர்கள் என்று சொல்லப்படுகிறவர்களாலும் கூட மிகச்சிறந்த புஸ்தகங்கள் என்று சொல்லக்கூடியவை? படிக்கப்படுவதில்லை. நம்முடைய கான்கார்டு பண்பு என்பது எந்த அளவில் இருக்கிறது? எல்லோருமே படித்தனுபவித்து ஆனந்திக்கக் கூடிய இங்கிலீஷ் புஸ்தகங்களைக் கூடப் படிக்க இங்கே ஆட்கள் இல்லை. நல்ல புஸ்தகங்களைப் படிப்பவர்கள், சிறந்தவற்றைத் தேடுபவர்கள் மிகவும் குறைவு என்றும் சொல்லவேண்டுமோ. கல்லூரியில் படித்தும், பொதுவாகக் கல்வியறிவு

உள்ளவர்கள் என்று பெயர் பெற்றவர்கள்கூட, இங்கி லீஷ் பாஷையில் உள்ள பழம் பெரும் நூல்களைப் படித்தி ருக்க மாட்டார்கள். அப்படிப் படித்திருந்தாலும் அது ஓர ளவுக்கே இருக்கும். பழைய நூல்களுடன், உலகத்து வைபி ள்கள், ஞான நூல்கள் எல்லாம் படிப்பவருக்கு உதவக் காத்திருக்கின்றன; அவற்றைப் பற்றி நமக்குச் சிறி தும் தெரியாது. இங்கு மட்டுமல்ல. உலகில் எந்தப் பகு தியிலுமே மனிதகுலத்தின் ஞான நூல்களை அறிந்து கொள்ளச் செய்யப்படும் முயற்சிகள் மிகவும் பலஹீன மானவையாகத்தான் இருக்கின்றன. மரம் வெட்டுபவன் ஒருவனை எனக்குத் தெரியும்; நடுத்தர வயதினன் அவன். அவன் கனடாக்காரன்; தினசரி பிரெஞ்சுப் பேப்பர் வாங்கு கிறான். எதற்காகத் தெரியுமோ? செய்திகள் படிப்பதற் காக அல்ல: தெரிந்த வார்த்தைகளும் மறந்துவிடாமல் இருப்பதற்காகப் பேப்பர் வாங்கிப் படிப்பதாக அவன் சொல்லிக் கொள்கிறான். அவனை நான் கேட்டேன்; வாழ்க்கையில் அவன் அதிகமாக விரும்புகிற விஷயம் எது என்று. இன்னும் அதிகமாக இங்கிலீஷ் வார்த்தைகளைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்றுதான் ஆசைப்படுவ தாக அவன் சொன்னான். அதே நிலையில், அதே ஆசை யுடன்தான் வாழ்கிறார்கள் நம் கல்விமான்கள், நம் அறி வாளிகள். மரம் வெட்டி பிரெஞ்சு பேப்பர் வாங்கினான். நாம் இங்கிலீஷ் பேப்பர் வாங்குகிறோம். சிறந்த ஆங்கில இலக்கிய நூல் ஒன்றைப் படித்து முடித்துவிட்டு வருப வன் இன்று நம்மிடையே யாருடன் அதுபற்றித் தெளி வாகப் பேசமுடியும்? மூலத்தில் ஒரு கிரேக்க அல்லது லத்தீன் நூலைப் படித்துவிட்டு வருவதாக வைத்துக் கொள்வோம்; அந்த நூலின் பெயர் உலகம் பூராவும் தெரிந்ததுதான்; எழுத்தறிவில்லாதவனுக்கும்கூடத் தெரிந்த பெயர்தான்; அதுபற்றி அவனால் யாருடனும்

பேசமுடியாது என்பது நிச்சயம். அவன் எதுவும் சொல்லாமல் மௌனமாக இருக்க வேண்டியதுதான். நம் கல்லூரியில் உள்ள பேராசிரியர்களுக்குப் பாஷை தெரியலாம். அதிலுள்ள கடினமான பகுதிகளெல்லாம் அவர்களுக்கு தலைகீழ்ப்பாடம். ஆனால் கிரேக்க கவியின் நயம், ஹாஸ்யம், ஞானம், கவித்வம் இவற்றை அவர்கள் சரிவரப் படித்தனுபவித்து இருக்க மாட்டார்கள். அனுபவித்தவர்களிலும்கூடத் துடியான, வீரமுள்ள மாணவனுக்கு அந்த அறிவை அப்படியே புகட்ட வல்லவர்களாக இருக்க மாட்டார்கள். மத கிரந்தங்களையும், ஞான நூல்களையும், உலகத்து மக்களின் பைபிள்களையும் பற்றி இன்று ஒருவருக்கும் ஒன்றும் தெரியாது. அவற்றின் பெயர்கள்கூட இன்னும் நம்மிடையே பழக்கத்திற்கு வரவில்லை. ஹீப்ரேயர்களைத் தவிர வேறு எந்த ஜனங்களுக்காவது அநாதியான மத நூல்கள் பல இருந்தன என்பதுகூடப் பலருக்குத் தெரியவே தெரியாது. ஒரு மனிதன், எந்த மனிதனும், தெருவிலே எங்கேயோ, ஒரு வெள்ளி டாலர் நாணயம் கிடக்கிறது என்று தெரிந்தால் தேடிக் கொண்டு மைல் கணக்காக நடப்பான்; மணிக் கணக்காக நேரத்தை வீணாக்குவான். பொன் போன்ற வார்த்தைகள் இங்கு கிடக்கின்றனவே—அவற்றை எத்தனையோ ஆண்டுகளுக்குமுன் ஞானிகள் உதிர்த்தார்கள்—தலை முறை தலைமுறையாக மனிதன் அறிவு பூராவும் இதில் அடங்கிக் கிடக்கிறது என்று நற்சாக்ஷி கூறியிருக்கிறது—எனினும் இந்தப் பொன்னை நாடி யாரும் ஓடுவதில்லை. சுலபமாக வாசிக்கக் கூடிய, சுலபமாக மனசைவிட்டு அகற்றிவிடக் கூடிய எழுத்துக்களையே நாடி ஓடுகிறார்கள். சுலபமாக தங்கள், பாடபுஸ்தகங்கள், அரிச்சுவடி, பள்ளிக்கூடம் விட்டபின் "சிறு வாசிப்பு" (பல பாகங்கள்), கதைப் புஸ்தகங்கள் இவைதான் நாம் அறிந்த பேரிலக்கியம்.

நம் வாசிப்பு, நம் பேச்சு, நம் சிந்தனைகள் எல்லாமே இன்று மிகவும் மட்டமான தரத்தில், நிலையில் இருக்கின்றன.

கான்கார்டு பூமியில் உதித்த ஞானிகளைவிட அதிக அறிவு படைத்த ஞானிகளைச் சந்திக்கவே நான் விரும்பு கிறேன். அதுதான் என் பேராசை. இங்கு இன்னும் பெயர்கூட எட்டாத ஞானிகள் பலர் இருந்திருக்கிறார் கள். அவர்கள் நூல்களை யெல்லாம் வாசிக்க நான் ஆசை படுகிறேன். ப்ளேடோ என்கிற பெயரைக் கேள்விப்பட் டால் போதுமா? ப்ளேடோவைப் படிக்க வேண்டாமா? என் அண்டை வீட்டுக்காரனாக ப்ளேடோ இருந்திருந் தால், நான் அவனைப் பார்க்காதிருந்திருக்க முடியுமா? அவன் பேச்சைக் கேட்காமல் இருந்திருக்க முடியுமா? நிஜம் இதுதானே—ப்ளேடோவின் சம்பாஷணைகள் இதோ அலமாறித் தட்டில், கைக்கு எட்டுகிற தூரத்தில் இருக்கின்றன. அதைப் படிக்காமல் இருப்பதா? நமக்கு நல்ல பயிற்சியுமில்லை; உயர் வாழ்வுமில்லை: எழுத்து வாசனை அறிவு மோஹம் ஒன்றும் இல்லை. நாமும் வாழுகி றோம் என்று திருப்தியடைந்து விடுகிறோம். எழுத்து வாச னையே யில்லாதவனும் ஒன்றுதான்—படிக்கத் தெரிந்தும் மட்டமானதையும் குழந்தைகளுக்கானதையும் தவிர வேறு எதையும் படிக்காதவனும், என்னைப் பற்றிய வரை யில், ஒன்றுதான். பண்டைக் காலத்து அறிஞர்கள் மாதிரி அறிஞர்களாக நாம் எல்லோரும் இருக்க வேண்டும்; அதற்கு முதல் படி அவர்களுடைய அறிவு நூல்களை நன்கு அறிவதுதான். சின்ன மனிதர்கள் வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் நாம்; சுண்டெலிகளைப் போன்றவர்கள்; சிறு குருவிகளைப் போன்றவர்கள். நம்மால் உயரப் பறக்க முடியாது. நம் இலக்கியமும் வாசிப்பும் எல்லாம் தினசரிச் செய்தித் தாள்களைத் தாண்டிப் போவதேயில்லை.

நம்முடைய எல்லா நூல்களுமே அவற்றின் வாசகர்களைப் போல அசட்டுத்தனம் நிறைந்தவையாக இருந்துவிடுவதில்லை. ஆனால் நமது இன்றைய நிலைக்கு ஏற்ற வார்த்தைகளைச் சொல்பவர்களின் குரல் நம் காதில் சுலபத்தில் விழுந்துவிடவில்லை, தெளிவாகவும் விழுவதில்லை. புது நோக்குகளை நமக்குச் சிருஷ்டித்துத் தரக்கூடிய நூலாசிரியர்களை அறிந்து கொள்ள நமக்கு நாளாகிறது. எத்தனையோ மனிதர்களின் வாழ்விலே ஒரு குறிப்பிட்ட புஸ்தகத்தைப் படித்ததன் மூலம் ஒரு புரட்சியோ ஒரு புது யுகமோ பிறந்திருக்கிறது என்பதுதெளிவாகக் காணக்கிடக்கிற உண்மை. நமது அதிசயங்களையும் சிருஷ்டித்துத் தந்து நம்மை மயக்கிவிடக் கூடிய புஸ்தகம் இன்னும் நம் கண்ணில் படவில்லை என்பதனால், இல்லவே இல்லை என்று ஏற்பட்டு விடாது. இப்போது சொல்ல முடியாது நாம் தவிக்கிற விஷயங்களை யாராவது வெகு தெளிவாகச் சொல்லி யிருக்கலாம். பழசிலும் சரி, புதுசிலும் சரி, நம்மை இன்று வருத்தும் பிரச்னைகளுக்கும், புதிர்களுக்கும் சரியான விடை அளிக்கப்பட்டிருக்கலாம்; தேடிக் கண்டு கொள்ள வேண்டியதுதான் நம் பொறுப்பு. ஞானிகள் எல்லோரும் நம்முடைய சாதாரணப் பிரச்னைகள் எல்லாவற்றையும் முன்கூட்டியே அறிந்து உரியபடி அதற்கெல்லாம் பதில் அளித்திருக்கிறார்கள். மிகவும் சில்லரையான ஒரு பிரச்னை, ஒரு புதிர்கூட விட்டுப் போய்விடவில்லை என்றுதான் சொல்லவேண்டும். கான்கார்டு குடியானவனின் இன்றையத் தேவையைப் பூர்த்தி செய்யும்படியான சரியான வார்த்தையை பல்லாயிர வருஷங்களுக்கு முன் ஜொராஷ்டர் சொல்லியிருக்கிறார். ஒவ்வொரு ஞானியும் அவரவருக்கு எட்டிய அளவில், எட்டிய வார்த்தைகளில், வாழ்க்கைப் பிரச்னைகளையும் புதிர்களையும் விடுவித்துத்தர முயன்றிருக்கிறார்கள். கான்கார்டு பிரதேசத்தில்

தனியாகக் கூலிவேலை செய்யும் மனிதனின் அனுபவத்தைப் போன்ற ஒரு அனுபவம், ஆத்மீக அனுபவம், ஜொராஷ்டிரனுக்கும் ஏற்பட்டிருக்கிறது என்று தெரிகிறது. அந்த அனுபவம் எல்லோருக்குமே பொதுவானது என்று ஞானியானதால் அவர் அறிந்து சொல்ல முடிந்தது, என்ருல் முடியவில்லை, ஜொராஷ்டரில் அதைப்பற்றிப் படிக்கும் வரையில். ஞானம் பெற்றவனுக்குத் தளைகளும் தளர்ந்து விடுகின்றன. அவன் அந்த மதத்தவன், நான் இந்த மதத்தவன், என்கிற வித்தியாசங்கள் எல்லாம் தாமாகவே மறைந்து போய்விடுகின்றன. ஜொராஷ்டரில் தொடங்கி, ஏசுகிறிஸ்து வரையில் உள்ள ஞானிகளுடன் எல்லாம் பழகி, அறிவிலியும் அறிவுபெற முயற்சிப்பதில் தவறென்ன? நமது மதமும் மதத்தின் ஆலயமும் குறுகலான கொள்கைகளும் இதனுல் பாழாகிப் போனுல்தான் என்ன?

நாம் பத்தொன்பதாம் நூற்ருண்டைச் சேர்ந்தவர்கள் என்று எண்ணிப் பெருமைப்பட்டுக் கொள்கிருேம். மற்ற தேசங்களைவிட அதிதுரிதமாக முன்னேறிக் கொண்டிருக்கிருேம் என்று எண்ணிப் பெருமைப்பட்டுக் கொள்ளுகிருேம். இந்த கிராமம் தன் சொந்தப் பண்பு வளர்ச்சிக்கென்று என்ன செய்கிறது என்று கவனியுங்கள். தற்புகழ்ச்சியை விரும்பவுமில்லை நான்; பிறரை அனுவசியமாகப் பாராட்டவும் நான் தயாராக இல்லை. அதனுல் லாபம் ஒன்றும் யாருக்கும் இராது என்பது திண்ணம். நம்மை யாராவது தூண்டித்தான் விடவேண்டும்—அங்குசம் எடுத்துக் குத்தி விரட்டினுலும் கூடத் தேவலை என்று நான் சொல்வேன். மற்றவற்றுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது பாதகமில்லை என்று சொல்லும்படியான பொதுப் பள்ளிக்கூடம் இருக்கிறது—குழந்தைகளுக்கான பள்ளிக்கூடம் இருக்கிறது. மாரிக்காலத்தில் ஒரு 'லிசியம்'.

அது தவிர புதுசாகத் தொடங்கப் போகிற ஒரு அரசாங்க வாசகசாலை ; அவ்வளவுதான். நமக்கென்று ஒரு பள்ளிக்கூடமும் இங்கு கிடையாது. நாம் சாப்பிட்டது ஜரிப்பதற்கும், உடல் நிலை சரியாவதற்குப் பணம் செலவழிக்கவும் நாம் தயங்குவது கிடையாது. மன நிலை சரியாவதற்கு, அறிவு ஏற்பட்டு ஜரித்து நடமாடுவதற்கு எதுவும் செலவிட நாம் தயாராக இல்லை. மனிதர்களாக ஆண்களும் பெண்களுமாக நாம் பெரியவர்களான பிறகு நமக்குக் கல்வி கற்றுத் தருவதற்கு அசாதாரணமான பள்ளிக்கூடங்கள் பல வேண்டும் நமக்கு. கிராமங்களே சர்வ கலாசாலைகளாக மாறினுல்தான் நல்லது. கிராமவாசிகள் இந்தச் சர்வ கலாசாலைகளில் ஆராய்ச்சியாளர்களாகவும், பேராசிரியர்களாகவும், மாணவர்களாகவும் இருக்கவேண்டும். உபயோகமற்றது என்று பொதுவாகக் கருதப்படும் கல்வித் துறைகளில் ஆயுள்பூராவும் ஈடுபடுவதற்கு ஓய்வுள்ளவர்கள் அதிருஷ்டசாலிகள். அப்படிப்பட்டவர்கள் ஏராளமாக நம்மிடையே தோன்றவேண்டும். உலகம் பூராவுக்குமாக ஒரு பாரிஸ், ஒரு ஆக்ஸ்போர்டு போதுமா ? கான்கார்டு வானத்துக் கடியிலே கல்வி கற்பிப்பது என்பது அவ்வளவு கடினமான காரியமா என்ன? நமக்குக் கற்பிக்க ஒரு அபெலார்டு அகப்படாமல் போய்விடுவானு ? மாட்டுக்குத் தீனி, கடையில் வியாபாரம், மனிதனுக்கு உணவு என்கிற காரியங்களில் ஈடுபட்டவர்களாக நாம் கல்வித் துறையை அதிககாலம் அலக்ஷியம் செய்துவிட்டோம். நமது கல்வி முயற்சி வெகுவாகப் பின்தங்கிவிட்டது. இந்த தேசத்தில் கிராமங்கள், அந்த நாட்களில் ஐரோப்பாவில் பிரபுக்கள் செய்துவந்த காரியத்தைக் கல்விபற்றியவரையில் செய்யத் தொடங்கவேண்டும். நுண்கலைகளுக் கெல்லாம் மூலாதாரமாகக் கிராமங்கள் அமையவேண்டும். ஐசுவரியம்

இருக்கிறது ஏராளமாக. தாராள சிந்தையும், நேர்த்தியான ஒரு மனோபாவமும்தான் தேவை. வயல் வெளி என்றும், வீடு பண்ணை என்றும், ஏற்றுமதி இறக்குமதி என்னும், வியாபாரம் முதல் என்றும் ஏராளமான பணம் இங்கு செலவாகவில்லையா என்ன? கல்விக்குச் செலவிடுவது மட்டும் ஏதோ வியர்த்தமான காரியம் என்று ஏன் எல்லோரும் நினைக்கவேண்டும்? கல்விக்குச் செலவிடுவது மற்றெல்லாச் செலவுகளையும்விட லாபகரமானது என்று அறிவுள்ளவர்கள் எல்லோருக்கும் தெரியுமே. நகர்வீடு என்று காரியாலயம் ஒன்று கட்டுவதற்காக இங்கே பதினேழாயிரம் டாலர் செலவிட்டிருக்கிறார்கள். அரசியல் காரணம் இருக்கலாம் இதற்கு—அல்லது பணம் மிஞ்சிய காரணமாகவும் இருக்கலாம். ஆனால் இவ்வளவு செலவழித்த நாம் படிப்புக்கென்று கொஞ்சமும் செலவிடத் தயாராக இருப்பதில்லை. நகர் வீட்டில் வைப்பதற்குக் கல்வியைத் தவிர வேறு தகுதியான பொருள் இருக்கமுடியுமா? பத்தொன்பதாம் நூற்றாண்டு தருகிற வசதிகளை நாம் அனுபவிக்கக் கூடாதா? நம் வாழ்க்கை எந்த வகையிலும் மாகாண வரம்புக்கு உட்பட்டதாக ஏன் இருக்கவேண்டும்? செய்தித்தாள் படிக்கத்தான் வேண்டுமென்று ஆசையிருந்தால், போஸ்டன் வம்பையும் நம்மூர்ச் செய்திகளையும் விட்டுவிட்டு, உலகில் சிறந்த செய்தித்தாளை வாங்கி நாம் படிக்க முயலுவதில் என்ன தவறு? உலகத்திலுள்ள அறிஞர்கள் கூட்டமெல்லாம் நமக்குத் தங்கள் தங்கள் செய்திகளை அனுப்பவழி செய்து கொள்வோமே. அவர்களுக்கு ஏதாவது தெரிகிறதா என்று நாம் அவர்கள் செய்திகளை உரைத்துப் பார்ப்போம். நாம் வாசிக்கவேண்டியது என்னென்ன நூல்கள் என்பதை நாம் பிரசுர கர்த்தாக்களுக்கு விட்டுவிட்டு நிற்பானேன்? தன் பண்பு வளர்ச்சிக்கு ஏற்றதைத் தன்

ணைச் சுற்றி பிரபு சம்பாதித்துச் சேர்த்துக் கொள்வது போல, நாமும் நம் தேவைகளுக்குத் தகுந்தபடி நம் கல்வி விஷயங்களை ஏற்பாடு செய்துகொள்வோமே. ஸ்தாபனங்களின் ஆத்மாவுக்கு உயிரும் அர்த்தமும் தருபவர்கள் தனி மனிதர்கள்தான்; சேர்ந்து செய்கிற ஒரு காரியத்துக்கு, ஒரு தனிப்பிரபு தரக்கூடியதைவிட அதிகமாகவே பொருள்கிடைக்கும் என்று நான் நம்புகிறேன். கிராமம் என்றால் ஒரு வாத்தியார், ஒரு மதபோதகன், ஒரு வெட்டியான், ஒரு வாசகசாலை போதும் என்று நாம் நினைப்பானேன்? நம் முன்னோர்களுக்கு அது போதுமானதாக இருந்தது. இப்போது தேவைப்படுகிறதை எல்லாம் நாம் சிருஷ்டித்துக் கொள்ளலாமே. கிராமம் பூராவுக்கும் உபயோகப்படுகிற வகையிலே நம் கல்வி ஸ்தாபனத்தை நாம் நிர்மாணித்துக் கொள்ளமுடியும். உலகிலுள்ள ஞானிகள் எல்லோரும் வந்து நமக்குப் பாடம் சொல்லித் தரும்படி ஏற்பாடு செய்துகொள்வது ஒன்றும் சிரமமான காரியம் அல்ல. உலகிலுள்ள அறிவு பூராவையும் இங்கு கொணர்ந்து சேர்த்துவிட்டால் நமது பண்பு உலகில் சிறந்ததாகி விடாதோ! முதல் தேவை என்று எனக்குத் தோன்றுவது இதுதான்—அசாதாரணமான பள்ளிக்கூடம் என்று முதலில் நான் குறிப்பிட்டது இந்த வழியைத் தான். பிரபுக்களுக்குப் பதிலாக, இங்கே உன்னத கிராமங்கள் தோன்றட்டும்; அவற்றில் மக்கள் அறிவுடன் வாழட்டும். அவசியமானால் ஆற்றின்மேல் ஒரு பாலத்தைக் கட்டாமல் விட்டுவிடுங்கள். அந்தப் பணம் கல்விக்கு, வாசிப்புக்கு உபயோகப்படட்டும். நம்மைச் சூழ்ந்து நிற்கும் அறியாமையைக் கடப்பதற்கு உதவக் கூடிய பாலம்தான் நம்முடைய முதல் தேவை. இந்தப் பாலத்தைக் கட்டச் செய்யப்படும் சிறு முயற்சிகளும் கூட மஹத்தானவை என்று வரவேற்கப்பட வேண்டியவை.

# சப்தங்கள்

அச்சேறிய சப்தங்களைப் புஸ்தகங்கள் என்று பாராட்டுகிறோம். அச்சேறாத சப்தங்களையும் காது கொடுத்துக் கேட்டு மனத்தில் பதித்துக் கொள்ளத் தயாராக இருக்கவேண்டும் மனிதன். புஸ்தகங்கள் பாஷைகளை நம்பியுள்ள ஒரு சாதனம்; சப்தங்கள் எல்லாம் பாஷைகளை மீறிய ஒரு இயற்கைச் சாதனம். புஸ்தகங்களிலிருந்து கற்றுக்கொள்கிற அளவுக்கு மனிதன் காதில் கேட்கிற சப்தங்களிலிருந்தும் கற்றுக்கொள்ளலாம்—அப்படிக் கற்றுக் கொள்வது மிகவும் அவசியம். எப்போதும் துடியாக இருக்கவேண்டியதின் அவசியத்தை மிகைப் படுத்திச் சொல்லமுடியாது. எவ்வளவுதான் படித்தறிந்து கொண்டுவிட்டாலும். துடியாக இல்லாதவன் எத்தனையோ நன்மைகளை, பாடங்களை இழந்துவிடுகிறான். வாசகனாக, ஒரு மாணவனாகவே உன் ஆயுள் பூராவையும் கழித்துவிட விரும்புகிறாயா நீ? அல்லது படித்தும் மற்ற வழிகளிலும் ஞானியாக விரும்புகிறாயா? உன் விதியைப் படித்துக்கொள்—உன் எதிரில் இருப்பதைக் கண்கொண்டு பார்த்தறிந்துகொள்—எதிர்காலத்தை நோக்கி நட.

முதல் கோடையில் நான் புஸ்தகங்கள் படிக்கவில்லை, பீன்ஸ் வயலில் வேலை செய்தேன். சில சமயம் அதையும் விடச் சிறந்த காரியம் செய்தேன். காலம் என்பதன் சிறந்த கொழுந்தான இந்த நாழிகையை வீணாக்கிவிட இஷ்டமில்லாமல், ஒன்றும் செய்யாமல், கதவைத்திறந்து வைத்துக் கொண்டு, படியில் உட்கார்ந்திருந்தேன். கையாலோ தலையாலோ எந்த வேலையும் செய்ய மனமில்லாமல் உட்கார்ந்திருந்தேன். என் வாழ்க்கைக்கு ஒரு அகலமான கரை இருக்க வேண்டும் என்பதே என்

விருப்பம். பல நாள் அதிகாலையிலிருந்து நண்பகல் வரையில் சிந்தனையில் ஆழ்ந்தவனாக, சூரிய வெளிச்சம் நிறைந்த என் வாசற்படியிலே, மரங்கள் அசைந்தாடும் சப்தத்தைக் கேட்டுக் கொண்டு, தனிமையில் அந்த மௌனத்தில். பறவைகள் பாடுவதைக் காதில் வாங்கிக் கொண்டு உட்கார்ந்திருப்பேன். தூரத்திலிருந்த பாதையில் ஏதாவது வண்டி உருண்டோடுகிற சப்தம் கேட்டும். மேற்கு ஜன்னலில் சூரியன் விழும். அதற்குப் பிறகு தான் நேரம் போனதே தெரியும் எனக்கு. இரவில் தானியம் பெருகி வளருவது போல இந்த நேரங்களில் நான் பெருகி வளர்ந்தேன் என்று சொல்வது மிகையாகாது. நான் இழந்து விட்ட நேரம் அல்ல அது. அதனால் நான் ஐசுவரியவானானதாகத் தான் எண்ணுகிறேன். கீழை நாட்டு மக்கள் செயலாற்றுவதைத் துறந்து விட்டு துறவிகளாகப் போகிறேன் என்று சொல்லிக் கிளம்புவதன் அர்த்தம் எனக்கு இதனால் தான் புரிய வந்தது. காலை நேரம் ஒன்றும் செய்யாமல் வீணாகிவிட்டதே என்று நான் கவலைப்பட்டதே யில்லை. பக்ஷிஜாலங்களைப்போல உற்சாகமாகப் பாடுவதற்குப்பதில் நான் எனக்குள்ளாகவே புன்சிரிப்புச் சிரித்துக் கொள்வேன். காலம் என்பதை அறியாதவன் போலவே நான் காலங்கடத்தினேன் என்று சொல்லலாம். பூரியிலுள்ள இந்தியர்களைப் போல வாழ்ந்தேன் நான் என்று சொல்லலாம், "நாளை நேற்று இன்று என்கிற விஷயங்களுக்குப் பூரி இந்தியர்களுக்குத் தனித் தனி வார்த்தைகள் கிடையாது. காலம் என்கிற ஒரே ஒரு வார்த்தை தான் உண்டு. அதைச் சொல்லிவிட்டு அவர்கள் பின்னுக்கிக் காட்டினால், பழயது என்று அர்த்தம்; முன்னுக்கிக் காட்டினால் வரப்போவது என்று அர்த்தம்; தலைக்கு மேலே காட்டினால் இன்று, நிகழ்காலம் என்று அர்த்தம்." இது என் சகமனிதர்களுக்கு இங்கு புரியாத ஒரு விஷய

மாக இருக்கலாம். பறவைகளும், மலர்களும் தங்கள் கெஜக் கோல்களை வைத்து என்னை அளந்து பார்த்திருக்கு மாறுல், அவை என்னை ஏற்றுக் கொண்டிருக்கும் என்றே நம்புகிறேன். எதற்குமே ஆதாரத்தை மனிதன் தனக் குள்ளே தான் கண்டு கொண்டாக வேண்டும். இயற்கை யில் நான் ஒன்று என்பது மிகவும் அமைதியான அசை வற்ற விஷயம். அந்த அமைதியை, அசைவற்ற தன்மை யைக் கெடுக்காமல் ஒரு மனிதன் எதுவுமே செய்யாமல் இருந்து விட்டான் என்பதற்காக இயற்கை அவனைக் கோபித்துக் கொள்ளாது.

வெளியே பொழுதுபோக்கு, வேடிக்கை, விந்நியாசம் என்றெல்லாம் தேடிக்கொண்டு அலைய வேண்டிய அவ சியம் எனக்கு ஏற்படவில்லை. சமூகமும் நாடகமும் நாடி நான் திரிய வேண்டியதில்லை. என் வாழ்வே என் பொழுது போக்காகவும், சுவாரசியமான நாவலாகவும் அமைந்து விட்டது. முடிவில்லாத பல காக்ஷிகள் கொண்ட நாடகம் என் வாழ்க்கை. உன் மேதைத்திறனை நெருக்கி யடித்துத் தொடர்ந்து நீ பின் பற்றினுல், ஒவ்வொரு மணி நேரமுமே உன் புதிய சுபிட்ச எதிர்காலத்தைக் காண்பிக்கத் தவறுது. வீட்டு வேலை செய்வது என்பது மிகவும் இனிய பொழுது போக்கு. தரை அழுக்காகிவிட்டது என்றுல், சாமான்களை எல்லாம் வெளியே கொண்டு போய்ப் போட்டுவிட்டு, குளத்திலிருந்து வெண்மணல் கொணர்ந்து பரப்பி, ஜலத்தைவிட்டுத் தேய்த்து அலம்பி, விளக்குமாருல் துடைத்துவிடுவேன். தரை சுத்தமாகவும் வெண்மையாக வும் ஆகிவிடும். கிராமத்தில் குடியானவர்கள் எழுந்து காலை உணவு அருந்துவதற்கு முன் தரை காய்ந்துவிடும்— திரும்பவும் சாமான்களை எடுத்து வீட்டுக்குள் போட்டு விடலாம். இந்த வேலையைத் திருப்திகரமாகச் செய்து கொண்டே மனிதன் தன் சிந்தனைகளை தீவிரமாகத் தொட

ரலாம், வீட்டுச் சாமான்கள் வெளியே கிடப்பதைப் பார்ப்பதற்கும் அழகாகத்தான் இருக்கிறது. பேனவும் மசிக்கூடும் புஸ்தகங்களும் நான் வைத்தபடியே மூன்று கால் மேஜை மேல் கிடக்கின்றன. மேஜை தான் வீட்டுக்கு வெளியே கிடக்கிறது. இப்படி வெளியே வந்து மரத்தடியில் சிறிது நேரம் தங்குவது பற்றி என் சாமான்களுக்கும் உள்ளூறச் சந்தோஷம் என்றே நான் எண்ணுகிறேன். பழக்கப்பட்ட சாமான்களும் கூட வீட்டுக்கு வெளியே கொண்டு வரப்பட்டால் ஒரு புது உருவமும் அழகும் பெறுவது போலத்தான் இருக்கிறது. பக்கத்து மரத்தில் ஒரு குருவி உட்கார்ந்து குரல் கொடுத்துக் கொண்டிருக்கிறது. மேஜைக்கு அடியிலே அழியாத உயிர் வளர்ந்து கொண்டிருக்கிறது. அதன் கால்களைச் சுற்றி கருப்புக் காய்க் கொடிகள் படருகின்றன. பைன் கோன்களும், செஸ்ட்நட் பர்களும், ஸ்டிராபெர்ரி இலைகளும் எங்கும் சிதறிக் கிடக்கின்றன.

வஸந்தத்தின் பிற்பகுதியில் அற்புதமாக மொட்டு வெடித்தும் பூச்சரங்களாகக் காக்ஷியளிக்கின்றன ஸதுமாக் பூக்கள். உலர்ந்து உயிரற்ற கட்டைகள் போல இருக்கும் இளங்கிளைகளில் வர்ணப்பூங் கொத்துகள் போல இலைகள் வெடித்து நிறம்மாறி முதிர்ந்த இலைகளாகின்றன. சில செடிகளில், இலைகளின் கனம் தாங்காமல் பல கிளைகள் விசிறி போல ஒடிந்து தரையில் விழுகின்றன. மலர்களின் கனம் தாங்காமல் ஒடிகிற கிளைகளும் பல வுண்டு. ஆகஸ்டு மாதத்திலே, மலர் காய்ந்து காய் காய்க்கத் தொடங்கும் போதும் பல இளங்கிளைகள் புதுக்கனம் தாங்காமல் தழைந்து தரையைத் தொட்டு ஒடிந்து விழுந்து விடுகின்றன.

என் வீட்டுக்கு மேலே ஆகாயத்தில் வல்லூறுகள் பறக்கின்றன. காட்டுப் புறுக்கள் கூட்டங் கூட்டமாக

வரிசை வரிசையாகச் சப்தம் எழுப்பிக் கொண்டு பறந்து செல்கின்றன. அவற்றின் குரல் காற்றின் குரலே போல என் காதில் ஒலிக்கிறது. கண்ணாடி போன்ற நீர்ப்பரப்பில் குழி விழப் பாய்ந்து ஒரு மீன் கொத்தி மீன் பிடிக்கிறது. குளக்கரையில் வந்து நிற்கும் ஒரு தவளையைப் பிடித்து, சதுப்பிலிருந்து வந்த ஒரு மிங்க் விழுங்கிவிடுகிறது. இன்று இந்தக் கோடை மாலையில் அரைமணி நேரமாக தூரத்தில் போகும் ரெயில் வண்டிச் சப்தமும் என் காதில் விழுந்து கொண்டிருக்கிறது. போஸ்டனிலிருந்து கிராமத்துக்குச் செல்லும் மக்களை ஏற்றிச் செல்லும் ரெயில் வண்டி அது. ரெயில் வண்டியின் ஊதலும் சப்தமும் கேட்காத இடம் இங்கு இப்போது எங்கே இருக்கிறது? தெற்கே ஐநூறு கஜங்களுக்கப்பால் இருக்கிறது ரெயில் பாதை. நான் கிராமத்துக்குப் போக வேண்டுமானுல் அந்தப் பாதையோடு தான் போகிறேன். எனக்கும் சமூகத்தின் இன்றையச் சின்னமாகிவிட்ட ரெயில் பாதைக்கும் உள்ள உறவு இது தான். ரெயிலிலிருந்து என்னைப் பாதையிலே பார்த்திருப்பவர்கள் எல்லோரும் நண்பன் என்று மதித்து எனக்கு வணக்கம் தெரிவிக்கிறுர்கள். ரெயில்பாதையைச் செப்பனிட அமர்த்தப்பட்டிருக்கும் கூலியாள் என்று அவர்கள் என்னை எண்ணுகிறுர்களோ என்னவோ. நான் செப்பனிட விரும்புவது ரெயில் பாதையை அல்ல—உலகமே சென்று கொண்டிருக்கும் பாதையைத் தான் செப்பனிட விரும்புகிறேன்.

கோடையிலும் பனியிலும் இந்த ரெயிலின் குரல் என் வரையில் எட்டுகிறது. வல்லூறு எழுப்பும் குரல் போல அது ஒரு நிமிஷம் காற்றிலே எழுந்து ஒலித்து அடங்குகிறது. நகரத்து வியாபாரிகளைக் கிராமத்துக்குக் கொண்டு வந்து தள்ளிக் கொண்டிருக்கிறது ரெயில் வண்டி. அல்லது தைரியம் அதிகமுள்ள கிராமவாசிகள் பலரை வேறு

பல கிராமங்களுக்கு வியாபாரார்த்தம் ஏற்றிக் கொண்டு செல்கிறது. எதிரும்புதிருமாகச் சில சமயம் வண்டிகள் வந்து ஒன்றை யொன்று தாண்டுகின்றன. உங்கள் மளிகை சாமான்கள் இதோ வருகின்றன என்று ஒரு ரெயில் கூவிச் சொல்லுகிறது. அதற்கான பணத்தை வியாபாரியிடம் தந்து இதோ அனுப்பிவிட்டேனே என்று எதிர் ரெயில் பதில் குரல் தருகிறது. மணிக்கு இருபது மைல் வீதம் ஓடும் இந்த ரெயில்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நகரம் அடங்கிவிடும் போல இருக்கிறது. காடுகள் எல்லாம் இந்த ரெயில் வண்டிகள் காரணமாகத் தங்கள் மரங்களை இழந்துவிட்டன. நகரத்தில் ஏராளமாக மரம் தேவை; எடுத்துப்போக வண்டி வருகிறது என்றிருக்கும்போது வெட்டிக் குவிப்பதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்? பருத்தி வருகிறது; நெய்து துணிகளாகப் போகிறது. பட்டு வருகிறது; கம்பளி போகிறது. புஸ்தகங்கள் வருகின்றன; அவற்றைப் படித்தும் எழுதியும் அறிந்துகொள்ளக் கூடிய அறிவு போகிறது.

கிரஹ சஞ்சாரம்போலத்தான் இருக்கிறது ரெயில் வண்டிகளின் சஞ்சாரம். தேவதையின் ரதமா இது? தங்கமும் வெள்ளியுமாக, உலகத்தையே புரட்டிவிடும் சக்தி வாய்ந்தது போன்ற தோற்றத்துடன் வருகிற இந்த ரெயில் வண்டிகளினுல் எத்தனை புதுப் புதுப் புராணங்கள் நம்மிடையே உற்பத்தியாகப் போகின்றனவோ? பூமியில் வாழும் மனிதர்கள் அமானுஷ்யமான சக்தி பெற்று ராக்ஷசர்களோ தேவர்களோ ஆகிவிட்டார்களோ என்றுதான் எண்ணத் தோன்றுகிறது. ஆனுல் இந்தத் தோற்றம் அப்படி ஒன்றும் உண்மையானது அல்ல. மனிதனுக்கு ஒரு சக்தி கிடைத்துவிட்டது. அதை அவன் வீரம் ததும்பும் செயல்களுக்கோ, நல்ல கார்ரியங்களுக்கோ

பயன்படுத்தினால்தானே திருப்தியாக இருக்கும்? அது தான் இல்லை.

சூரியன் உதயமாவதுபோல, ஒவ்வொரு நாளும் காலா காலத்தில் ரெயில்கள் வந்து போகின்றன. சூரியனையும்விட அதிகாலையில் எழுந்துவிடுகிறான் அந்த இரும்புக் குதிரையை மேய்ப்பவன். சூரியனை மறைத்துவிடக் கூடிய அளவு புகையையும் நெருப்பையும் கக்கிக் கொண்டு அது தன் பயணங்களைத் தொடங்குகிறது. நாள் பூராவும் நாடு பூராவும் இந்த இரும்புக் குதிரை ஓடிக்கொண்டே இருக்கிறது. அமைதியற்ற நகரத்து மனிதர்களைக் கொண்டு வந்து நாட்டுப்புறத்திலே விதைத்துவிட்டுப் போய்விடுகிறது. நள்ளிரவிலும்கூட அது சலிப்படையாமல், களைப்படையாமல் ஓடிக்கொண்டிருக்கிறது, சப்தம் போட்டுக் கொண்டு, பகலிலும் இரவிலும் போய் வந்துகொண்டேயிருக்கும் ரெயில் வண்டிகளின் சப்தத்தை நான் கவனித்து வைத்துக் கொள்கிறேன். இந்த முயற்சி அலுப்பு சலிப்பில்லாது இருப்பது போலவே வீரம் நிரம்பியதாகவும், மதிப்புக்கும் வணக்கத்துக்கும் உரியதாகவும் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

ரெயில்கள் வந்துவிட்டன என்பதனால் மனிதர்களின் சிந்தனா சக்தியும் வேகமும் அதிகப்பட்டு விட்டனவா? அப்படிச் சொல்வதற்கில்லை. குடியானவர்களுடைய கடிகாரங்கள்கூட, ரெயில் வருவதையும் போவதையும் பார்த்து வைக்கப் படுவதால், சரியானபடி ஓடுகின்றன. அதைத் தவிர வேறு என்ன நன்மை வந்திருக்கிறது இந்த ரெயில்களால்? போஸ்டன் நகரத்தை மற்றப்படி பார்க்கக் கொடுத்து வைக்காதிருந்திருப்பார்கள் பலர்—அவர்கள் போய்ப்பார்த்துவிட்டு வந்துவிட்டார்கள். பாதையிலே நடப்பவன்மேல் உடனடியாக ஏறி விடும் ரெயில், ஒரு தரம் ஊதிவிட்டு, என்று இப்போது நாட்டுப்

புறத்தான்கள் கூடத் தெரிந்துகொண்டு விட்டார்கள் என்ருல் பார்த்துக் கொள்ளுங்களேன். வழியைவிட்டு விலகி நிற்பதே மனிதன் கடமை. குழந்தைகளும் இதை அறிந்து கொண்டு ஒதுங்கி நடக்கிருர்கள். உன் பாதையைவிட்டு நகர்ந்து விடாதே என்று ரெயில்வண்டி தன் உதாரணத்தால் மக்களுக்குப் படிப்பித்துத் தரத் தயாராக இருக்கிறது.

வியாபாரம் என்பது வளர்ந்து வருவதில் ரெயில் பாதைகள் முன்னேறுகின்றன. வியாபாரத்தில் எனக்குப் பிடித்த அம்சம் என்ன என்ருல் அதன் வீர்யமும் வேகமும் தன்னம்பிக்கையும் தைரியமும் தான். கடவுளின் உதவி கேட்டுக் கைகூப்பிக் கொண்டு நிற்பதில்லை வியாபாரம். எதிர்ப்படுவதை யெல்லாம் வணங்கச் செய்து கொண்டு தன்பாட்டில் முன்னேறுகிறது அது. இன்று பனிப்புயல் இப்படி அடிக்கிறதே—அதற்காக வியாபாரம் பயந்து பணிந்து விடுகிறதா என்ருல் அதுதான் இல்லை. ரெயில்வண்டி மழை பெய்தாலும், இடி இடித்தாலும், புயல் வீசினுலும் வந்துவிடுகிறது. எத்தனை வியாபாரப் பொருள்களை ஏற்றிக் கொண்டு வருகின்றன இந்த ரெயில்கள்தான்? உலகின் எத்தனையோ பாகங்களிலிருந்து எத்தனையோ சாமான்கள் வந்து வந்து குவிகின்றன. மணிலா சணல், தேங்காய்மட்டை, சாக்குகள், துருப்பிடித்த இரும்பு, ஆணிகள்—இன்னும் எத்தனை எத்தனையோ? மரங்களில் உள்ள வகைகள் எல்லாம் இந்த ரெயிலில் பிரயாணம் செய்து எங்கோ போய்ச் சேருகின்றன. எத்தனை வர்ணத் துணிகள்! அந்தத் துணிகளில்தான் எத்தனை ரகங்கள்—மிகவும் மட்டமானதிலிருந்து மிகவும் உயர்ந்தது வரையில்; உப்புப் போட்ட மீன் வண்டி வண்டியாக வருகிறது. தோல் வகையருக்களில் எத்தனையோ தினுசுகள். மனிதர்களுடைய உண்மை சுபாவத்தைத் தெரிந்து

கொண்டபின் அதை மாற்ற முற்படுவது அசட்டுத்தனம் தான். கீழை நாட்டில் அவர்கள் சொல்வதுபோல "என்ன செய்தாலும் நாய் வால் நிமிராது!" இத்தனை சாமான்களும் அங்கேயும் இங்கேயும் தேவை என்று மனிதன் தீர்மானித்துவிட்டான். யார்தான் என்ன செய்யமுடியும்?

இந்த வண்டிகளில் மனிதர் மட்டும்தான் பிரயாணம் செய்யலாம் என்பதில்லை. ஆடுகள், மாடுகள். கன்றுகள் எல்லாம் பிரயாணம் செய்கின்றன, எங்கே போய் அவர்கள் பிரயாணம் எப்படி முடியப்போகிறதோ எனக்குத் தெரியாது. ஆட்டு மந்தைகளுடன் பாது காக்க நாய்கள் போவதில்லை. வேறு இடங்களில் போய் ஆட்டுமந்தை நாய்கள் என்ன செய்யமுடியும்? சில சமயம் ஆட்டிடையர்கள் மட்டும் தங்கள் மந்தைகளுடன் செல்லுகிறார்கள். நாட்டுப் புறத்தில் உள்ளதையெல்லாம் இந்த ரெயிலில் ஏற்றிக்கொண்டுபோய் நாம் காணமுடியாத இடத்தில் சேர்த்து விடுவார்கள்போல இருக்கிறதே! ரெயில்பாதையோடு போய்க்கொண்டிருந்த நான், ரெயில் வந்துகொண்டிருக்கிற சப்தம் கேட்டு குறுக்குப் பாதையில் போகிறேன். "ரெயில் பாதைபற்றி எனக்கென்ன கவலை? அது எங்கேபோய் முடிகிறது என்று பார்க்க எனக்கு அவகாசமில்லை. சில குண்டு குழிகளை மூடுகிறது அது. ஸ்வாலோ பறவைகள் உட்காரச் சில மேடுகளை உண்டாக்கித் தருகிறது. மணலை விசிறி அடிக்கிறது, மரத்தில் கறுப்புக் காய்களைக் காய்க்கச் செய்கிறது" என்று பாடிக்கொண்டே நான் நகர்ந்து விடுகிறேன். அதன் புகையும் சப்தமும் என் காதைச் செவிடாக்கிக் கண்ணைப் பொட்டையாக்கி விடும். கண்ணையும் காதையும் இழக்க நான் தயாராக இல்லை என்பதால் ஒதுங்கிப் போய் விடுகிறேன் நான்,

ரெயில் வண்டிகள் போகட்டும், ஓடும் உலகமும் அத்துடன் போகட்டும். குளத்தில் உள்ள மீன்களும்கூட ரெயில் வண்டிகளால் ஏற்படுகிற உலுக்கல்களை உணருகின்றன. இப்போது பல மணிநேரம் தூரத்தில் பாட்டையில் வண்டிகள் ஓடும்சப்தம் தவிர வேறு வண்டிச் சப்தம் கேட்காது—என் சிந்தனைகளைக் குழப்பாது.

காற்று சரியானபடி அடிக்கும்போது, ஞாயிற்றுக் கிழமைகளில், லிங்கன், ஆக்டன், பெட்ஃபோர்டு அல்லது கான்கார்டு ஆலயத்து மணிகள் என் காதில் விழும். காட்டிலே அடித்து அலைபாய்ந்து ஓயவேண்டிய இயற்கையான ஒலிதான் அது. மரங்கள் என்ற வீணைத் தந்திகளில் எழுப்பிய நாதம்போல இந்த ஆலய மணிகள் ஒலிக்கின்றன. வானத்து நீலம் இந்தச் சப்தத்திலே தோய்ந்திருப்பது போல இருக்கிறது. அது எழுப்பும் எதிரொலியும் வெகு நேரம் சப்தித்துக் கொண்டே காற்றில் இனிமையைப் பொழிகிறது. காட்டுத் தேவி ஒருத்தியின் குரலோ அது ?

மாலையில் தூரத்தில் ஏதாவது ஒரு மாடு முக்காரமிடும். சில பாடகர்களை ஞாபகமூட்டும் அந்தக் குரல் எனக்கு. உண்மையிலேயே அனுபவிக்க வேண்டிய குரல் தான்.

கோடைகாலத்தில் பல நாட்கள் சொல்லி வைத்தாற் போல மாலை ஏழரை மணிக்கு விப்பூர்வில் பக்ஷிகள் இசை பாடும். பிரார்த்தனை கீதம் இசைப்பது போல ஒரு அரை மணிநேரம் ஒரு மொட்டை மரத்தில் உட்கார்ந்து கொண்டு வரிசையாகப் பாடும் அவை. சூரியாஸ்தமனத்துக்கு ஒட்டிய ஒரு நேரத்தைக் குறித்துவைத்துக் கொண்டு அவை தவறாமல் மாலை கீதம் பாடும். இவற்றின் பழக்க வழக்கங்களைச் சரியானபடி படித்து வைத்துக் கொள்ள எனக்குப் போதிய சந்தர்ப்பங்கள் கிடைத்தன.

அருகில் வந்து பாடும்—பாடி முடித்த பின்னும், ஒரு குரல் நின்று வேறு குரல் தொடங்கு முன்னும் அவை செய்கிற மெல்லிய சப்தங்கள் என் காதில் விழுகிற அளவுக்கு அவை என்னை நெருங்கி உட்கார்ந்து கீதம் இசைக்கும். ஒரு பறவை சில சமயம் கயிற்றால்கட்டப்பட்டதுபோலச் சுற்றிச் சுற்றி என் தலைக்கு மேல் வட்டமாகப் பறந்து கொண்டு பாடும். நான் அதன் முட்டைகளுக் கருகில் நின்றுகொண்டிருக்கிறேன் என்று அதைப் பார்த்து அறிந்து கொள்வேன் நான். இரவு பூராவும் விட்டு விட்டுப் பாடும் அவை. மீண்டும் மறுநாள் அதிகாலையில் பாடத் தொடங்கிவிடும்.

மற்றப் பறவைகள் மௌனமாக இருக்கும்போது கிறீச்சிடும் ஆந்தைகள் அலறத் தொடங்கும். பறிகொடுத்த ஸ்திரீகள் அழுவது போலவே இருக்கும் அந்தச் சப்தம். எவ்வளவு துக்கம் எழுப்பும் குரல் அது! ஒன்று ஒரு பக்கத்திலிருந்து அலறும்: இன்னொன்று வேறு ஒரு பக்கத்திலிருந்து அலறும். எனக்கு இந்த அழுகையும் பிடித்துத்தான் இருந்தது. இசையின் அழுகைப் பக்கம் இது. ஆனந்தத்தைப் போலவே துயரத்தைச் சொல்வதற்கும் இசையின் உதவி தேவைதானே? கிறீச்சிடும் ஆந்தைகள் தவிர, வேறு ஒரு ஆந்தையும் இருந்தது என் வீட்டின் பக்கத்திலே. சாகுந் தருவாயில், நம்பிக்கை யிழந்துவிட்ட மனிதன் ஊளையிடுவது போலவே இருக்கும் அதன் குரல். ஹூ—ஹூ—ஹூ என்று அது குரல் கொடுக்கும்போது பைத்தியக்காரன் ஒருவன் குரல்தான் ஞாபகம் வரும் எனக்கு. தூரத்திலிருந்து வரும்போது இந்தக் குரலும் கூட இன்பமுள்ளதாகவே தோன்றிற்று எனக்கு. ஆந்தைகள் இருக்கின்றன என்பது பற்றி எனக்குச் சந்தோஷம் தான். எல்லா இனங்களுக்கும் பொதுவான திருப்தியுருத

ஏக்கங்களையும் நம்பிக்கையின்மைகளையும் இருண்ட சிந்தனைகளையும் அவை நினைவூட்டுகின்றன.

மாலையில் வெகு நேரத்துக்கப்பால் பாலங்களின்மேல் பார வண்டிகள் உருண்டோடும் சப்தம் கேட்கும். நாய்கள் ஊளையிடுவது கேட்கும். மடாத்தவளைகள் குளத்தின் கரை ஓரத்திலிருந்து சந்தை வைக்கும். குடிகாரர்கள் குரலெடுத்துப் பாடுவது போன்றது அவற்றின் குரல்கள். கோஷ்டி கோஷ்டியாக மாற்றி மாற்றி அவை குரல் கொடுப்பதுதான் எவ்வளவு நன்றாக இருக்கிறது! காலைச் சூரியன் உதயமான பிறகும்கூடச் சில சமயம் ஒரு தவளை விடாமல் கத்தும்; தன் குரலுக்கு எதிர்க் குரல்கள் வரவில்லையே என்று கவனிக்காது கத்தும். அவ்வளவு கவனம் அதற்கு அதன் கீதத்திலே.

கோழி ஒன்றும் என் காதில் விழும்படியாகக் கூவியதாக எனக்கு ஞாபகமில்லை. ஒரு காலத்தில் காட்டு மிருகமாக இருந்ததுதான் கோழி வர்க்கம். இப்போது அதைக் காடுகளில் காண்பதில்லை. கோழி கூவுகிற இடத்திலே மற்றப் பறவையின் மென்மையான குரல்கள் காதில் விழவே விழாது. கோழி கூவுவதைக் கேட்டும் எழுந்திருக்காதவன் மனிதனே அல்ல. எந்தச் சீதோஷ்ண நிலையிலும் வசித்துக் குரல் கொடுக்கக் கூடியது கோழி இனம். எல்லாத் தேசங்களும் அதற்குச் சொந்த தேசம்தான். என்றும் அதன் உடல் நலத்துக்கும் கேடு வருவதில்லை; அதன் குரலும் என்றும் மங்காது. என்னிடம் ஆடு, மாடு, நாய், பூனை, பன்றி, கோழி ஒன்றுமில்லை. இதன் குரல்களை வால்டனில் நான் கேட்கவில்லை. வீட்டு வேலைகளான தயிர் கடைவது, நூல் நூற்பது போன்ற எந்தக் காரியங்களிலும் நான் ஈடுபடவில்லை. எனக்கு ஆறுதல் அளிப்பதற்காக இங்கு குழந்தைகள் அழவில்லை. இப்படியும் வசிக்க முடியுமோ என்று கேட்பவர்களுக்கு நான் சொல்லக்கூடி

யது இதுதான் ; திருப்தியாகவே என்றால் வசிக்க முடிந் தது. அணில்கள் இருந்தன அங்கே. விப்பூர் வில்கள் இருந் தன. நீல ஜேப்பறவை இருந்தது. தரையிலே வுட்சக்கும் முயலும் பாய்ந்தோடின. ஆந்தைகள் ஊளையிட்டன. காட்டு வாத்துகள் சப்தித்தன. சிரிக்கும் லூன் குளத்திலி ருந்து சிரித்தது. இரவில் நரி ஊளையிட்டது. குயில்களோ, மாம்பழக் குருவியோ என் வீட்டுப் பக்கம் வரவேயில்லை. எலிகள்கூட இல்லை வீட்டிலே—அங்கே அவை பட்டினி கிடந்திருக்க வேண்டியதுதான். கோழியும் அங்கு வரவில்லை. வாசல் முற்றம்கூடக் கிடையாது என் வீட்டுக்கு, இயற்கை என் ஜன்னல் வரையில் வந்தது என்று சொல்ல வேண்டும். வீட்டுக்கு வெளியே கால் வைத்தால் காடு. எங்கும் புல் பூண்டுகள், செடி கொடி கள், குட்டையான மரங்கள், நெட்டையான மரங்கள், இவ்வளவுதான். புயல் அடித்தால் தாங்காத மரம் ஏதாவது சாயும் ; விறகுக்காயிற்று. வெளியிலே பாதையில்லை, வெளிக் கதவுமில்லை, தோட்டமுமில்லை. நாகரிக உலகுக் குச் செல்லும் நடைபாதையில்லை.

## தனிமை

இனிமையான மாலை நேரம் இது. உடம்பே ஒரு புலன்போல இன்பத்தை நுகருகிறது. இயற்கையில் ஒரு பகுதியாக என் இஷ்டப்படி நான் சுதந்திரமாகப் போய் வந்து கொண்டிருக்கிறேன். குளுமையாக இருக்கிறது. காற்றும் அடிக்கிறது. மேலே மேகங்களும் கவிந்திருக்கின் றன. இரவு வந்துவிட்டது என்பதை அறிவிக்க மடாத் தவளைகள் சந்தை வைக்கத் தொடங்குகின்றன. உலகில் உள்ள மரங்கள் எல்லாம் என் அனுதாபத்தையும் அன்

யையும் கவருகின்றன; அந்த அன்பு வேகம் என் மூச்சையே திணற அடிக்கிறது. என் அமைதியிலும், குளப் பரப்பில் போலவே, அலை லேசாகப் பாய்கிறதே தவிரப் பெரிதாக மோதவில்லை. மாலைக்காற்று எழுப்பும் அலைகள், புயல்களால் எழுப்பப்படும் அலைகள் மாதிரியில்லை. இருட்டி விட்டது எனினும் மாலைக்காற்று லேசாக அடித்துக் கொண்டிருக்கிறது. அமைதியை அதிகப்படுத்துவதே போல சில ஜந்துக்கள் குரல் எடுத்து கீதம் பாடுகின்றன. அமைதி என்பது முழுமையானதாக இருக்கவே முடியாது. மற்றவை உறங்கும்போது, காட்டு மிருகங்கள் வேட்டையாடுகின்றன. நரியும், ஸ்கங்கும், முயலும் காவல் காக்கின்றன—பயமின்றிக் காட்டிலே திரிகின்றன.

வீடு திரும்பியபோது யாரோ விருந்தாளிகள் வந்து விட்டுப் போயிருப்பது தெரிந்தது. பெயர் அடித்த கார்டு வைத்துவிட்டுப் போனல்தான் தெரியும் என்பதில்லை. காட்டில் வருபவர்கள் ஏதாவது கொடியைப் பறித்து விஷமம் பண்ணிக்கொண்டு வருவார்கள்; இலை ஒன்று அவர்கள் ஆடையில் ஒட்டிக்கொண்டிருந்து தரையிலே விழுந்து கிடக்கும். கால் அடி தரையில் தெரியும். புகை பிடித்த வாசனையை என் மூக்கு நுகரும்.

நம்மைச் சுற்றிலும் போதிய இடம் இருக்கிறது. அடிவானம் என்பது நம் கை எட்டுகிற இடத்தில் இல்லை. காடு வீடுவரை வருவதில்லை. குளமும் நகர்ந்தே நிற்கிறது. நம்மைச் சுற்றிலும் ஒரு வெளியை நாம் இயற்கையிடமிருந்து பறித்து ஏற்படுத்திக் கொண்டிருக்கிறோம். இந்தப் பரந்த காட்டையும், தனிமையையும் நான் ஏன் என் வாசஸ்தலமாகக் கொண்டிருக்கிறேன்? மலைக் குன்றுகளைத் தவிர அண்டையில் வீட்டுக் கூரை எதுவும் என் கண்ணில் படவில்லை. அடுத்த வீடு என்பது ஒரு மைலுக்கப்

பால் இருக்கிறது. ந்யூ இங்கிலாந்துப் பிரதேசமா அது; அல்லது ஆசியாவா, ஆப்பிரிக்காவா? எனக்காக என்றே சூரியனும் சந்திரனும் நக்ஷத்திரங்களும் இரவு பகலும் இங்கு தோன்றுகின்றன. இது வேறு உலகம். இரவில் யாராவது பிரயாணி வந்தான், என் கதவைத் தட்டினுன் என்பது கிடையவே கிடையாது. நான் உலகின் முதல் மனிதனுகவும் இருக்கலாம்—கடைசி மனிதனுகவும் இருக்கலாம். இந்த ஏரிகளில் மீன்பிடிக்க வருபவர்கள்கூட இப்போது ஒதுங்கி விட்டார்கள். அதிகமாக நல்ல மீன்கள் இல்லை இங்கே. இரவாகி விட்டால் இந்தப் பக்கம் யாரும் வருவது கிடையாது. இரவைக் கண்டு ஏன் இன்னமும் மனிதன் பயப்படுகிருன்? சூனியக்காரிகளை யெல்லாம் தூக்கிலிட்டாகிவிட்டது. மெழுகுவர்த்திகளும் கிறிஸ்து மதமும் தோன்றிவிட்டன. அப்படி யிருந்தும் ஏன் மனிதன் இருட்டைக் கண்டு பயப்படுகிருன்?

என் தனிமைக்கு மாற்ருக உதவியவை இயற்கையில் சில விஷயங்கள். மனிதர்களிடம் பழக மனமில்லாத துயரம் நிறைந்த மனிதனுக்கும் கூட ஆறுதலளிக்கக் கூடிய பல கூட்டாளிகள், தைரியம் தந்து அமைதியும் தரக் கூடிய கூட்டாளிகள், இயற்கையில் இருக்கிருர்கள். புலன்களை உடையவன் எவனும் இயற்கையோடிசைந்து வாழ்கிற வாழ்க்கையிலே கூட்டாளிகள், நண்பர்கள் இல்லாமல் சிரமப்படவேண்டிவந்துவிடாது. மெதுவாகப் பெய்யும் மழையைப் பார்த்தும் எந்தத் துக்கமும் மாருதிருந்துவிட முடியாது, அந்த மழையால் (வேலை கெடலாம்; உருளைகள் சரியாக வளராமல், வளர்ந்தவையும் அழுகிவிடலாம்.) இருந்தாலும் அந்த மழை நன்மை பயக்கும்; புல் பசுமையாக அடர்த்தியாக வளரும் அந்த மழைக்குப் பின். புல் வளருகிறதோ இல்லையோ, என் கற்பனையில் இந்த மழையால் நான் வளருகிறேன். தனிமை என்று ஒரு

உணர்ச்சி இருப்பதாகவே நான் அறிய மாட்டேன் என்று தான் சொல்லவேண்டும்; இந்த விஷயத்தில் நான் மற்ற சாதாரண மனிதர்களைவிட அதிருஷ்டசாலியோ என்னவோ, எனக்குத் தெரியாது. எந்த நிமிஷத்திலும் நான் தனியாக இருக்கிறேன் என்கிற பீதி உணர்ச்சியே எனக்கு ஏற்பட்டது கிடையாது. ஒரே ஒரு தடவை தான் மனிதர்களுக்கு மத்தியில் வசிக்காமல் அமைதி பெற முடியுமா என்று ஒரு சந்தேகம் என் மனசில் தோன்றியது. அந்த சந்தேகம் உடனேயே தீர்ந்தும்விட்டது. தனியாக இருப்பதென்பது அவ்வளவு சிரமமான விஷயமா? அருவருப்பான விஷயமா? சந்தோஷம் தராத விஷயமா? இயற்கையின் நண்பர்களை விடச் சிறந்தவர்களாக மனிதர்கள் என்று, எப்பொழுது ஆகப்போகிறார்கள் என்று என்னையே கேட்டுக் கொண்டு என் தனிமைப் பயத்தைப் போக்கிக் கொண்டேன். சூழ்ந்துள்ள இந்தக் காட்டிலே ஒலிக்கிற ஒவ்வொரு சப்தமும், விழுகிற ஒவ்வொரு துளி மழையும், வீசுகிற காற்று எல்லாம், லக்ஷக் கணக்கான இலைகளும் காய்கனிகளும் மலர்களும் என் நண்பர்கள் தானே! இந்த சிந்தனை தோன்றிய பின் பக்கத்தில் மனிதர்கள் அவசியம் என்கிற நினைப்பே எனக்கில்லாமல் போய்விட்டது. மனிதன் மனுஷ்யத் தன்மை உள்ளவனாக இருக்கிறானோ இல்லையோ! இயற்கையில் உள்ளவை எல்லாம் மனுஷ்யத் தன்மையுடன் என்னிடம் நட்புரிமைபூண்டு உதவுகின்றன.

வஸந்தத்திலும் இலையுதிர் காலத்திலும் வருகிற அடை மழைப் புயல் காலங்களிலே நான் மிகவும் அமைதியான வாழ்வு வாழ்ந்தேன். மழை இரைச்சல் எனக்கு சாந்தியைத் தந்தது. கிராமத்திலே மழையினால் மக்கள் சிரமப் பட்டார்கள்; அந்த மழை எனக்கு நண்பனாக, வேண்டியவனாக இருந்தது. ஒரு நாள் பலமாக இடியும் மழையும்

இருந்த போது ஒரு பெரிய பைன் மரம் இடியால் தாக்குண்டது; மரத்திலே வளைவு வளைவாகப் பள்ளங்கள், ஒரு அங்குல அகலமும் நாலு அங்குல ஆழமும் உள்ள பள்ளம், ஆக்கர் போட்டு வேலை செய்தது போல விழுந்து விட்டது. எட்டு வருஷங்களுக்குப் பிறகு நேற்று அந்த மரம் கண்ணில் பட்டபோது அந்தச் சம்பவம் எனக்குத் தெளிவாக ஞாபகம் வந்தது.

மனிதர்கள் சில சமயம் என்னிடம் சொல்கிறார்கள்: "பனி, மழைக் காலங்களில் முக்கியமாகத் தனியாக அங்கிருப்பது உனக்குச் சிரமமாக இருந்திருக்குமே!" என்று. எனக்குப் பின் வருமாறு பதில் தரவேண்டும் என்று தான் தோன்றிற்று: இந்தப் பூமியே ஒரு புள்ளிதான். நக்ஷத்திரங்கள் இரண்டு ஒன்றுக் கொன்று எவ்வளவு தூரத்தில் இருக்கின்றன. அந்தத் தனிமை தாள முடிந்த தனிமையாக உனக்குத் தோன்றுகிறதா? அவற்றிலும் மனிதர்கள் உண்டானால் அவர்களை நெருங்காமல் நாம் வாழ்வது எவ்வளவு பிசகு? எதற்காக நான் தனியாக இருப்பதாக உணர வேண்டும்? ஆகாச கங்கையிலே ஒரு புள்ளி தானே இந்தப் பூமியும்? என்னைச் சுற்றிலும் தான் இத்தனை நக்ஷத்திரங்கள் இருக்கின்றனவே! மனிதர்கள் மத்தியில் இருந்தாலும் அவர்களுடன் ஒட்டாமல் ஒதுங்கி யிருப்பது தானே இன்று மனிதர்களிடையே சகஜமாக இருக்கிற காரியம்? எதற்கு அருகில் இருந்து என்ன லாபம்? ரெயில் பாதைக்கு அருகில் இருப்பதா? ஆலயத்துக் கருகில் இருப்பதா? தபாலாபீஸுக்கு அருகில் இருப்பதா? ஆஸ்பத்திரிக்கு அருகில் இருப்பதா? கல்லறைக்கு அருகில் இருப்பதா? நகருக்கு அருகில் இருப்பதா? கிராமத்துக்கு அருகில் இருப்பதா? ஒரு குளத்தின் கரையில் வசிப்பது தான் உயர்ந்த விஷயமாக எனக்குத் தோன்றியது. ஒரு நாள்மாலை ஒருவன்—பணக்காரன் என்று பிறர்

சொன்னார்கள், எனக்கு அது பற்றி நிச்சயமாகத் தெரியாது—தன் மாடுகள் இரண்டை ஓட்டிக் கொண்டு போனான், என்னைப் பார்த்து "சுகசௌகரியங்களை யெல்லாம் விட்டுவிட்டு இப்படி வாழ்வதில் என்ன இன்பம் இருக்கிறது?" என்று கேட்டான். "இது எனக்குப் பிடித்திருந்தது" என்று சொல்லி விட்டு என் சுகசௌகரியமற்ற வீட்டில் உறங்கப் போய்விட்டேன். இரவு பூராவும் அவன் மாடுகளை ஓட்டிக் கொண்டு சேற்றிலும் சகதியிலும், வயலிலும் வரப்பிலுமாக நடந்து போய் மாடுகளை விற்கச் சந்தையில் கொண்டு போய்ச் சேர்த்தாக வேண்டும். நான் அன்று சௌகரியமாகவே தான் தூங்கினேன்.

மனிதர்கள் தான் மனிதனுக்குச் சிறந்த நண்பர்கள் என்பது சரியான விஷயமாக எனக்குத் தோன்றவில்லை. இடம் காலம் என்பதெல்லாம் மீறியே விழிப்பு, நட்பு, உயிர்த் தத்துவம் எல்லாம் நிகழலாம். பக்கத்தில் யாரும் ஆள் இருக்க வேண்டிய அவசியம் இருப்பது எனக்குத் தெரியவில்லை, நமக்குப் பக்கத்தில் இயற்கையின் நியதி எத்தனையோ விஷயங்களை ஆட்டிவைத்துக் கொண்டிருக்கிறது. நம்மைச் சிருஷ்டித்து விட்டவனே நமக்கு அருகில் இருந்து கொண்டிருக்கிறான். இதில் தனிமைக்கு இடம் எங்கே வந்தது? வானம் பூமி என்கிற சக்திகள், பிரும்மாண்டமான சக்திகள் எப்படி மனிதனை ஆட்டிவைக்க முயலுகின்றன என்பதை ஆராய்ச்சி செய்வது முடிவில்லாத ஒரு காரியம். அந்தக் காரியத்தைச் செய்து கொண்டிருப்பவன் தனிமை என்பதையே உணர மாட்டான்.

இயற்கையின் ஒரு பரிசோதனையின் புருஷர்களாகிய நாம் கொஞ்ச நாள் மற்ற மனிதர்களுடன் வம்பும் சில்லரைப் பேச்சும் பேசாமல் உயிர் வாழ முடியாதா? நம்

சிந்தனைகளைத் தவிர நமக்கு இன்பமூட்ட வேறு என்ன தேவை. "நற்குணம் தனியாக இயங்குவது அல்ல. அது அநாதை தல்ல. அதற்கு நிச்சயம் அண்டை அசலார் உண்டு" என்றான் கன்பூசியஸ்.

செயல்களும் அவற்றின் விளைவுகளும் காட்டாற்று வெள்ளம் போல நம்மைத் தொடாமலே போகலாம். ஒதுங்கி நின்று நடப்பதை யெல்லாம் பார்த்துக் கொண்டிருப்பவன் ஞானி. என்றால் என்னிடமிருந்தே விலகி நின்று என் செய்கைகளையும் சிந்தனைகளையுமே பார்க்க முடியும். இயற்கைக்கும் அடிமைப்பட வேண்டியதில்லை. ஆற்றிலே மிதந்து ஓடும் கட்டையல்ல நான். வானத்திலிருந்து இங்கு நடப்பதை யெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கும் இந்திரனாக இருக்கலாம் நான். என்னில் ஒரு பகுதி தனியாக நிற்கவே விரும்புகிறது—என்னிடமிருந்து கூட ஒதுங்கி நிற்கவே முயலுகிறது.

என் பொழுதில் பெரும் பகுதியைத் தனியாகக் கழிப்பதென்பது மிகவும் நல்ல விஷயம், உடல் நலத்துக்குகந்த விஷயம் என்று எண்ணுகிறேன் நான். மிகச் சிறந்த மனிதர்களுடன் இருப்பதும் கூடச் சில சமயம் அலுக்கிறது, தனிமையைக் காட்டிலும் சிறந்த தோழனை நான் கண்டதில்லை, சாதாரண மக்களுடன் இருப்பதென்பதே என்னைப் பற்றிய வரையில் சிரமசாத்தியமான காரியம் தான். தனியாக இருப்பதைவிடக் கூட்டத்தில் போயும் தனியாக இருப்பது தான் மிகவும் வருத்தப்படத் தக்க விஷயம். மக்களில் பெரும்பாலோர் அப்படித்தான் என்று சொல்லவும் வேண்டுமா? சிந்திப்பவனும் வேலை செய்பவனும் எந்தக் கும்பலில் இருந்தாலும் தனியாக இருந்தே தீரவேண்டும். அதைத் தவிர்க்க முடியாது. வேலை யிருப்பதனால் தனிமை என்று எதுவும் தெரிவதில்லை. மாணவன், கேம்பிரிட்ஜ் கல்லூரியில் ஆயிரம் பேருடன் கூச்சலிட்டுப்

பழகினாலும், படிக்கும்போது, தானே தனிமையில் தான் படித்தாக வேண்டும்.

சமுகம் என்பதில் சந்திப்பு என்பது அடிக்கடி நிகழ்ந்து விடுகிறது, நேற்றுக் கின்று வளராதவர்கள் மணிக்கொரு தரம் சந்தித்துப் பேசிக் கோண்டால் தான் என்ன ? புது மதிப்பு என்ன ஏற்பட்டுவிடக் கூடும் அவர்கள் பேச்சுக்கு! ஒருவருக்கொருவர் காலிடறிவிட்டுக் கொள்வதைத் தவிர வேறு எதையும் செய்ய முடியாது மனிதக் கும்பலிலே. ஒருவருக் கொருவர் உள்ள மரி யாதைகூடச் சில சமயம் நழுவிப் போய்விடுகிறது கிரா மத்துச் சந்தையிலே, ஏன் மனிதர்கள் இப்படி அடிக்கடி ஒருவரை ஒருவர் தேடி அலேகிறார்கள். கையால் தொட் டால் தான் நெருங்கிப் பழகியவர்கள் என்று ஏற்படுமா ?

காட்டிலே செத்துக் கொண்டு, பட்டினியாகக்கிடப் பவன் கூடத் தனியாக இருப்பதில்லே. அவன் அகக் கண் முன் எத்தனேயோ காட்சிகள் படம் ஓடுகின்றன. பகற் கனவில், பித்தக் கனவில் வருகிறவர்களேயும் உண்மை யான மனிதர்கள் என்று எண்ணியே அவன் தனிமை யில் உயிர் விடுகிறான். இப்படிப்பட்டவனேப் போல அல் லாமல், உயிர் வாழ்கிறபோதும்கூட, நாம் நம் கற்பனேயில் நமக்குகந்த நண்பர்களேத் தேடிக்கொள்ள முடியும்.

தனியாக இருக்கிற இந்த ஏரிக்குத் துணேவர்கள் யார் ? சூரியன் கூடத் தனியாகத்தான் வானிலே மிதந்து வருகிறது. கடவுளும் தனியாள்தான். சைத்தான்தான் தனிமையை விரும்பாதவன். அவன் எங்கும் என்றும் தனியாக இருப்பதில்லே, அவன் தன் சிஷ்யர்கள் புடை சூழத்தான் எங்கும் கிளம்புவான் ; தவிரவும் அவன் சிஷ் யர்களும் ஏராளமான பேர் இருக்கிறார்கள். பூவிலிருந்து பூவுக்குத் தாவிப்பறக்கிறதே அந்தப் பூச்சி—அதையும் விடத் தனியாகவா நான் இருக்கிறேன் ?

மனிதனும் என்னைத் தேடி வராமல் இல்லை. ஒரு கிழவன், இந்தப் பகுதிகளில் வெகுநாட்களாக வசிப்பவன்; வால்டன் ஏரியை வெட்டி ஆழப்படுத்தியவன். சில சமயம் வருவான். பழைய காலத்துக் கதைகளையும் வரும் காலத்தைப் பற்றிய கதைகளையும் அவன் எனக்குச் சொல்கிறன். அறிவாளி அவன்; ஹாஸ்ய உணர்ச்சியுள்ளவன். இப்போது அவன் இறந்துவிட்டான் என்று சொல்லுகிறர்கள்; ரகசியமான மனிதன் அவன், எங்கு புதைத்திருக்கிறது அவனை என்றுகூட யாருக்கும் தெரியாது. வயதான ஒரு கிழவியையும் தெரியும் எனக்கு. அவள் வேறு யார் கண்களிலும் படமாட்டாள். அவள் கதைகள் உலகம் பிறந்த நாள் முதல் வழக்கிலிருந்து வருபவை. மனித குலத்தையும் தாண்டிய வயதுள்ளவள்—மனிதகுலம் அழிந்த பிறகும் வாழ்ந்தாலும் வாழ்வாள் அவள்.

இயற்கை இழைக்கும் நன்மையும், தரும் ஆறுதலும் விவரிக்கும் தரமானதல்ல. என்றும் தயாராக இருக்கிறது இயற்கை எல்லோருக்கும் நட்புரிமை காட்ட. கோடையும் மாரியும், சூரியனும் காற்றும், மழையும் நித்தியமான நண்பர்கள் அல்லவா? மனிதன் துயரத்தில் ஆழ்ந்திருந்தால் அவனைத் தேற்ற இயற்கையைப் போல வன்மையுள்ளது வேறு என்ன இருக்கிறது இந்தப் பூமியில்? நான் வாழும் மண்ணுடன் என்னல் நட்புப் பாராட்ட முடியாவிட்டால் நான் எப்படி வாழமுடியும்?

வீட்டு வைத்தியத்திலே சிறந்தது பாட்டி வைத்தியம். எல்லாவற்றிற்கும் தாயான இயற்கைப் பாட்டி நமக்குத் தரக்கூடிய மருந்தைவிடச் சிறந்த மருந்து, உடலுக்கும் உள்ளத்துக்கும் வேறு என்ன இருக்க முடியும்? நான் மற்ற மருந்துகளைச் சாப்பிடவே தயாராக இல்லை.

# பார்க்க வந்தவர்கள்

மனிதர்களுடன் அளவளாவுவதை மற்றவர்கள் போலவே நானும் விரும்புகிறவன்தான். பேச யாராவது அகப்பட்டு விட்டானுனல் லேசில் விட்டுவிடமாட்டேன். சுபாவத்தால் நான் துறவியல்ல.

என் வீட்டில் மூன்றே நாற்காலிகள்தான் உண்டு—ஒன்று தனிமைக்காக; இரண்டாவது நட்புக்காக; மூன்ருவது கூட்டமாக யாராவது வந்து சேர்ந்தால் சமூகமாகப் பேசுவதற்கு. மூணுவது ஆசாமிக்கு மேல் யாராவது வந்துவிட்டால், நின்று கொண்டோ அல்லது இருக்கிற இடத்தில் ஒண்டிக் கொண்டோதான் பேசவேண்டும். ஒரு சிறிய வீட்டில் எத்தனை பெரிய மனிதர்கள் ஒரே சமயத்தில் உட்கார்ந்து அளவளாவலாம் என்பது வியப்புக் குரிய விஷயம்தான். ஒரு சமயத்தில் என் வீட்டில் இருபத்தைந்து முப்பது ஆத்மாக்களுக்கும் அவற்றின் உடல்களுக்கும் இடம் இருந்திருக்கிறது. ரொம்பவும் நெருங்கி நின்றதாகக்கூட எனக்கு ஞாபகம் இல்லை. பெரிய பெரிய மாளிகைகளிலெல்லாம் தேவைக்கும் அதிகமான இடம் இருப்பது மாதிரித்தான் எனக்குத் தோன்றுகிறது. அங்கு மனிதர்கள் வந்து நின்ருல், ஏதோ பூச்சிகள் வந்து நிற்பதுபோல இருக்குமே தவிர வேறு அல்ல, சுண்டெலிகள் நடமாடுவதற்கென்று யாராவது மாளிகைகள் கட்டிவைப்பார்களா என்ன ?

பெரிய பெரிய வார்த்தைகளில் பெரிய பெரிய விஷயங்களைப்பற்றி வியவஹரிக்கும்போது மட்டும் இருவரும் வெகு தூரத்துக்கப்பால் இருந்துகொண்டு உரக்கப் பேசினல் நல்லதல்லவா என்று தோன்றும். இறக்கைகள் கொண்டு பறக்கும் வார்த்தைகளும் சிந்தனைகளும் பறந்து

வந்து உட்காருவதற்கு எல்லையற்ற வானப் பரப்பு தேவை என்று எனக்குத் தோன்றும். பெருங்கடல்களில் மிதக்கவேண்டிய கப்பல்கள் வீட்டுத் தண்ணீர் தொட்டிகளில் மிதந்தால் எப்படி இருக்கும்—அப்படியிருக்கும் எனக்கு. நிர்மாணிக்கும் வார்த்தைச் சிந்தனை கட்டிடத்துக்கு அஸ்திவாரம்போட்டுத் தூண்கள் நிறுத்தி ஒன்றன் மேல் ஒன்ருக அடுக்குகள் கட்டிக்கொண்டு போவதற்கு இந்த அறை லாயக்கானதல்ல என்று நான் நினைப்பேன். அர்த்தமற்றப் பேச்சு பேசுகிறவர்கள்தான் நெருங்கி வந்து பேச முடியும்; மற்றவர்கள் விலகி நின்று பேசுவதுதான் நியாயம். சொந்த விஷயங்களை மறந்துவிட்டு விவாதங்கள் நடத்துவதற்கும் நமக்கு விசாலமான ஒரு கூடம் தேவைதான்.

எனக்குச் சொந்தமான "அறைகளிலே" மிகச் சிறந்தது என்று நான் நினைப்பது வீட்டுக்குப் பின் இருந்த பைன்காடு தான். இயற்கையே தன் அற்புதமான அடிமைகளை அனுப்பி அந்த இடத்தைச் சுத்தமாக வைத்துக் கொண்டது. பெயரும் புகழும்பெற்ற விருந்தாடிகள் கோடை காலத்தில் என்னைத் தேடி வந்தால் நான் அவர்களை அந்த அறைக்கு அழைத்துச் சென்றுவிடுவேன்.

வந்தது ஒருவர்தான் என்ருல் செட்டான என் உணவை அவரும் பங்கிட்டுக் கொள்ளலாம். அதற்காகப் பேச்சு மட்டும் நிற்காது. இருபது பேர் வந்துவிட்டால் யாரும் சாப்பாட்டைப் பற்றிப் பேச்செடுப்பதில்லை. விருந்தாடிகளை உபசரிப்பதில் நான் தவறிவிட்டதாக யாரும் நினைப்பதில்லை. இதுதான் நியாயமான விஷயம் என்று என்னைப் பார்க்க வருபவர்களும் எண்ணிஞர்கள். ஒருத்தருக்குமே அங்கு பசிக்காதமாதிரித்தான். இருபது பேருக்கு மட்டுமல்ல; ஆயிரம் பேருக்கும் என்

ஞல் என் வீட்டில் பேச்சு விருந்து அளித்து உபசரித்து அனுப்பிவிட முடியும்.

நான் அந்த வீட்டில் வசிக்கும்போதுதான் என் ஆயுளிலேயே என்னைப் பார்க்க அதிகம்பேர் வந்தார்கள் என்று நினைக்கிறேன். அதாவது மற்ற நாட்களில் யாரும் வந்ததில்லை; அப்போதுதான் சிலர் வந்தார்கள் என்கிற அர்த்தத்தில் சொல்லுகிறேன் நான். வந்தவர்கள் யாரும் அல்ப விஷயங்களை எண்ணி வந்தவர்கள் அல்ல. நகருக்கு அருகில் இல்லாத காரணத்தினுலே தான் அல்ப விஷயங்கள்பற்றி வந்த விருந்தாடிகள் குறைவாக இருந்தனர் என்று நான் நினைக்கிறேன்.

இன்று காலையில் வந்தவனை ஹோமரின் காவியங்களில் வருகிற கதா பாத்திரங்களில் ஒருவனுகச் சொல்லவேண்டும். ஒரு கனடியன்—மரம் வெட்டுபவன் அவன். கவித்வம் நிறைந்த அவன் பெயரை இங்கு என்னுல் சொல்லக்கூடவில்லை. அவன்கூட ஹோமரைப்பற்றிக் கேள்விப்பட்டவன்தான். புஸ்தகங்களில்லாவிட்டால், மாரிக்காலத்தை எப்படிக் கழிக்க முடியும் என்று அவன் என்னைக் கேட்டான். புஸ்தகத்தை அவன் பிடித்துக் கொண்டான்; கிரேக்க கவிதையை வாசித்து நான் அர்த்தம் சொன்னேன் அவனுக்கு. "நன்ருக இருக்கிறது" என்ருன் அவன். ஹோமர் எதைப்பற்றியெல்லாம் எழுதினுன் என்பது அவனுக்குத் தெரியாது. ஆனுல் நல்ல கவி எழுதினுன் என்பது தெரியும். இயற்கையோடு இசைந்துவாழ இதைவிட லாயக்கான வேறு எளிய மனிதனைக் காண்பது அரிது என்று எனக்குத் தோன்றியது. தீய செயலில் ஈடுபடாதவன்; வியாதி காணுதவன். வயது இருபத்தெட்டிருக்கும். தடித்த தாமஸம் நிறைந்த உடல். ஆனுல் அவன் நகருவதே அசைவதே ஒரு கவியாக இருந்தது. நிறைய மாமிசம் சாப்பிடுகிறவன் அவன்; ஒரு பருவம்

பூராவும் அவன் என் வீட்டைத் தாண்டி தினமும் காட்டுக்குள் சென்று விறகு வெட்டினுன்; தன் உணவைத் தானே கையில் எடுத்துக்கொண்டு வந்துவிடுவான். ஒரோரு சமயம் எனக்கும் அவன் ஒரு வாய் காபி கொடுப்பான். அவசரப்படுகிற மனிதன் அல்ல அவன்; ஆனுலும் அதிகாலையிலேயே வந்து விடுவான். தேவையானதற்கு அதிகமாகச் சம்பாதிக்க முடியவில்லையே என்று அவன் என்றும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அவன் வேலையில் அவன் கெட்டிக்காரன். சில சமயம் மரம் வெட்டுவதைக்கூட அலங்காரமாக ராயஸமாகச் செய்வான் அவன்.

சாந்தியும் தனிமையும் நிறைந்த மனிதன் அவன். சந்தோஷமாக இருந்தான். அதனுல்தான் எனக்கு அவனிடம் ஒரு பிடிப்பு ஏற்பட்டது. திருப்தியும் ஆனந்தமும் அவன் உடலில் நிரம்பிக் கண்கள் வழியாக வழிந்தன. அவன் சிரிப்பே கலகல வென்று இருக்கும். என்னைப் பார்த்தவுடனேயே ஆனந்தம் பொங்கும் அவனுக்கு; சிரித்துக் கொண்டேதான் வணக்கம் சொல்வான். '' இங்கே மரம் வெட்டுவதைவிட ஆனந்தமான வாழ்க்கை எனக்குத் தேவையில்லை '' என்பான் அவன்.

அவன் மிருகப் பிராயத்தைத் தாண்டாத மனிதன் தான். அதாவது பொறுமையிலும் பலத்திலும் பைன் மரங்களுக்கும் கற்பாறைகளுக்கும் ஒப்பானவன். அவனுக்குக் களைப்பு என்பது கிடையாது. போதுமென்ற மனமும், வலுவுள்ள உடலும் அவனுக்குக் கிடைத்திருந்த ஐசுவரியங்கள். ஒரு புகழ்பெற்ற அறிஞன் அவனை ஒருதரம் பார்த்து “இந்த உலகம் சீர்கேடடைந்திருக்கிறதே—அதை மாற்ற ஏதாவது முயற்சி செய்யவேண்டாமா ?” என்றுனும். “ இப்படி இருப்பதே எனக்குத் திருப்தியாக இருக்கிறதே !” என்றுனும் இந்த மரம்வெட்டி. அவன் பணிவும் அன்பும் உள்ளவன். எழுதுகிறவர்களிடமும் அறிஞர்களி

டமும் அவனுக்கு அளவு கடந்த பிரேமை. நான் எழுதுகிறேன் என்று அறிந்து ஆச்சரியத்தில் ஆழ்ந்தான் அவன். எழுதுவது என்றால் வெறும் காபி எழுத்து என்றுதான் அவன் முதலில் நினைத்தான். சிந்தனைகளை வெளியிடச் செய்யும் முயற்சியே எழுத்து என்று அவனுக்குச் சொல்லித் தரவேண்டியதாக இருந்தது. அவன் சிந்தனைகளை எழுதவேண்டும் என்று அவனுக்கு நினைப்பு உண்டா என்று நான் கேட்டபோது அவன் மூர்ச்சையே போட்டு விழுந்து விடுவான் போல இருந்தது. பொது விஷயங்களைப் பற்றி அவனுக்கு அறிவு போதாது என்றுதான் முதலில் அவனைச் சந்திப்பவர்களுக்குத் தோன்றும். அவன் ஷேக்ஸ்பியர் போல அறிவாளியோ, குழந்தையைப் போல அறிவிலியோ, அது எனக்கு நிச்சயமாகத் தெரியாது. அவனைப் பார்த்தவர்கள் அவன் யாரோ ராஜகுமாரன்—மாறு வேஷம் அணிந்துகொண்டு நடமாடுகிறான் என்றுதான் நினைப்பார்கள்.

அவனிடம் இருந்த நூல்கள் இரண்டுதான். ஒன்று பஞ்சாங்கம், இரண்டாவது கணக்குப் புஸ்தகம். அவனுடைய கலைக் களஞ்சியம் அந்தப் பஞ்சாங்கம்தான். கணக்கிலே அவன் நிபுணன் என்றுதான் சொல்லவேண்டும். நாட்டில் இந்த நாட்களில் நடந்து கொண்டிருக்கும் பல சீர்திருத்தங்களைப் பற்றி அவன் என்ன நினைத்தான் என்பதை அறிந்து கொள்வதற்காக நான் அவன் வாயைக் கிளறுவேன். தொழிற்சாலைகளைப் பற்றி அவன் அபிப்பிராயம் என்ன? மில் துணிகள் நன்றாகவே இருந்தன என்றான் அவன். டீயும், காப்பியும் இல்லாமல் அவனால் இருக்க முடியாதா? முடியும்; ஆனால் தண்ணீர் மட்டும் குடிப்பது போதவில்லை. வேறு ஏதாவது தேவைதான் என்றான். பணத்தைப் பற்றி அவன் அபிப்பிராயம் என்ன? பணம் என்கிற சாதனம்பற்றி அவன் சொன்ன விஷயங்

கள் எந்தப் பேராசிரியரின் பொருளாதார ஆராய்ச்சி முடிவு களுக்கும் மட்டமானதல்ல. எருதைக் கொண்டுபோய்க் கொடுத்து ஊசி வாங்குவதானால் அசௌகரியமாக இருக் காதா? பண்டமாற்று அசௌகரியமானது என்று அபிப் பிராயப்பட்டான் அவன். பல அறிவாளிகளையும் விட அதிக அறிவுடன் அவன் பல ஸ்தாபனங்களின் அவசியத் தைப் பற்றி அலசிச் சொன்னான். வாழ்க்கையை ஒரு ஆத் மீகமான நோக்குடன் அவனைப் பார்க்கச் செய்ய நான் செய்த முயற்சிகள் சிறிதும் பலன் தரவில்லை. "திருப்தி என்பது என்ன? ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு விஷயத் தில் திருப்தி" என்றான் அவன். அவன் வாழ்க்கையை மாற்றி அமைத்துக் கொள்வதுபற்றி ஏதாவது சொன்னால், "வயதாகி விட்டது" என்று பதில் சொல்லி விடுவான் அவன்.

அவன் வாழ்க்கையைப் பார்த்த் பார்வையிலே ஒரு சிறு அளவில் தனித்தன்மை இருந்தது என்றுதான் எனக் குத் தோன்றிற்று. தன் நோக்கையும், தன் வாழ்க்கையை யும் தவிர அவனுக்கு வேறு எதிலும் கவனமே கிடை யாது. பிறர் என்ன சொன்னார்கள், என்ன செய்தார்கள், என்ன நினைத்தார்கள் என்பதைப் பற்றி அவன் கவலைப் படுவதே கிடையாது. நாணயம், உண்மை என்பது போன்ற சாதாரண நல்ல குணங்களில் அளவு கடந்த நம் பிக்கையுள்ளவன் அவன். அவன் சிந்தனை அளவு ஆதி மனிதனின் அளவுதான்; வேகமும் அவ்வளவே. எழு தப் படிக்க அறியாத தாழ்ந்த வர்க்கத்தினரிடையிலும் கூட ஞானிகள், அறிவாளிகள் தோன்றக் கூடும் என்ப தற்கு அவன் சிறந்த ஒரு உதாரணம் என்று நான் நினைத் தேன்.

வேறு பலரும் என்னைப் பார்க்க வந்தார்கள். வேறு அலுவ லில்லாவிட்டால் "தண்ணீர் கொடு குடிக்க"

என்று கேட்டுக் கொண்டு வருவார்கள். ஏரியில் ஜலம் சாப்பிடுவது வழக்கம் என்று ஏரியைக் காட்டுவேன் நான். ஏப்ரில் மாதத்தில் பலர் வருவார்கள்; ஸெமி கிராக்குகள் வந்தார்கள்; அவர்களுடைய அறிவையும் நோக்கையும் ஆராய்ந்து அறிவதிலும் நான் கவனம் செலுத்தினேன். அவர்கள் நமது பொது வாழ்வைக் காப்பாற்றுவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மனிதர்களைவிட அதிக அறிவுள்ளவர்கள் தான் என்று எனக்குச் சில சமயம் தோன்றும். இந்த அரைக் கிராக்குகளை வைத்துக்கொண்டு ஒருநகரத்தை நிர்வகித்தால் எப்படி இருக்கும் என்று சிந்தித்துப் பார்ப்பேன் நான்.

நகரின் ஏழைகள் கோஷ்டியில் சேராத சில ஏழைகளும் என்னைப் பார்க்கவந்தார்கள். என் உதவி அவர்களுக்குத் தேவை, கிடைக்குமா என்று கேட்டுக் கொண்டு வந்தார்கள். யார் உதவி செய்தாலும் செய்யாவிட்டாலும் அவர்களுக்கே உதவி எதுவும் செய்து கொண்டுவிட மாட்டார்கள், தருமம் தேடி வருபவர்களை விருந்தாடிகளாக வரவேற்கக் கூடாது. அறிவிலிகளைப் போலவே அறிவுள்ளவர்களும் அதிக அறிவு படைத்தவர்களும் வந்தார்கள். "கிறிஸ்துவ மனிதனே, என்னைத் திருப்பி அனுப்பிவிடுவாயா?" என்று கேட்பவர்கள் போல என்னைப் பார்த்தார்கள். ஒரு அடிமையை நான் வடக்கேயனுப்ப ஏற்பாடு செய்தேன். ஆயிரமாயிரம் யுக்திகளும் குறுக்கு வழிகளும் அறிந்த மனிதர்கள் பலர் வந்தார்கள். அவர்களுடைய அறிவின் நூற்றுக்கணக்கான கால்களைக் கண்டே நான் பயப்பட வேண்டியதாக இருந்தது.

பெண்களும், பையன்களும், வாலிபர்களும், யுவதிகளும் காட்டில் புகுந்து வருவதில் ஆனந்தமடைந்தவர்களாக வந்தார்கள். மலர்களையும் மலைகளையும் விழித்துப் பார்த்து ஆனந்தப்பட்டார்கள். வேலை, கூலி, வியாபாரம்

என்கிற சிந்தனையுடனேயே காட்டு வழிகளிலே நடந்தவர்கள் வந்தார்கள். அமைதி யற்றவர்கள் வந்தார்கள். வேலைக்குக் கூலி தந்த யசமானைப்பற்றிப் பேசுகிறவர்கள் போலக் கடவுளைப் பற்றிப் பேசிய மத போதகர்கள் வந்தார்கள். என்னை அலுத்துக் கொள்ளச் செய்த மனிதர்கள் பலர் வந்தார்கள்.

கலகல வென்று சிரித்துச் கொண்டு குழந்தைகளும், ஞாயிறு காலையில் சுத்தமான உடைகளை அணிந்து கொண்டு கூலிவேலை செய்பவர்களும் வந்தார்கள். வேடுவர்கள், செம்படவர்கள், கவிகள், ஞானிகள்—பலர் வந்து போனார்கள். சுருங்கச் சொல்வதென்றால், சுயேச்சையாக இருக்க வேண்டும் என்று காட்டுக்கு வந்த யோக்யமான யாத்ரீகர்கள் அனைவரையும் நான் வரவேற்றேன்.

## கிராமம்

காலை வேளைகளில் வேலைகளை முடித்துக் கொண்டு மாலையில் சில சமயம் நான் கிராமத்தை நோக்கிப் போவேன். வம்புப் பேச்சுக் கேட்கப்போவேன். இந்த வம்புப் பேச்சுக்கு மருத்துவமான ஒரு குணம் உண்டு. தினம் காதில் போட்டுக் கொண்டு பழக்கமாகப் பண்ணுத வரையில் வம்புப் பேச்சிலிருந்தும் கூட அறிவாளி சில விஷயங்களை அறிந்து கொள்ளலாம். பறவைகளையும் மிருகங்களையும் பார்க்க மனிதர்கள் காட்டில் திரிந்ததைப்போல நான் மனிதர்களைப் பார்க்கக் கிராமத்திற்குப் போனேன். புனுகு எலிகளின் பொந்துகளில் எலிகள் வசிப்பது போலத்தான் கிராமத்தில் மனிதர்கள் வசிக்கிறார்கள் என்று எனக்குத் தோன்றும். நாள் பூராவும் வம்பு பேசுவதைத் தவிர வேறு ஒரு காரியமும் செய்யாதவர்கள் பலர்

அங்கிருக்கிறார்கள். அவர்கள் இந்த வம்பை அனுபவிப்பது போல உலகில் வேறு எவனும் வேறு எதையும் அனுபவித்திருக்க முடியாது என்பது நிச்சயம். காற்று வீசுவது கூட அவர்கள் காதில் புதுச் செய்தி ஒன்றைக் கொணர்ந்து தருவது மாதிரித்தான். மளிகைக் கடை, குடிக் கடை, தபாலாபீஸ், பாங்கு எங்கு பார்த்தாலும் வம்புப் பேச்சு மயமாகத் தான் இருக்கிறது. ஊரிலே ஒரு மணி, ஒரு நெருப்பு அணைக்கும் யந்திரம், ஒரு பீரங்கி எல்லாம் இருக்கின்றன. யார் எங்கே கிளம்பினாலும் யார் மேலாவது தடுக்கி விழாமல் நகர முடியாது. அதிக நெருக்கமான இடத்தில் உள்ள வீடுகள் தான் விலை அதிகமானவை. மத்தியில் இல்லாமல் தூரத்தில் ஓரத்தில் இருந்த வீடுகளுக்குக் கிராக்கி கிடையாது. சில சமயம் தரைக்குப் பணம் கூடத் தராமல் சொந்தமாக வாங்கிக் கொண்டுவிடலாம். ஊருக்கு வருகிறவனை வலை போட்டுப் பிடித்து விடுவதற்காக எங்கும் விளம்பரப் பலகைகளும் பெயர்ப் பலகைகளும் தொங்குகின்றன. அவசியமானவையான உணவுக் கடைகள், ஆடம்பரமான நகை வியாபாரிகளின் கடைகள், மற்றும் சில்லரை சாமான் கடைகள், பரியாறி, சக்கிலி, தையற்காரன் கடைகள் எல்லாம் இருக்கின்றன. இவற்றைத் தேடிக்கொண்டு வருபவனைப் பிடித்துக் கொண்டு, பணத்தைக் கரந்துவிடுவது என்பது தான் ஊரின் உத்தேசம். இதெல்லாம்விடப் பயங்கரம் என்ன வென்றால், குறிப்பிட்ட ஒரு நேரத்தில், எந்த வீட்டுக்குள் வேண்டுமானாலும் நீ போய், யாரோடு இஷ்டமானாலும் சம்பாஷணை செய்து விட்டு வரலாம். நான் இந்த ஏமாற்று வலைகளிலெல்லாம் விழாமல் பெரும் பகுதியும் தப்பித்துக்கொள்கிறவன் தான். ஸைரன்களிடமிருந்து ஆர்பியஸ் தப்பிய மாதிரி, நானும் என் சிந்தனைகளை எங்கேயோ ஓட விட்டு விட்டு இந்த வலைகளிலிருந்தெல்லாம் தப்பிவிடுகிறேன்.

தப்ப முடியாது என்று தோன்றினல் சில சமயம் நான் முன் கூட்டியே ஓடிவிடுவதும் உண்டு தான். சில வீடு களை நான் அணுகும் போதே என்னை வரவேற்றுச் செய்தி களைச் சொல்வார்கள்--அடங்கியது என்ன, யார், சண்டை வருமா வராதா, உலகம் அழிவது எப்போது என்பது போன்ற பல சுவாரசியமான செய்திகளை அவர்கள் வாயி லாக அறிந்து கொண்டு நான் காட்டுக்குத் திரும்பி விடுவேன்.

இரவில் கிராமத்திலே நடமாடுவதென்பது இன்ப மான பொழுது போக்கு. காட்டில் போல இங்கு அவ் வளவு இருட்டாக இல்லை. ஆனல் காட்டில் போலவே இங்கும் வழிகளைக் கண்டு கொள்வது சிரமமாகத் தான் இருக்கிறது. காட்டில் இருட்டில் வழி தவறிவிடுபவர்கள் பலர் உண்டு. இங்கு உதவி செய்ய ஆள் அரவம் இருக் கிறது. வழக்கமான வழிகள் தவறிவிட்டால் இருளில் போகவேண்டிய இடத்துக்குப் போவதென்பது, காட்டி லும் சரி, கிராமத்திலும் சரி, கொஞ்சம் சிரமமான காரியம் தான். கிராமத்திலும் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்ட மாதிரித்தான் இருக்கிறது.

ஒரு நாள் மாலை நான் செருப்பு வாங்க கிராமத்துக் குப் போனபோது என்னைப் பிடித்துச் சிறையில் அடைத்து விட்டார்கள். நான் ஒரு வரி கொடுக்கவில்லை என்பதற்காக ஆடுமாடுகளை விலைக்கு விற்பதுபோல ஆண்களையும் பெண் களையும் குழந்தைகளையும் விலைக்கு வாங்கி விற்று வியா பாரம் செய்யும் சர்க்காரின் அதிகாரிகள் என்னைச் சிறை யில் பிடித்துப் போட்டுவிட்டார்கள். தங்கள் சமூகத்தை யும் சமுதாயத்தையும் விட்டு விலகி நிற்க விரும்புகிற மனி தனையும் கூடச் சும்மாவிட மாட்டார்கள் இந்த சர்க்கார் அதிகாரிகள். நான் சிறைப்பட மறுத்து நாலு பேர் மண் டையை உடைத்திருக்கலாம். வரியை வசூல் செய்யும்

சிரமத்தைப் படைத்த சர்க்கார் தான் தன் மண்டையை உடைத்துக் கொள்ளட்டுமே என்று நான் பேசாதிருந்து விட்டேன். ஆனால் என்னை மறு நாளே விடுதலை செய்து விட்டார்கள். சாப்பிட நான் என் வீடு போய்ச் சேர்ந்து விட்டேன், செருப்புடன். எனக்கு யாரும் எவ்விதத் தீங்கும் விளைவித்தது கிடையாது; என் மேல் யாரும் கை வைத்தது கிடையாது; சர்க்கார் அதிகாரிகளைத் தவிர. பூட்டோ சாவியோ கிடையாது என்னிடம். எந்தக் கத வையும் எப்போதும் சாத்தித் தாளிட்டதே கிடையாது நான். என் வீட்டுக்கு வராமல் பல நாள் இருந்திருக் கிறேன். அப்பொழுதும் வீடு திறந்து தான் கிடக்கும். யாரும் துணிந்து எதுவும் திருடியதில்லை. களைத்து வந்த வன் படுத்து உறங்கிவிட்டு ஒய்வு எடுத்துக் கொண்டு களை நீங்கிப்போகலாம். வாசிக்கத் தெரிந்தவன் என் மேஜை மேல் கிடந்த நூல்களை வாசித்து இன்புறலாம். நான் பத்திரப்படுத்தி யிருந்த உணவை வேண்டுமானால் பசித் தவன் சாப்பிடலாம். ஒரே ஒரு சமயம் என் புஸ்தகங் களில் ஒன்று கெட்டுப் போயிற்று. அதைத் தவிர எதை யும் நான் இழந்ததில்லை. மனிதர்கள் எல்லோருமே என் னைப் போல எளிய வாழ்வு வாழத் துணிந்து விட்டார் களானால், கொலை களவு ஒன்றுமே இராது இந்த நாட்டில். தேவைக்கு அதிகமாகச் சேமித்து வைத்துப் பூட்டிக் கொண்டிருப்பவர்கள் உள்ள இடத்திலே தான் திருட்டும் புரட்டும் இருக்க முடியும். "தண்டனைகள் எதற்காக? அவை தேவையே யில்லை. அதிகாரிகள் நற்குணங்களை நேசித்தார்களானால் மக்கள் குணசாலிகளாக இருப்பார் கள். சாதாரண மக்கள் புல் போன்றவர்கள்; அதிகாரிகள் எனப்படும் மேன் மக்கள் காற்றுப் போன்றவர்கள். காற்று அடிக்கிற பக்கம் தான் புல் சாயும்."

# மேலான விதிகள்

காட்டு வழிகளிலே நடக்கும் போது சில சமயம் காட்டு மனிதன் போல எதிர்ப்படுகிறதைக் கொன்று அப்படியே அதன் மாமிசத்தைத் தின்ன வேண்டும் என்று எனக்கு ஒரு வெறி தோன்றும். மேலான வாழ்வு வாழ்வதற்கு, ஆத்மீகமான வாழ்வு என்று சொல்லப்படுவதை வாழ்வதற்கு என்னுள்ளே ஒரு வேகம் இருக்கிற மாதிரி ஆதி மனிதனின் வாழ்வை வாழ்வதற்கும் ஒரு வேகம் இருக்கிறது. இரண்டுமே மதிப்புக்குரிய விஷயங்கள் என்று தான் நான் எண்ணுகிறேன், அடிமைப்படாததை நான் மதிக்கிறேன்; அதேபோல நல்லதையும் மதிக்கிறேன். வீரம் என்று ஆதி மனிதர்கள் போற்றியது எனக்கு இன்று பிடித்தமானதாக இருக்கிறது. மிருகங்கள் போல வசிக்க வேண்டுமென்று கூடச் சில சமயம் எனக்கு ஆசை தோன்றுவதுண்டு. இப்படிச் சில சமயம் வாழ்ந்த காரணத்தினுல் தான் இயற்கையைப் பற்றி என்னுல் ஓரளவு அறிந்து கொள்ளமுடிந்தது என்று நான் எண்ணுகிறேன். மற்றப்படி எனக்குத் தெரிய வரவே வராத பல விஷயங்களை நான் அறிந்து கொண்டேன். நேரடியாகத் தெரிந்து கொள்கிற விஷயங்களைப்போல நாம் படித்து எதையுமே அறிந்து கொண்டுவிட முடியாது.

இங்கு நம்மிடையே விடுமுறைகள் அதிகம் கிடையாது என்பதனுல் நமக்குப் பொழுது போக்குகளும் அதிகம் கிடையாது என்று சொல்வது உண்மையாகாது. மீன் பிடிப்பது வேட்டையாடுவது போன்றவை பொழுது போக்கல்லாமல் வேறு என்ன? மீன் பிடிப்பவர்களையும் வேடர்களையும் தான் தங்கள் சமுகத்திலே சிறந்த மனிதர்கள் என்று அல்கான்க்வின் இந்தியர்கள் போற்றினுர்கள்; உணவுக்கு அவர்களைத் தானே எல்லோரும் நம்பியிருக்க

வேண்டியதாக இருந்தது. வேடர்களே சிறந்த மனிதர்கள் என்று எல்லா மனிதர்களுக்கும் ஒரு காலத்தில் இருக்கத் தான் இருந்தது. இப்போது அப்படி இல்லை என்பதனால் உண்மை மாறிவிடும் என்று சொல்வது பொருந்தாது. இன்றும் கூட நாகரிக மடைந்ததாகச் சொல்லிக் கொள் ளும் மனிதன் வேட்டையாடவும், மீன் பிடிக்கவும் கிளம் பிப் போகும்போது தான் இயற்கையை ஓரளவுக்காவது நெருங்குகிறான். செம்படவர்களுக்கும் வேடர்களுக்கும் கூட நமது சர்க்கார் அதிகாரிகள் விதிகள் விதிக்கத் தொடங்கிவிட்டார்களே என்பது வருந்தத் தக்க விஷ யம் தான். வால்டனை அறியாதவர்களும் கூடத்தான் தாங்கள் வாழ்ந்து விட்டதாகப் பெருமைப்பட்டுக் கொள் ளுகிறார்கள். செத்த பின் கைலாசம் சேரப்போவதாகக் கனவு காண்கிறார்கள்! அதெல்லாம் சிறிய விஷயங்கள், அவற்றை மறந்துவிட்டே இன்றைய வாழ்க்கையைத் தொடங்க வேண்டும் என்பது சிலர் நினைப்பு. அப்பாவி கள்! அறிவிலிகள்?

கொஞ்ச நாட்களாக கிராமத்துக்கு வந்து வசிக்கத் தொடங்கிய பின் மீன் பிடிப்பதில் எனக்குள்ள சிரத்தை குறைந்திருக்கிற மாதிரி இருக்கிறது. காட்டில் போய் மீண்டும் வசித்தேனானால் இந்த உற்சாகம் மறுபடி ஏற் படலாம்.

உடலுக்கு உணவு தேடுவதுபோலவே, கற்பனைக் கும் உணவு தேடுவது மிக மிக அவசியம். அதில் எனக் குச் சிறிதும் சந்தேகம் இல்லை. நம் உணவையே கற்பனை நிறைந்ததாகச் செய்துகொள்வது அவசியம் என்பது என் கக்ஷி. சாப்பிடுகிற உணவைப்பற்றிய வரையிலாவது நாம் வெட்கித் தலைகுனியாமலிருக்கப் பழகிக்கொள்ள வேண்டியது அவசியம் என்பதை எல்லோருமே ஒப்புக் கொள்வார்கள். நம் பசிகளைப்பற்றியும் நாம் வெட்கப்

படாதிருக்கத்தான் பழகிக் கொள்ளவேண்டும். தாங்களே சம்பாதித்த சாமான்களைச் சமைத்துத் தாங்களே சாப்பிடு வது என்பது அவமானத்துக் குரிய விஷயமாகப் பலரும் எண்ணுகிருர்கள் இப்பொழுது. கடையில் வாங்கிச் சாப்பிடுவதுதான் உத்தமமான காரியம் என்று எல்லோ ருமே எண்ணத் தொடங்கிவிட்டார்கள். இதுதான் வெட்கப்பட வேண்டிய விஷயமாக எனக்குத் தோன்று கிறது. தானே உற்பத்தி செய்து அல்லது வேட்டை யாடிக் கொணர்ந்து தன் கையாலேயே பக்குவம் செய்து பசி யாறுவது அநாகரிகமான விஷயம் என்று நாகரிகத்தில் முதிர்ந்திருப்பவர்கள் இன்று கருதுகிருர்கள். அப்படிக் கடையில் வாங்குகிற உணவுக்குக் கற்பனையைத் தூண் டும் சக்தி ஏது? ஆத்ம அனுபவமாக அமையும் தன்மை தான் ஏது? இன்னென்றும் எனக்குத் தோன்றுகிறது— மனிதன் வளர வளர ஆத்மீக ஏணியில் ஏற ஏற அவன் மிருகங்களையும் பக்ஷி ஜாலங்களையும் அடித்துத் தின்பதை நிறுத்திவிடத்தானே வேண்டும்? இல்லாவிட்டால் மனி தனையே அடித்துத் தின்னும் மனிதனுக்கும் அவனுக்கும் என்ன வித்தியாசம்? சுபாவமான ஒரு முன்னேற்றம் இது. இதை எதிர்த்துப் பலனில்லை என்று மனிதர்கள் அறிந்துகொள்ள வேண்டியது அவசியம். உடல் நலம் கெடுமானுலும் கூட மாமிச பக்ஷணத்தை நிறுத்திவிட வேண்டியது மனிதனின் கடமை என்று நான் எண்ணு கிறேன். இருந்தும் சாப்பிடுவதற்கு எது கிடைத்தாலும் நான் சாப்பிட்டுவிடுகிறேன். அவசியமானுல் எலியைக் கூடப் பிடித்து வறுத்துத் தின்றுவிடுவேன். ஆனுல் தண்ணீரைத் தவிர வேறு எதையும் நான் குடிப்பதில்லை. கஞ்சா போடுபவனின் கனவுகளோ, குடிகள் குடிப்பவ னின் போதையோ எனக்கு என்றுமே தேவையாக இருந் ததில்லை. அறிஞனுக்குத் தேவையானது சுத்த ஜலம்

தவிர வேறு ஒன்றும் இல்லை. காபியும் டீயும் கூட இயற்கைக்கு ஒத்துவராத குடிகள்தான். மனிதனுக்குப் போதை தேவை என்றால், எதைக்கொண்டும் அவன் போதை பெறலாம். சங்கீதம்கூட போதையும் மயக்கமும் தருகிற விஷயம் தான். நான் சாப்பிட உட்காரும்போது மதம், கொள்கைகள் என்று அவ்வளவாக எதையும் பாராட்டுவதில்லை. நாள் ஆக ஆக அலக்ஷியம் தோன்றிவிட்டது என்றுதான் வருத்தப்படுகிறேன். அது தவிர நான் அறிஞன்தான்—அதனால்தான் மதத்தின் சடங்குகள் என்னை அவ்வளவாகக் கவருவதில்லை. வேதங்களில் சொல்லப்பட்டுள்ள "பிரும்மத்தைக் கண்டவன் எதை வேண்டுமானாலும் சாப்பிடலாம்" என்கிற வாக்கியம் எனக்காகச் சொல்லப்பட்டதாக நான் நினைக்கவில்லை. நான் அவ்வளவு மேன்மை அடைந்துவிட்டதாக எண்ணவில்லை. வியாக்கியான கர்த்தாக்கள் இந்த வேத வாக்கியத்துக்கு "அவசியமான பொழுது" என்று ஒரு அர்த்தம் சேர்த்துக் கொள்கிறார்கள் என்பதையும் இங்கு சொல்லிவிடுகிறேன்.

பசியில்லாதபோதும் கூடத் தன் உணவினால் மனிதனால் திருப்தியடையாமல் இருக்க முடியவில்லை. நானும் அப்படி ஒன்றும் இந்த விதிக்கு விலக்கானவன் அல்ல. நாக்கின் ருசி என்பதும் அனுபவிக்கப்பட வேண்டிய ஒரு மனிதத் தன்மைதான் என்றே நான் எண்ணுகிறேன். சில உணவுகள் என் மேதையை வளர்க்கின்றன என்று கூட நான் சில சமயம் பெருமைப் பட்டுக் கொள்வதுண்டு. த்ஸெங் ஸு சொன்னது எல்லோருக்கும் பொருந்தும்: "தன்னையே ஆளத்தெரியாத ஆத்மாவுக்குச் சொந்தமானவன் கண்ணிருந்தும் காணாதவன்; காது இருந்தும் கேளாதவன்; நாக்கிருந்தும் உணவை ருசிக்காதவன்." ருசித்து உணவருந்துபவன் ஒரு நாளும் வெறும் சாப்

பாட்டு ராமனுக இருக்கமுடியாது. பசியைப் பக்தியுடன் வளர்த்துக் கொண்டே பட்டினி கிடப்பதைச் செய்கிற ஏமாளிகள் நம்மிடையே ஏராளமான பேர்வழிகள் இருக்கிருர்கள். நம்மை ஆத்மீகமான வாழ்வு வாழத் தூண்டு கிற உணவே நல்ல உணவு; அதை வெகுவாக ருசித்தும் சாப்பிடலாம்; அதில் தவறு ஒன்றுமில்லே.

நற்குணங்களும் தீய குணங்களும் போரிடாத விநாடி நம் வாழ்க்கையிலே கிடையாது என்றுதான் சொல்ல வேண்டும். நல்ல குணங்கள் என்பவை தான் எப் போதும் வெற்றி பெறுகிற பலன் தருகிற கட்சி என் பதை அறிந்தவர்களும்கூட வெகுவாகப் பாராட்டா திருந்து விடுகிருர்கள். அந்த அலக்ஷியம் விபரீதமானது. மனிதத் தன்மைக்கே எதிரி அது. உலகம் பூராவும் ஒரு இசைக் கருவியாக இந்தப் போரைத்தான் வீரத்துடன் பாடுகிறது. கேட்டு அறிவுடன் வாழ வேண்டியது மனிதர் களின் கடமை, மற்ற சப்தங்களில் இந்த இசையைக் காதில் வாங்காமல் இருந்துவிடுவது நல்லதற்கல்ல.

நம் மேலான அறிவு தூங்கிவிடும்போது நம் மிருகப் பிராயம் திரும்பிவிடுகிற மாதிரி இருக்கிறது. பாம்புபோல பூமியிலே ஒளிந்து ஓடும் தன்மையுள்ளது அது. பூச்சி புழுக்களின் தன்மை பெற்றது, அதை ஒடுக்கி வைக் கலாம் நாம்; ஆனுல் அதனிடமிருந்து முழுவதும் தப்பி விட முடியாது, அதன் சுபாவத்தை மாற்றிவிடச் செய் கிற முயற்சிகள் எல்லாம் வீண்தான். "மிருகங்களிட மிருந்து மனிதன் மாறுபட்டிருப்பது மிகவும் அல்பமான விஷயங்களில்தான், சாதாரண மனிதர்கள் இந்த அல்ப வித்தியாசத்தைச் சீக்கிரமே இழந்துவிடுகிருர்கள். மேன் மக்கள் இந்த வித்தியாசத்தை வெகு ஜாக்கிரதையாகப் பாதுகாத்து வளர்க்கிருர்கள்" என்று மென்சியஸ் கூறி யிருப்பது முற்றிலும் உண்மை. வேதம் என்ன சொல்

கிறது? "மனிதன் கடவுளை அணுகவேண்டுமானல் அவன் புலன்களை வெற்றிகொண்டு, அடக்கி ஆண்டு, நற்செயல்களைச் செய்வதில் கவனம் செலுத்தவேண்டும்" என்று கூறுகிறது. புலனடக்கம் என்பது மனிதனை மனிதனுக்குவதற்கு இன்றியமையாத சாதனம். அதைத் தொடர்ந்து மற்ற எல்லா நற்குணங்களும் மனிதனை வந்தடையும். அதில்லாது போனல் ஒன்றும் வராது. பரிசுத்தமானவன் தான் கடவுளை அணுகி நிற்கமுடியும். பல உருவங்கள் உண்டு புலனீடுபாடுகளில். ஆனல் அவற்றின் பலன் ஒன்றுதான். மனிதனை மிருகமாக்கவே புலன்கள் பாடுபடுகின்றன. நாணயமாக வேலை செய்து கொண்டிருப்பவனை புலன்கள் வசப்படுத்தி மிருகமாக்கி விடுவதில்லை என்பது உழைப்பின் பெருமைகளில் ஒன்று. இயற்கையை வெல்வது சிரமம்தான். ஆனல் மனிதன் இதில் வென்றே தீரவேண்டும்.

இப்படிப் பேச எனக்கு உரிமையில்லைதான். என் வார்த்தைகளில் அசுத்தம், அசங்கியம் இருக்கப் போகிறதே என்று பயப்படவில்லைதான். என் வாழ்வில் உள்ளதை மறைத்து வைத்துக்கொண்டு இப்படிப் பேசுவதுதான் சிரமமாக இருக்கிறது எனக்கு. புலன் ஈடுபாட்டில் ஒன்றைப்பற்றி ஒளிவு மறைவில்லாமல் பேசுகிருேம்; மற்றென்றைப் பற்றி மறைத்து மறைத்துப் பேசுகிருேம். மனிதன் செய்கிற ஒவ்வொரு காரியத்தைப்பற்றியும் ஒளிவு மறைவில்லாமல் பேசத் தெம்பு இன்றுள்ள மனிதர்களுக்கு இல்லை. ஹிந்துக்களின் சட்டமியற்றிகள் மனிதனின் மிகவும் முக்கியமான தினசரி அலுவல்களையெல்லாம் சொல்லி, எந்தெந்த சந்தர்ப்பங்களில் எப்படி எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று விவரித்திருக்கிருர்கள்; அசங்கியமானது, மறைக்கப்படவேண்டியது

என்று நாம் நினைப்பதைப் பற்றிக்கூட அவர்கள் மறைவாகப் பேசவில்லை.

ஒவ்வொரு மனிதனும் தன் உடல் என்னும் கோயிலை நிர்மாணிக்கிறவன். அதைப் புனிதமாக வைத்துக்கொள்ள வேண்டும். அவன் துதிக்கிற கடவுள் வந்து குடியேற வேண்டிய கோயில் அதுதான் என்பதை அவன் உணர்ந்து வாழவேண்டும். நாம் அனைவரும் சிற்பிகள், ஓவியர்கள். நம் சொந்த சதை, ரத்தம், எலும்பு ஆகியவற்றைக் கொண்டே நாம் வேலை செய்யவேண்டும். உன்னதச் செயல் எதுவும் உடனே மனிதனின் முகத்தை அழகு படுத்துகிறது; அற்பத்தனமான செயல், விகாரப் படுத்துகிறது. உடலில் தூங்கிக்கொண்டு கிடக்கும் சக்திகளை எழுப்பி மனிதன் தேவனாக முயலவேண்டும். ஆனால் இந்த நிலையை விட்டு மேநிலை எய்த அவனுக்குள்ள வழிகளிற் சிறந்தது என்ன? தான் ஒரு மிருகம் என்பதை மறந்துவிட்டு, திட மனத்துடன் அவன் தன்னை ஒரு மனிதனாக்கிக்கொள்ளப் பாடுபடுவதுதான் அவன் மேநிலை எய்துவதற்குச் சிறந்த வழி.

## உடன் வசிக்கும் ஜந்துக்கள்

எனக்குள் கவியும் துறவியும் விவாதங்கள் நடத்துகிறார்கள். சாதாரணமாக மீன் பிடித்துக் கொண்டிருக்கும் போது தான் இந்த விவாதம் உக்கிர நிலையை எட்டும். துறவி உலகில் மனிதர்கள் என்னென்ன காரியங்களில் ஈடுபட்டுக் காலத்தை வீண் செய்கிறார்கள் என்று கவலைப் படுகிறான். கவியோ அவர்கள் எதையைச் செய்யவில்லை என்று அடுக்குகிறான். துறவி மனிதர்களின் விரோதி; கவி இயற்கையின் நண்பன். இருவரும் நடத்துகிற சுவா

ரசியமான விவாதம் போதுமான மீன் பிடித்தானவுடன் நின்று விடுகிறது. ஸ்வர்க்கம் வேண்டுமா, மீன் பிடிக்கப் போகிருயா என்று கேட்டால், எது வேண்டும் என்று சொல்வது சிரமம்தான். ஆனல் விஷயம் அறிந்த துறவிக்கு மனிதர்களிடையேயும் காண்பதற்கு, கற்று அறிவதற்கு சுவாரசியமான விஷயங்கள் பல இருக்கத்தான் இருக்கின்றன.

நம் அண்டை அசலில் வசிக்கும் ஜந்துக்கள் ஏன் இப்படி நம் தோழர்களாக இருக்கின்றன! வேறு ஜந்துக்கள் எதுவும் இல்லாமல் இவை மட்டும் இருப்பானேன்? தனக்கு லாபம் தருவதற்காக மட்டும் ஜந்துக்களை உபயோகப்படுத்திக் கொள்கிற மனிதன் செய்வதுதான் சரியான காரியமா?

என் வீட்டில் இருந்த எலிகள் சாதாரண எலிகள் அல்ல. வேறு இடங்களில் காணுத ஒருவகையைச் சேர்ந்தவை. ஒன்றைப் பிடித்து நான் ஒரு விஞ்ஞானிக்கு அனுப்பிக் கூடப் பார்த்தேன். அவை என் கையிலிருந்து பயமில்லாமல் உணவு எடுத்துச் சாப்பிடும். அவற்றில் ஒன்று வேளாவேளைக்கு என்னுடன் உணவு கொள்ள வந்து விடும்.

என் வீட்டையும் மரங்களையும் சுற்றிப் பல பறவைகள் கூடு கட்டிக்கொண்டு குடியேறின. அவற்றின் பழக்க வழக்கங்களை யெல்லாம் நான் அன்புடன் கவனித்து மனத்தில் இருத்திக் கொண்டேன். குஞ்சு பொறிக்கும் பறவைகள் தங்கள் குஞ்சுகளிடம் எப்படியெல்லாம் நடந்து கொள்கின்றன என்று கவனிக்க எனக்கு அவகாசம் நிறைய இருந்தது—சந்தர்ப்பங்களும் நிறையவேயிருந்தன.

ரகசியமாகக் காடுகளில் எத்தனை எத்தனை வகை ஜந்துக்கள் வாழுகின்றன என்று எண்ணிப் பார்க்கும்போது

ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. மனிதனையே பார்க்காத ஆட்டர்கள் இங்கு மனிதக் குழந்தைகளைப் போல நாலு அடி நீளத்துக்கு வளர்கின்றன. நான் ஓய்வு எடுத்துக் கொள்ள நின்ற நேரமெல்லாம் காட்டு வாசிகளில் ஏதாவது ஒன்று என் கவனத்தைக் கவரும். அணிலைச் சொல்வதா? மரங்கொத்திகளைச் சொல்வதா? டார்டில் புருக்களைச் சொல்வதா? ஒரு நிமிஷம் அசையாது உட்கார்ந்திருந்தால் போதும்; காட்டு ஜந்துக்கள் எல்லாம் வந்து என்முன் காக்ஷியளிக்கத் தொடங்கிவிடும்.

சிவப்பு எறும்புகள் இரண்டு பிரும்மாண்டமான போராட்டம் நடத்துவதைப் பார்த்திருக்கிறேன் நான். ஒரு எறும்புச் சேனை இன்னொரு எறும்புச் சேனையுடன் போரிடுவதைப் பார்த்திருக்கிறேன். நான் என் ஆயுளில் கண்டிருக்கிற சண்டை, போர் அது ஒன்றுதான்; கறுப்பு எறும்புகளும் சிவப்பு எறும்புகளும் ஒரு சாம்ராஜ்யத்துக்காக அங்கு போரிட்டன. குடியரசின் சேனைகளும், சக்கரவர்த்தியின் சேனைகளும் அங்கு போரிட்டன—சாவு அல்லது வெற்றி என்கிற பாவனையில் அவை போரிட்டன. ஹோமர் தோன்றவேண்டும் இந்தக் காவியத்தை உரியபடிப் பாட. சரித்திரத்தில் இடம் பெறாத சண்டைதான் இது என்றாலும் அதன் போக்கும் இந்த உலகத்தை ஓரளவு மாற்றி யமைத்ததுதான். அவையும் ஒரு கொள்கைக்காகத்தான் யுத்தம் செய்தன—வேறு என்ன? எதற்காகச்சண்டையிட்டன, போரின் முடிவு என்ன ஆயிற்று. எந்தக் கக்ஷி ஜயித்தது என்பது எனக்குத் தெரியாது; எனினும் அந்தப் போராட்டம் ஒருநாள் முழுவதும் என் கவனத்தைக் கவர்ந்தது.

ஒரு குச்சியிலிருந்த மூன்று எறும்புகளை வீட்டுக்கு எடுத்துப் போய் ஒரு கண்ணாடி டம்ளர்க்கடியில் வைத்துவிட்டு அந்த எறும்புகளில் இரண்டு ஒன்றுடன் யுத்தம்

செய்ததைக் கவனித்தேன். ஒற்றை எறும்புதான் ஜயித்தது—ஆனால் அதன் காலும் சண்டையில் நொண்டியாகிவிட்டது. போர் முடிந்ததும் அதை விட்டுவிட்டேன் நான். அது உடம்பு தேறி மீண்டும் சண்டைபோட்டதா? எறும்பு சர்க்காரிடம் பென்ஷன் பெற்றுக் கொண்டு நொண்டியாகவே உயிர் வாழ்ந்ததா என்பது எனக்குத் தெரியாது.

வீட்டுப் பூனைக்கும் கூடக் காட்டிலே சில சமயம் ஏதாவது வேலையிருக்கும் போலத் தெரிகிறது. நான் இந்தப் பிரதேசத்தில் பூனைகளைப் பார்த்திருக்கிறேன். "பறக்கும் பூனை" என்று சொல்லப்பட்ட ஒரு பூனையைத் தேடிக் கொண்டு போனேன்; அது வேட்டைக்குப் போயிருந்ததால் அதை நான் பார்க்கமுடியவில்லை. அதன் இறக்கைகள் இரண்டு என்னிடம் இருக்கின்றன: பூனையோ அது அல்லது வேறு ஏதாவது பறக்கும் இனமோ—எனக்கு நிச்சயமாகத் தெரியாது. கவிகளுக்குப் பறக்கும் பூனைகளும் பறக்கும் குதிரைகளும் தான் தேவை என்று எனக்குத் தோன்றுகிறது.

இலையுதிர் காலத்தில் சிரிக்கும் லூன் குளத்தின் கரைக்கு வந்து சேருகிறது. அந்தக் காட்டுப் பறவையைச் சுடுவதற்குத் தயாராகப் பலர் வந்து அங்கும் இங்கும் ஒளிந்துகொண்டு துப்பாக்கி சகிதம் காத்திருக்கிறார்கள். சில சமயம் லூன் அவர்கள் கண்ணில் படாமல் தப்பிவிடும். நான் அதைத் தொடர்ந்து பிடிக்கச் செய்த முயற்சிகள் பயனளிக்க வில்லை. படகில் தொடர்ந்து போனால் அது தண்ணீருக்குள் மூழ்கிவிடும்; மழை பெய்யும்போது குளத்தில் வேறு ஒரு மூலையிலிருந்து தப்பிப் பறந்துபோய் விடும். அதன் சிரிப்பு என்னைக் கேலி செய்வது போல இருக்கும். தண்ணீருக்குள் நீந்தித் தப்புவதில் மிகவும் வல்ல லூன்களை என்னால் பிடிக்கவே முடியவில்லை. மீன்

கள் ஜலத்துக்கடியில் தங்களுடன் போட்டி போடும் இந்தப் பறவைகளைப் பற்றி என்ன நினைத்திருக்கும் ? அந்தச் சிறிப்புச் சப்தம் மட்டும் காதில் விழாவிட்டால் அது எந்தப் பக்கத்தில் இருக்கிறது என்றுகூட என்னுல் கண்டு கொள்ளமுடியாது. அந்தச் சிரிப்புச் சப்தம் சில சமயம் சாதாரணமாகவும், சில சமயம் காடு பூராவும் எதிரொலிக்கும் படியாகவும் கேட்கும் ஒருதரம் நான் அதைப் பிடித்து விடுகிற தருவாயில் இருந்தேன். ஆனுல் அது நீண்ட குரல் கொடுத்தது. லூன்களின் கடவுள் அதன் குரலுக்குச் செவி சாய்த்ததுபோல அந்த நிமிஷமே மழையும் பெய்யத் தொடங்கிவிட்டதால், அதை நெருங்கி என்னுல் பிடிக்க முடியாமல் போய்விட்டது.

வாத்துகள் கூட்டம் கூட்டமாகப் பறந்துவந்து வால்டன் ஏரியின் மத்தியிலே சுற்றிச் சுற்றி வரும். வால்டன் குளத்தை என்னைப் போலவே அவையும், எவ்விதமான பயனையும் கருதாமல், நேசிக்கின்றன என்று எண்ணினேன் நான். இல்லாவிடடால் எதற்காக அவை அங்கே வரவேண்டும் !

## முடிவுரை

**நோ**யாளிகள் இடம் மாறினுல் நல்லது என்று டாக்டர்கள் சொல்கிருர்கள். இதுதான் நம் உலகம் என்று இருந்துவிட்டால் சிரமமாக இருக்கும். வேறு இடங்களில் உலகம் விரிந்து கிடக்கிறது என்பது பற்றி நாம் கடவுளுக்கு நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளோம். நியூ இங்கிலாந்து பிரதேசத்தில் இல்லாததும் உண்டு; இங்கு பக்ஜ கிடையாது; கோவில் பறவையும் அருமையாகத் தான் இங்கு காணப்படும். காட்டு வாத்து நம்மை

விட்டுச் சிறந்த உலகவாசி. காலைச் சாப்பாடு அதற்கு கனடாவில். மதியத்துச் சாப்பாடு ஒஹியோவில்; இன்னும் தெற்கே எங்கேயாவது மலைச்சரிவில் மாலையில் அடங்குகிறது. எருமை கூடப் பருவத்துக்குத் தக்க மாதிரி ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்குப் போய்விடுகிறது. நாம் என்னடா என்றால் வீட்டைக் கட்டிக்கொண்டு, வேலிகள் போட்டுக்கொண்டுவிட்டால் போதுமானது, நம் விதி அதுதான் என்று தீர்மானித்து விடுகிறோம். நகரக் குமாஸ்தாவாக உனக்கு வேலை கிடைத்து விட்டதானால் நீ எப்படி இங்கிருந்து வெளியேற முடியும்? வேறு எங்கு போகிறாயோ இல்லையோ, எரியும் நரகத்துக்கு போய்விடுவாய் என்றுதான் தோன்றுகிறது.

ஆனாலும் உயிரும் உற்சாகமுமுள்ள பிரயாணிகள் மாதிரி நாம் இடம் விட்டு இடம் போகவேண்டுமே தவிர, இங்கும் அங்கும் துரத்தி வேலை வாங்கப்படுகிற அசட்டு அடிமைகள் போலப் போகக் கூடாது. பூமியில் எதிர்ப் பக்கம் என்பது தமக்குச் செய்தியனுப்புபவனின் இருப்பிடம். மேலெழுந்த வாரியான ஒரு வேகத்தில், சுற்றிச் சுற்றிவருவது தான் டாக்டர்கள் நம் சரும வியாதிகளுக்குத் தரும் ஔஷதம். ஒட்டைச்சிவிங்கியைத் தேடிக் கொண்டு தென்னாப்பிரிக்கா போகிறார்கள்; மற்றும் பிரபுக்கள் பறவைகளையும் இங்கு சுடுகிறார்கள். உன்னையே வேட்டை யாடிச் சுட்டுக் கொள்வதென்பது இதெல்லாவற்றையும் விட மேன்மையான வேட்டை என்று எனக்குத் தோன்றுகிறது. "உன் கண்ணை உனக்குள் செலுத்து. இதுவரை விளங்காத எத்தனையோ பிரதேசங்கள் உனக்குள்ளேயே இருக்கின்றன. பிரயாணம் செய். உன் உலகை நீயே கண்டுபிடித்துக் கொள்." ஆப்பிரிக்கா என்ன? மேல் நாடு என்ன? நம் உலகே இன்னும் அறியப்படாதது என்பதற்கு அடையாளமாக

வர்ணமே தீட்டப்படாமல் இல்லையா? கண்டுபிடித்த பிறகன்றே வர்ணம்தீட்ட முடியும்! பயத்தில், உன்னையே கண்டுகொண்டு, உன் நிறம் கறுப்பா மஞ்சளா சிவப்பா என்று கண்டுகொள்ள நீ முயல்வது மிக அவசியம். உன் ஆறுகளிலும் கடல்களிலும் தைரியமாகக் கப்பல்களை ஓட்டிச்சென்று மலையையும் பள்ளத் தாக்கையும் மேடு பள்ளங்களையும், வானமளாவும் காடுகளையும் வயல் வரப்புகளையும் கண்டுகொள். மாமிசத்தைக் காப்பாற்றுவதற்காக மட்டும் தான் காப்பாற்றப்படும் மாமிசம் கண்டு பிடிக்கப்பட்டதா என்ன? புதுக் கண்டங்களை உன்னுள்ளே காணும் புதுக் கொலம்பஸாக இருப்பாயாக. ஜாதன் சாம்ராஜ்யம் உன் ராஜ்யத்தை விட மிகச் சின்னது; ஜசால் செய்த ஒரு ஆஸனம் அது; அழிந்துவிடும். சுயமதிப்பு அற்றவர்களும் கூடத்தான் தேசபக்தர்களாகிவருகிறார்கள். கல்லறைகள் இருக்க வேண்டிய மண்ணை நேசிக்கும் மனிதர்கள், அந்த மண்ணுக்கு உயிர் தரும் தங்கள் ஆத்மாவை ஏன் நேசிப்பதில்லை? தேசபக்தி என்பது மனிதன் மூளையைப் புழுப் போல அரிக்கிறது. தென் கடல் காணச் சென்ற கப்பல்களின் தாத்பர்யம் தான் என்ன? நாமும் நம் திடல்களை, நம் தீவுகளைத் தீவிரமாக ஆராய்ந்து கண்டு கொள்ள வேண்டும் என்பதே அதன் படிப்பினை. ஆனால் தனிமையில் இந்தக் குறுகலான பாதையில் போய் எதையும் தாண்டுவதைவிட ஆயிரம் மைல்கள் ஐநூறு மனிதர்களுடன் போய் எல்லாக் கஷ்டங்களையும் சமாளிப்பது சுலபமான காரியமாகத் தோன்றுகிறது அவர்கள் சுற்றியலைந்து அன்னியப் பேர்களான ஆஸ்திரேலியர்களைக் காணட்டும். அவர்கள் பாதை பெரிது. என்னிடம் உள்ளதோ கடவுளின் ஒரு பகுதி. அதைப் பாதுகாப்பதில் நான் கவனம் செலுத்துவேன்.

ஜான்ஸிபாரில் எத்தனை பூனைகள் இருக்கின்றன என்று எண்ணிக் கணக்கிடுவதற்காக உலகைச் சுற்றி வருவதில் அர்த்தமில்லை. வேறு நல்ல காரியத்தில் ஈடுபட முடிகிற வரையில் மனிதன் இதையாவது செய்து கொண்டே தானே இருக்க வேண்டியதாக இருக்கிறது. உள்ளே பிரவேசிக்க இப்படிச் சுற்றிச் சுற்றி வந்தால் ஏதாவது குறுக்கு வழி ஏற்பட்டாலும், ஏற்படலாம். பூகோளப் படத்தில் காணப்படுகிற கண்டங்கள், தீவுகள், கடல்கள் நாடுகள், நகரங்கள் எல்லாம் உனக்குள்ளேயும் இருக்கின்றன. இந்தியாவுக்கு நேர் வழி வேண்டுமா ? உனக்குள்ளேயே தேடு. பிரச்னைகள் எல்லாவற்றையும் தீர்க்க வேண்டுமா? பாஷைகள் எல்லா வற்றையும் கற்க வேண்டுமா ? இது வரை கடலோடியவர்கள் போனதையெல்லாம் விட அதிக தூரம் போக வேண்டுமா ? எங்கும் சுதேசியாக வாழ வேண்டுமா ? உன்னையே தேடி அறிந்து கொள். கூர்மையான கண்ணும் தெளிவான சிந்தையும் அளவற்ற தைரியமும் தேவை இதைச் சாதிக்க. இதில் தோற்றவர்கள் தான் யுத்தம் செய்ய ஓடுகிறார்கள், இல்லாத தைரியத்தை வரவழைத்துக் கொள்வதற்காக. மேற்கு நோக்கிக் கிளம்பு, இரவு பகல் போகட்டும்; தேய்ந்த சீனாவும் ஜப்பானும் தாண்டட்டும்; மிஸிஸிபி ஆறும் பசிபிக் சமுத்திரமும் கடக்கட்டும்; பூமியே அழிந்து இல்லாமற் போகட்டும்—அந்த அளவில் உன் உள் பயணத்தைத் தொடங்கு.

தெருக்கொள்ளைக்காரனாக இருப்பவனுக்கு எவ்வளவு தைரியம் தேவை என்று அறிந்து கொள்வதற்காக மிராபோ கொஞ்ச காலம் கொள்ளைக்காரனாக இருந்தானாம். "சமூகத்தின் ஸ்திரமான விதிகளை எதிர்த்துக் கொள்ளையடிப்பதற்கு ஒரு போர் வீரனையும் விட அதிக தைரியம் வேண்டும்" என்றான் அவன். "மதிப்பு, மதம்,

என்பதெல்லாம் திடமான ஒரு சித்தத்தையும் ஆசையையும் எதிர்த்து நிற்காது." இதைக் கண்டு கொள்ள ஒருவன் கொள்ளைக்காரனாகப் போக வேண்டியதில்லை. சாதாரணமாகவே அறிவாளியான ஒவ்வொருவரும் "சமூகத்தின் ஸ்திரமான விதிகள்" என்று சொல்லப்படுவதை எதிர்த்துப் போராடியே தீர வேண்டியதாகத் தான் இருக்கிறது. ஏனென்றால் இந்த விதிகள் இயற்கையின் விதிகளுக்கும், என் சுபாவத்தின் விதிகளுக்கும், என் ஆத்மாவின் விதிகளுக்கும் முரண்பட்டவையாக இருக்கின்றன. நியாயமான ஒரு சர்க்கார்—அப்படி என்று உலகில் ஒன்று உண்டானால்—அதை வேண்டுமானால் எதிர்க்க வேண்டிய அவசியம் இல்லாதிருக்கலாம், மற்றப்படி ஸ்திரமான விதிகள் பலவற்றை மீறியேயாகவேண்டும் ஒவ்வொரு மனிதனும்.

ஒரு நல்ல காரணத்துடன் தான் காட்டில் வசிக்கப் போனேன் நான். ஒரு நல்ல காரணத்துடன் தான் வெளியேறினேன். இதே போன்ற பலவிதமான சந்தர்ப்பங்களில் வாழ்ந்து பார்க்கவேண்டும் என்று ஆசை ஏற்பட்டது எனக்கு. வேறு பலதரப்பட்ட வாழ்வுகளை ருசிக்கப் பிறகு காலம் அகப்படாது என்று நகர்ந்து கொண்டேன். மனிதர்கள் எல்லோரும், தெரிந்தும் தெரியாமலும் ஒரே தேய்ந்த பாதையில் நடப்பது என்று வைத்துக் கொண்டுவிட்டோம். நான்வால்டனில் மிதித்த பாதை இன்னமும் இருக்கிறது. புதுசாக நானாக ஏற்படுத்திக் கொண்டதுதான் என்றாலும் இப்போது அது பழகிய பாதையாகிவிட்டது. மனிதன் காலடி படும் இடமெல்லாம் பாதைகளாகி விடுகின்றன—எனினும் ரொம்பப் பேர் தங்களுக்கென்று புதுப்பாதைகள் வகுத்துக்கொள்ள பயப்படுகிறார்கள், மரபு, ஒத்து வாழ்வது என்கிற பாதைகள் தேய்ந்து போனவை—அவை எங்கும் போய்ச் சேருவ

தில்லை. மாளாத வழி அது. அந்த வழிகளிலே நடந்து மரங்களையும் பூக்களையும் இயற்கையையும் மறந்துவிட நான் தயாராக இல்லை; சூரியனையும் சந்திரனையும் மறந்து விட்டு வாழ்வதும் ஒரு வாழ்வா?

நம்பிக்கையுடன் நாம் காண்கிற கனவுகள் நோக்கி நாம் நடந்தோமேயானால், எண்ணியபடி வாழ்க்கை நடத்த முயன்றால், சாதாரண நேரங்களில் எதிர்பார்க்க முடியாத வெற்றியை நிச்சயம் அடையலாம். கண்ணுக் குப் புலனாகாத ஒரு எல்லைக்கோட்டை மிதித்துத் தாண்டி உலகின் சரித்திரத்திலே தனக்கென்று ஒரு இடம் ஏற்ப டுத்திக் கொள்ளுகிறான் அவன். வாழ்க்கை வழிகளைப் போலவே விதிகளும், புதுசு புதுசானவை, தனக்கென்று பலிக்கக் கூடியவை பல அவனுக்குப் புலனாகின்றன. பழைய விதிகள், தவிர்க்க முடியாவை என்று இதுவரை எண்ணியவை விரிந்து கொடுக்கின்றன. எளிய வாழ்விலே தான் தெரியவருகிறது—பிரபஞ்சத்தின் எளிமையும். தனிமை என்பது தனிமையே யல்ல; இயற்கை யன்னை உனக்காக எத்தனையோ உயிர்களை உயிர்ப்பித்திருக்கிறாள். ஏழ்மையும் உண்மையில் ஏழ்மையல்ல; பலஹீனமே பலம் என்றுகூட அந்த நிலையில் சொல்லத் தோன்றிவிடும்.

நீ சொல்வதை யார் புரிந்து கொண்டால் என்ன, புரிந்து கொள்ளாவிட்டால் என்ன? மனிதர்களோ தவளை களோ இதைப் பின்பற்றி வாழ்க்கை நடத்த முடியாது. இயற்கையைப் புரிந்துகொள்ளச் செய்கிற முயற்சிகள் எல்லாம் எவ்வளவு தூரத்துக்குப் பலிக்கின்றன? புரிந்து கொண்டும் எல்லோரும் ஒருங்கே அசடாக இருப்பதும் தான் மனிதனின் வாழ்க்கை லக்ஷியமா என்ன? என்றால் எவ்வளவு விரிவாய்ப் பேசமுடியும் என்பது நான் எந்தச் சூழ்நிலையில் வசிக்கிறேன் என்பதைப் பொறுத்தது. உல கில் வெகுதூரம் திரிகிற மிருகங்கள் உண்டு. அதற்காக பசு

மாடு பால்குவளையை உதைத்துத் தள்ளிவிட்டு, வேலி யைத் தாண்டி ஓடி ஊர்மேய்ந்துவிட்டு வரவேண்டும் என்கிற அவசியம் உண்டா என்ன? மனிதர்கள் சொல் கிற மாதிரி சங்கீதத்தைப் புரிந்து கொள்ள முடிகிறதா? எதிர் காலத்தை உத்தேசித்தாவது இன்றையக் காரியங்கள் சற்றே புரியாதவையாக இருப்பதில் தவறு ஒன்றும் இல்லை என்றுதான் முடிவு கட்ட வேண்டியதாக இருக்கி றது. நிழல் என்பது என்ன? உடலில் வழியும் வியர்வை போல அதுவும் ஒன்றுதானே? என் நிழல் எனக்குப் புரியவில்லையே என்று கேட்பார் யாராவது உண்டோ? பாஷையில் உண்மையை மொழி பெயர்க்க முடியாது; உண்மை உண்மையாக இருந்துதான் மனிதர்களை ஆள முடியும். நமது கொள்கைகளையும் நம்பிக்கையையும் வெளியிடுகிற வார்த்தைகள் அவ்வளவாகப் புரிகிற வார்த் தைகள் அல்லதான். ஆனால் அவை அர்த்த முள்ளவை யாகவும் கனம் உள்ளவையாகவும் தான் இருக்கின்றன அறிவுள்ளவர்களுக்கு.

கீழ் மட்டத்தை அளந்து அதுதான் அறிவு வளர்ச்சி என்று சொல்வது சரியல்ல. சாதாரண அறிவு தூங்குகிற மனிதன் அறிவு: அதாவது குறட்டைச் சப்தம்தான் அது, அரை அறிவுள்ளவனுக்கும் ஆறறிவுள்ளவனுக்கும் வித்தி யாசம் உண்டு என்பதை ஒப்புக்கொள்ள மறுப்பவர்களை நாம் என்ன செய்யமுடியும்? நமக்கு புரியாத பாஷை பேசுகிற அறிவாளியை அறிவாளி யல்ல என்று நாம் ஒதுக்கினால் அது யாருக்கு நஷ்டம்? கபீ ரின் வார்த்தைகளில் நாலு தினுசுக்கான அர்த்தங்கள் தொனிப்பது அவற்றின் பெருமை என்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன். இங்கே நம்மிடையே வார்த்தைகளில் ஒரு அர்த்தம்கூட முழுசாகத் தொனிக்கக் கூடாது என்கி றார்கள். உருளைக்கிழங்கு அழுகுவதைத் தடுக்க இங்கிலாந்

தில் ஏதேதோ கண்டுபிடிக்கிறார்கள் ; மனிதனின் மூளை அழுகிப் போகாமல் தடுப்பதற்கு ஏதாவது யாராவது கண்டு பிடிக்கக் கூடாதா ?

புரியாது என்கிற எல்லையை எட்டிவிட்டதாக நான் பெருமைப்பட்டுக் கொள்ளவில்லை. ஆனால் இதை விடப் பெரிய குற்றம் எதுவும் என் எழுத்தில் கண்டு பிடிக்கப்படாமல் இருந்தால் எனக்குத் திருப்திதான். வால்டன் குளத்தின் ஐஸ் நீலமாக இருந்தது பலருக்குப் பிடிக்கவில்லையாம். கேம்ரிட்ஜ் ஐஸ் நன்றாக இருந்தது. இது புல் பூண்டு நாற்றம் அடித்தது எனினும் கலர் வெண்மையாக இருந்ததால் பிடித்ததாம். வானத்தின் நீலம் நல்ல வர்ணமல்ல; உலகில் ஆட்சி செலுத்தும் பனி மூட்டம் நல்ல வர்ணம் என்று சொல்பவர்தான் இன்னும் மனிதர்களில் பெரும்பாலோர்.

இன்று இந்தக் காலத்தில் அமெரிக்கர்கள் பழங் காலத்து மக்களுடனும் அறிவில் பண்டைகாலத்து மனிதர்களை விட தாழ்ந்தவர்கள், எலிஜபத் காலத்து மனிதர்களை விடவும் தாழ்ந்தவர்கள் என்று பலர் திரும்பத் திரும்பச் சொல்லுகிறார்கள். அதனால் என்ன உபயோகம்? இறந்து விட்டவர்களின் பெருமையை எண்ணி அழுவானேன். செத்த சிங்கத்தைவிட உயிருள்ள நாய் மேலானது குள்ளர்கள் வம்சத்தில் பிறந்ததற்காக ஒரு மனிதன் தற்கொலை செய்து கொள்வது அவசியமில்லை. குள்ளர்கள் மத்தியிலே பெரிய மனிதனாக இருக்க அவன் முயலலாமே !

வெற்றி என்கிற மோஹினியை, எத்தனையோ சந்தேகாஸ்பதமான வழிகளில், நாம் ஏன் இப்படித் தேடி அலைகிறோம் ? வெற்றி காண நாம் விரும்பித் தொடங்கும் முயற்சிகள் எப்படிப் பட்டவை ? ஒரே

சீராக ஒரே வழியில் தான் எல்லோரும் நடை பயில வேண்டுமா? தன் உள் இச்சையைத் தொடர்ந்து ஒவ்வொரு மனிதனும் வாழ்வதில் என்ன தவறு? மரம் வளருகிற மாதிரி மனிதனும் வளர்ந்து காய்த்துப் பழுக்கத் தான் வேண்டும் என்கிற அவசியமே இல்லை. வசந்தத்தை மற்றவர்களுக்காக ஏன் நாமும் கோடையாக மாற்றிக் கொள்ளவேண்டும். உண்மைக்கு மாற்றுக் கண்டு கொண்டு அதைப் பிடித்துக்கொண்டு வாழ எந்த மனிதனும் முடியாது. நியாயமற்ற, பிறர் உண்மையிலே நம் கப்பலை மோதவிட்டு, உடையவிட்டு, நிற்பானேன்? வானத்து நீலம் இருக்கும்போது, வானத்தை நீலமாக்க ஒரு கண்ணாடி தயார் செய்வானேன்?

கௌரு என்கிற நகரில் ஒரு கலைஞன் இருந்தான். அவன் எதையும் பரிபூரணமாகச் செய்பவன். காலத்துக்குப் பயந்து அவசரமாக எதையும் செய்ய மாட்டான். காலம் தனக்கு அடங்க மறுத்த அவனைக் கண்டு அடங்கி பயந்து ஒதுங்கியது. அவன் ஒரு கழி தயார் செய்வது என்று தீர்மானித்தான்; சாதாரணக் கழியல்ல— கழிகளிலே லக்ஷயமானது. பூர்ணமானது. அதற்கு மரம் தேடி அவன் செல்கிறான். இதற்குள் அவன் நண்பர்கள் மறைந்து விட்டார்கள் அவன் கழியைக் கண்டு தயார் செய்யும்போது கௌரு என்கிற நகரமே அழிந்து விட்டது. அதைச் சீவி வேலை செய்யத் தயாராக்கும் போது வேறு நகரில் காண்டகார் வம்சத்து ராஜாக்கள் தோன்றி, சாம்ராஜ்யம் ஸ்தாபித்து அழிந்தும் போய் விட்டார்கள். அந்த ராஜ வம்சத்தின் கடைசிப் பெயரை அவன் மணலில் எழுதி வைத்தான். வழ வழவென்று சீவி, கழியைத் திருப்திகரமாக வேலைப்பாடுகள் ஏற்க அவன் தயார் செய்வதற்குள். காலம் மாறி புதுத் துருவ நக்ஷத்திரம் ஏற்பட்டு விட்டது உலகுக்கு. பூண்போட்டு

மேலே பிடியில் மணியும் வைத்து அவன் இழைத்துக் கொண்டிருக்கும்போது புதுசாகப் பட்டத்துக்கு வந்த பிரம்மா வந்து பார்த்தார். ஒரு வழியாக வேலே முடிந்து விட்டது. உலகில் அதற்கு ஈடாகச் சொல்லும்படியாக ஒரு வஸ்துவும் இல்லே. ஒரு கழியைத் தயார் செய்வதிலே கலேஞன் ஒரு புது உலகத்தையே சிருஷ்டித்து விட்டான்—ஒரு புது உலக விதியைச் சிருஷ்டித்து விட்டான். காலம் போனது எல்லாம் பொய்; இருந்தது அவனேப் பற்றிய வகையில், அவன் சிருஷ்டி ஒன்றுதான். சிருஷ்டி வேகம் அவனேத் தாக்கி இயங்கச் செய்தது ஒரே ஒரு விநாடிதான் என்று அவன் எண்ணினுன். தக்க பாத்திரமாக இருந்தான் அவன்—லக்ஷியமும் இருந்தது. அவன் சிருஷ்டியும் மஹோந்நதமாக இல்லாமல் எப்படிப் போகும்?

உண்மை என்பது போல எந்த வேஷமும் பலிக்காது நாம் இங்கு இருக்கிறேமா? இல்லவே இல்லே—உண்மையே நிலேத்திருக்கும். ஒரு பொய்யில், பொய்யாக இருக்கிறேம். இல்லாத ஒன்றைச் சிருஷ்டித்துக் கொண்டு அதில் குடி போய் விடுகிறேம். சொல்ல வேண்டியதைச் சொல்லாதே—சொல்லலாம் என்று பிறர் அனுமதிப்பதைச் சொல்லு என்று உலகம் ஸ்தாபித்து விடுகிறது.

உன் வாழ்க்கை எவ்வளவு தாழ்மை யானதானுலும் அதை உண்மையாக ஏற்று, உன் சக்திகளின் எல்லேகள் வரையில் அதைப் பூரணமாக வாழ முயல்வது தான் சிறப்பாக வாழ்வதற்கு வழி. நீ தான் கெடுதி தேடுபவன்; வாழ்க்கை என்றும் யாருக்கும் கெடுதி விளேவிப்பதில்லே. ஸ்வர்க்கத்தில் கூடக்குறை கண்டுபிடிப்பவர்களுக்கும் குறைகள் இருந்து கொண்டு தான் இருக்கும். வாழ்வை நேசி—அது தான் வாழச் சிறந்த வகை. ஏழையின் வீடுதியிலிருந்தும் பிரதிபலிக்கிறது சூரியன். உன் வாழ்விலும்

ஆனந்தமயமான நேரங்கள் பல இருக்கும்; அதைப் போற்றி வளர்த்துவா. அமைதியும் போது மென்ற மனமும் படைத்த மனிதன் எங்கும் நிம்மதியாக, நல் வாழ்வு வாழ முடியும். ஏழைகள் என்று சொல்லப்படுபவர்கள் தான் சுதந்திரமான சிறப்பான வாழ்வு வாழ்கிறார்கள் என்று சில சமயம் எனக்குத் தோன்றுகிறது. பொருள் தேடுவதுடன் கவலைகளையும் உடன் தேடிக் கொள்பவன் வாழத் தெரியாதவன். நாணயம் தவறிப் பணம் சேர்ப்பவர்கள், ஏழையாக இருப்பது அவமானம் என்று எண்ணுகிறார்கள். தோட்டத்தில் செடி வளர்ப்பது போல, ஏழ்மையை அறிந்து வளர்ப்பது நல்ல காரியம் என்று எனக்குத் தோன்றுகிறது. துணிகளோ, நண்பர்களோ புதிது புதிதாக வேண்டும் என்று தேடி அலையாதே? பழசையே உபயோகி. அதில் தவறில்லை; திரும்பத் திரும்ப அவை உபயோகப்படும். மாறுவது வெளி விஷயங்கள் அல்ல; நாம் தான் மாறுகிறோம். இதை மறக்காமல் இருப்பது அவசியம். சிந்தனைகளைப் போற்றி வளர்; துணிகள் வாங்க முடியாவிட்டால் பாதகமில்லை. கனவுகளும் கற்பனையும் உள்ள வரையில் நம்மைத் தனிமை பாதிக்காது.'' பெரிய சேனையிலிருந்து அதன் தளபதியைப் பிரித்துவிடலாம். தாழ்ந்த மனிதனிடமிருந்தும் கூட அவன் சிந்தனையைப் பிரித்து அகற்றிவிட முடியாது'' என்றான் ஞானி. தாழ்மையும் தனிமையும் நமக்குக் கடவுளின் வழிகளை விதிகளை நிதரிசனமாகக் காட்டுகின்றன. சின்ன விஷயங்களில் உன் மனதைப் பறிகொடுக்காமல் இருக்க உன் ஏழ்மை உனக்கு உதவும்.

வெண்கலத்தால் ஆனவையோ என்வீட்டுச் சுவர்கள், வெளியே கேட்கிற சப்தங்களில் பெரும்பகுதியை அது எப்படியோ என் காதில் கொணர்ந்து திணித்துவிடுகிறது. அனாவசியமான சுவாரசியமே யற்ற பல விஷயங்களை என்காதில் போடுகிறார்கள் என் சகாக்கள். துணி, மணி பிரபுக்கள், பணக்காரர்கள் என்பது தான் சாதாரணமாகப் பேச்சு. வாத்துக்கு எந்த ஆடை அணிவித்தால் என்ன? அது வாத்துத்தானே? ஊரிலும் உலகிலும் நடப்பதெல்லாம் சொல்கிறார்கள்—சொல்லி விவரித்து விவாதிக்கிறார்கள். அதெல்லாம் பற்றி எனக்கென்ன கவலை. என் உல

கமே வேறு. அதில் நான் என்னைச் சிருஷ்டித்தவனுடன், அவனுக்குச் சரி சமானமாக வாழ்க்கை நடத்த விரும்பு கிறேன். இதற்கு உபயோகப்படக் கூடிய விஷயம் உண்டா உன் பேச்சில்—இல்லாவிட்டால் தள்ளு. மற்ற தெல்லாம் என்னைப் பற்றிய வரையில் பயனில சொல் லாமை தான். எதைக் கொண்டாடுகிறார்கள் மனிதர்கள்? யாரோ தலைவராம் ஏழெட்டு பிரசங்கிகளாம்—பெரிய பெரிய விஷயங்களை அலசி ஆராய்கிறார்களாம். ஒரு தலை வன் தான் உண்டு வாழ்க்கையில் நானும் என் மறுபாதி யும் நடத்துகிற விவாதங்கள் தவிர வேறு எதிலும் என் மனம் செல்லாது: விவாதத்தின் முடிவை நான் பூரண மாகப் பின் பற்றி என் பாதையில் நடக்கத் தயாராக இருக்கிறேன். என் தீர்மானத்தை எவராலும் அசைக்க முடியாது. பிரசங்கிகளின் விவாதங்கள் முடிவற்றவை.

அன்பு, பணம், புகழ் இதெல்லாவற்றையும் விட முக் கியமானதாக நான் உண்மையைக் கருதுகிறேன். உண வெல்லாம் பிரமாதமாகத்தான் இருந்தது—எனினும் உண் மையே இல்லாதவர்களுடன் உட்கார்ந்து சாப்பிட மன மில்லாமல் நான் பட்டினியாகவே வெளியேறி விட் டேன்.

சோம்பேறித்தனமான, புழுத்து அரித்துப்போன குளங்களைப் பாராட்டிக் கொண்டு எதுவும் செய்யாமல் எத்தனை நாள் தான் உட்கார்ந்திருப்பது? நாள் பூராவும் வேலை செய்ய ஆட்களைப் போட்டுவிட்டு, கூலிதந்து கொண்டு, நாமே ஒரு வேலையும் செய்யாமல் உட்கார்ந்து கொண்டிருப்பானேன்? கிருஸ்தவன் என்று மாலையில் மட்டும் தாழ்மையுடன் தருமம் செய்ய வெளிக்கிளம்பி னுல் போதுமா? ஒடிந்து விழக்கூடிய தொங்கும் சுவர் பெருமையைப் போற்றி வளர்த்துக் கொண்டு வாழ்வதும் ஒரு வாழ்வா? நாம் சாகமாட்டோம்—பெரிய காரியங் களைச் சாதித்து விட்டோம்—பெரிய காவியங்கள் பாடி விட்டோம் என்று நாமே நம் முதுகில் தட்டிக் கொடுத் துக் கொண்டு காலந்தள்ளுகிறோம். என் வாசகர்களில் ஒருவர்கூடப் பூர்ணமான திட்டமான ஒரு வாழ்வு வாழ்ந்ததில்லை என்று நிச்சயமாக நான் சொல்வேன். நாம் வாலிப ஜாதியினர். அஸ்ஸிரிய ஞானிகளுடன் ஒப்பிட்டுப்

பார்க்கும்படி இங்கு இன்னும் ஞானிகள் தோன்றிவிட வில்லை. அந்த ஞானிகளே அழிந்தொழிந்து விட்டார்களே! ஏழு வருஷ அறிவைப்பார்த்தோமே தவிர நாம் இன்னமும் தான் காட்டில் பதினாறு வருஷ வெட்டுக்கிளியைப் பார்க்கவில்லை. நமக்குத் தெரிந்ததோ பரந்த பூமியில் ஒரு குறுகலான இடம்தான். ஆறடி உயரம் வெட்டிப்பார்த் ததுமில்லை நம்மில் பலர் ஆறடி உயரம் தாண்டிப் பார்த் ததுமில்லை. எங்கிருக்கிறோம் என்பதே நமக்குப் புரிய வில்லை.

புதுசு புதுசாக அறிந்து கொள்ளவேண்டிய விதங்கள் உலகில் எத்தனை எத்தனையோ இருக்கின்றன—புதிதாக வந்து கொண்டும் இருக்கின்றன, இருந்தும் எட்ட முடி யாத ஒரு அலுப்பு சலிப்புடன்தான் நாம் வாழ்கிறோம். சந்தோஷம் துக்கம் என்பது போன்ற வார்த்தைகள் இருப்பதை மறந்து விடுகிறோம். அவற்றிற்கு வாழ்க்கை யில் அர்த்த முண்டு என்பதைக்கூட நாம் மறந்துவிட்ட மாதிரி இருக்கிறது. நமது உடைகளைத்தான் மாற்ற முடி யும் என்று எண்ணுகிறோம். பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் மரி யாதைக் குரியது, மகத்தானது என்று கேள்விப்படுகி றோம். அமெரிக்கா பலமுள்ள தேசம் என்றும் கேள்விப் படுகிறோம். ஆனால் ஒவ்வொரு மனிதனுக்கும் பின்னால், உள்ளூற எழுந்து அடங்குகிற அலைகளிலே பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் சிறு துரும்பாக மிதக்கும் என்பதை நாம் அறிவதில்லை. பூமியை அழிக்கப் பூமியிலிருந்தே எந்த வித மான வெட்டுக்கிளிகள் தோன்ற முடியும் என்பதை நாம் அறிவோம். உலக ஆட்சி நமது சர்க்காரின் ஆட்சி போன் றது அல்ல, அதன் போக்கு சாப்பாட்டுக்குப் பின் மது அருந்திக் கொண்டு தீர்மானித்து முடிக்கிற விஷயம் அல்ல.

ஆற்றில் உள்ள ஜலம் போன்றது நம் வாழ்க்கை. இன்று அது அதன் கரைகளை யெல்லாம் உடைத்துக் கொண்டு கிளம்பிவிடலாம். இவ் வருஷம் அதன் ஜலங் கள் இதுவரை ஏருத உயரம் ஏறலாம், உலர்ந்த கரை களை யெல்லாம் ஈரமாக்கி அது வளப்படுத்தலாம். நமக் குத் தொந்தரவு தரும் எலிகளை அழிக்க அது உபயோகப் படலாம். நாம் நிற்கும் இந்த இடம் என்றுமே காய்ந்த

தரையாக இல்லை; இதிலே ஒரு காலத்தில் கடல் பரவி யிருந்திருக்கலாம்—அல்லது ஒரு ஆறு ஓடியிருக்கலாம். அது எப்படித் தரையாயிற்று, நாடு ஆயிற்று, நகரம் ஆயிற்று என்பது தான் மனித சரித்திரம். நியூ இங்கி லாந்தில் சமீப காலத்தில் வழக்கில் இருந்த ஒரு கதையை எல்லோரும் கேட்டிருப்பார்கள்—ஒரு பலமான பூச்சி, வண்டு எப்படித் திடீரென்று தோன்றியது: அது எத்தனை வருஷங்களுக்கு முன் இடப்பட்ட ஒரு முட்டை யிலிருந்து வந்தது; மரத்திற்குள் அது சிறைப்பட்டு எத்தனை வருஷம் கிடந்தது என்றெல்லாம் அதை பற்றி பல கேள்விப்பட்டிருப்பீர்கள். இதைக் கேள்விப்பட்ட வர்களுக்கு நித்யத்வம் என்பது மறுபிறப்பு என்பதும் பொய் என்று தோன்றவே தோன்ருது. சமூகம் என்று சொல்லப்படும் செத்த செத்தைகளுக்குள்ளே இது மாதிரி உயிர்படைத்த முட்டைகள் எத்தனை இருக் கின்றனவோ, யார் சொல்ல முடியும்? அவை எந்த நிமிஷமும் உயிர் பெற்று எழலாம் இந்த வண்டு முட்டைக்குள்ளிருந்து வெளிவர முயற்சி செய்து உண் டாக்கும் சப்தம் தான் என்று ஏன் சொல்லக் கூடாது!

ஜானும் ஜனுதனும் இதை யெல்லாம் உணர்ந்து அறிந்துகொண்டு வருவார்கள் என்று நான் நம்பவில்லை. நம்மை எதிர்நோக்கி வரக்கூடிய காலம். லக்ஷ்யமும். இப்படிப்பட்டதாக இருக்கலாம். ஆனால் அது காலத்தால் மட்டும் ஏற்படக் கூடியது அல்ல, காலம் மட்டும் கனவுகளை உண்மையாக்க முடியாது. நம் கண்களை அவிக்கிற வெளிச்சத்தை வெளிச்சம் என்று சொல்லக் கூடாது—அது இருட்டேதான், நாம் என்று விழித்துக் கொள்கிறேமோ அன்றுதான் நாள் பிறக்கிறது என்று சொல்லவேண்டும். இன்னும் உதயமாக வேண்டிய நாட்கள் எத்தனையோ உண்டு. சூரியன் என்பது காலை வெள்ளியே தவிர வேறு அல்ல.

